உ

நமச்சிவாப்யாம்

# தேர்பவனிப் பெருமை

## (ரதோத்ஸவ மஹிமா)

சிவதுதிகள், ஆலயவிழாக்கள், தேரின் உருவவகைகள், தெய்வாம்சங்கள், சடங்குகள், 12 தெய்வங்களின் தேர்பவனிப் பெருமைகள், சேவைப்பயன்கள் இவற்றை விளக்கும் நூல்.



நூலாசிரியர்

ஆகம ப்ரவீணர், வ்யாகரண சிரோமணி

**சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாசார்யார் M.A.,**

வெளியீடு

23-01-2022 ஞாயிற்றுக்கிழமை

சிவாசார்யர் அறக்கட்டளை &

சிவஸ்ரீ ஸாம்பமூர்த்தி சிவாசார்யார் டிரஸ்ட் – சென்னை-1.

உ

திருச்சிற்றம்பலம்

# தேர்பவனிப் பெருமை

## (ரதோத்ஸவ மஹிமா)

**சிவதுதிகள், ஆலயவிழாக்கள், தேரின் உருவவகைகள், தெய்வாம்சங்கள், சடங்குகள், 12 தெய்வங்களின் தேர்பவனிப் பெருமைகள், சேவைப்பயன்கள், இவற்றை விளக்கும் நூல்.**




**நூலாசிரியர்**

ஆகம ப்ரவீணர், வ்யாகரண சிரோமணி, சைவாகமக்ஞ சூடாமணி, சைவாகம வித்வான், வ்யாகரண விசாரதா, சிவாகம ஸார்வபௌம:, சிவஸம்வித் ஸபர்யா பாராவாரீணர், சிவாகம அருட்செல்வர், ஸம்ஸ்க்ருத சேவாரத்தினம், சிவாகம வாசஸ்பதி, வாஸ்து வித்தகர், சைவாகமஸ்ரீ:, ஆகம கல்பத்ரும:, ஆகம வித்தகர், சிவாகம வித்யாரத்னம், சாக்தயாக சாம்ராட், வைதிகசைவ ரக்ஷாமணி, சிவபாத பத்மபூஷணம், சிவாகமக் கலாநிதி. சைவஸமய ஸேவாரத்னம். சைவாகம பரீக்ஷாதிகாரீ, யாக ஸர்வஸாதக திலகம், சாஸ்தாஉபாஸகர், அகோரசிவம் என்கிற

**சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாசார்யார் M.A.,**

**குருமுதல்வர். சைவாகம கலாசார வித்யாகேந்திரம், சென்னை–1.**



**வெளியீடு**

நாள்:23–01–2022, | இடம்:திருவண்ணாமலை திருமணமண்டபம்.

பட்டம். சிவஸ்ரீ. ஸா. ஹாலாஸ்யநாத சிவாசார்யாரின் பவளவிழா.

**சிவாசார்யர் அறக்கட்டளை &**

**சிவஸ்ரீ ஸாம்பமூர்த்தி சிவாசார்யார் டிரஸ்ட் - சென்னை-1.**

## நூல்விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூலின்பெயர், தலைப்பு | : தேர்பவனிப் பெருமை |
| நூலின் துறை | : இந்துசமய ஆகமத்துறை |
| நூலின் வகை | : ஆகமச்சான்றுவழித் தொகுப்புநூல் |
| நூலின் பொருள் | : தெய்வத்தேர்த் திருவிழா |
| நூலின் மொழி | : தமிழ் |
| நூலின் எழுத்து | : தமிழ் எழுத்துமட்டில் |
| நூலாசிரியர் | : சிவஸ்ரீ.வி.சோமசேகர சிவாசார்யர் |
| படத்தொகுப்பு & நூல்வடிவமைப்பு | : சிவஸ்ரீ.வி.சோமசேகர சிவாசார்யர் |
| நூலின் பதிப்புரிமை | : நூலாசிரியருக்கே உரியது. |
| நூல் அளவு | : 8.5" x 5.5" |
| நூலின் பக்கங்கள் | : 176 பக்கங்கள் |
| வெளியீட்டு நூல்வரிசை | : 29 |
| அட்டைப்பட விளக்கம் | : திருத்தேர் தெய்வதரிசனம் |
| முதற்பதிப்பு | : பிலவ வருடம் தை–10ம் நாள் (23–01–2022) |
| அச்சிட்ட எண்ணிக்கை | : 300 பிரதிகள் |
| நன்கொடை அளித்தவர் | : சிவஸ்ரீ ஸாம்பமூர்த்தி சிவாசார்யார் டிரஸ்ட், சென்னை–1 |
| வெளியீடு | : சிவாசார்யார் அறக்கட்டளை, சென்னை–1 |
| வெளியீட்டுவிழா | : பட்டம் சிவஸ்ரீ. எஸ். ஹாலாஸ்யநாத சிவாசார்யரின் பவளவிழா |
| புத்தகத்தின் விலை | : விலை ரூ.300/– |
| அச்சகம் | : ஓம் டிஜி ஒர்க்ஸ், சென்னை–40. |
| புத்தகம் கிடைக்கும் இடம் | : அறக்கட்டளை & நூலாசிரியர்அகம். |
| நூலைபெறத் தொடர்புக்கு | : 98402 99352 / 99402 01849 |

உ
திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி ! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!



# திருமுறைத்துதிகள்

## விநாயகர் துதி

(உமாபதி சிவாசார்யார் அருளியது)



வானுலகும் மண்ணுலகும் வாழ மறைவாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலி செய்கிற்பாம்.

## நால்வர் துதி

(உமாபதி சிவாசார்யார் அருளியது)

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசை கல்மிதப்பில் அணைந்தபிரான் அடி போற்றி
வாழிதிரு நாவலூார் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத் தாள் போற்றி



## அண்ணாமலையார் துதி (தேவாரம்)

(திருஞானசம்பந்தர் அருளிது)

உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம் முழவதிரும்
அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே

பூவார் மலர் கொண்டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங் கள் எரித்த அன்று மூவர்க் கருள் செய்தார்
தூமா மழை நின் றதிர வெருவித் தொறுவின் நிரையோடும்
ஆமாம் பிணை வந் தணையும் சாரல் அண்ணா மலையாரே.

## திருவாசகம் – (மாணிக்கவாசகர்)



விண்ணாளும் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழ் அளிக்கும் தண் பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையா னைப் பாடுதுங்காண் அம்மானாய்.

## திருவிசைப்பா – திருமுறை–9 (சேந்தனார்)

பண் : பஞ்சமம் தாளம் : ஆதிதாளம்



கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மன மணிவிளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டுள்ளம்
குளிர என்கண் குளிர்ந்தனவே.

## திருப்பல்லாண்டு – திருமுறை–9 (சேந்தனார்)

பண் : பஞ்சமம் தாளம் : ரூபகம்

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண்டில் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத்திரள் மேருவிடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதம் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## பெரியபுராணம் – திருமுறை–12 (சேக்கிழார்)

ராகம் : மத்யமாவதி விருத்தம்



மண்ணினில் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர்நல் விழாப்பொலிவு கண்டுஆர்தல்
உண்மையாம் எனில் உலகர் முன் வருக என உரைப்பார்.

## உமாதேவீதுதி

### அபிராமிஅந்தாதி – அபிராமிபட்டர் விருத்தம்



சொல்லும் பொருளும் எனநடமாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே நின் புதுமலர்த் தாள்
அல்லும் பகலும் தொழு மவர்க்கே அழியா அரசும்
செல்லும் தவநெறி யும்சிவ லோகமும் சித்திக்குமே.

## கந்தன்துதி

### கந்தர்அலங்காரம்–அருணகிரிநாதர் விருத்தம்

ராகம் : பந்துவராளி

விழிக்குத் துணை திருமென் மலர்ப் பாதங்கள் மெய்மை குன்றா
மொழிக்குத் துணை முருகா வெனும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும் பயந்த தனி
வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே.

நாள் என்செயும் வினைதான் என்செயும் எனை நாடிவந்த
கோள் என்செயும் கொடுங்கூற்று என்செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே.

## ஆறுமுகன் துதி



ஏறுமயி லேறி விளையாடு முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழிபேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள் வினைதீர்த்தமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணரவந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசல மமர்ந்த பெருமாளே.

## வாழ்த்து (கச்சியப்பசிவாசார்யார்)

ஆறிரு தடந் தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞைவாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளிவாழ்க வாழ்கசீர் அடியா ரெல்லாம். –(கந்தபுராணம்)

உ
குருவருள் துணை

# முகவுரை



சிவாய ருத்ராய சிவார்ச்சிதாய
மஹாநு பாவாய மஹேச்வராய
ஸோமாய ஸூக்ஷ்மாய சுரேச்வராய
சோணாத்ரி நாதாய நமச் சிவாய.

வட்டனை மதிசூடியை வானவர்
சிட்டனை திருவண்ணா மலையனை
இட்டனை இகழ்ந்தார்புரம் மூன்றையும்
அட்டனை அடியேன் மறந்து உய்வனோ —(அப்பர்)

அண்ணாமலையாரின் திருவருளாலும், எமது குருநாதர்களின் அருளாசியாலும், அருணாசல திவ்யக்ஷேத்திரத்தில் ஆதிசைவப் பெருந்தகையின் சதாபிஷேகத்தில் சிவஞான மணம்பரப்பு நூலாக தேவாலய தெய்வத் தேர்பவனிப்பெருமை என்ற புத்தகம் வெளிவந்துள்ளது சைவசமயிகளுக்கு கிடைத்த வரப்ரஸாதமாகும்.

உலகவாழ்வில் மனிதகுல மேம்பாட்டில் சமயமும் ஆலயமும் முக்கியப் பங்காற்றுபவையாய் பிரிக்க முடியாதவாறு பிணைந்துள்ளவையாகும். நம்முள் தோன்றாத் துணையாய் இருந்தவாறு, நமது உடல், புலன்கள், உலகம், அனுபவம் இவற்றை நாம் நுகர்ந்திட உதவிடும் தெய்வத்தை திருக்கோயில்களில் கண்டு, பொதுநலன் கருதி வழிபாடாற்றி மக்கள் பிறவிப்பயனைப் பெற்று வருகின்றனர். தெய்வத்தின் திருமேனியே

திருக்கோயில்கள். ஆவின்பாலை சுரந்தளிக்கும் பசுமடிபோன்று இறையருளை இனிதளிக்கும் இடமே **கோயில்** என்பர் ஆன்றோர். **காயமே கோயில்** என்பார் அப்பர் சுவாமிகள்.

மண்மீது கோயில்கொண்டுள்ள இறைவன், யாவர்க்கும் அருள்தரும் பொருட்டாக எழில்மிக்க விழாக்கோலம் பூண்டு, சிறப்புறு ஊர்தியின்மேல் ஆலயத்தினின்றும் வெளிப்பட்டு, வீதிகளில் எழுந்தருள் செய்வதே **திருவிழாக்கள்** எனப்படும்.

இத்திருவிழாக்கள், மக்களிடையே பாகுபாடற்ற, அன்புமிக்க நல்லெண்ணத்தை உருவாக்கவும், மக்களை ஒற்றுமைபடுத்தி ஆன்மீக உண்மைநிலையை உணர்த்திடவும், மக்கள் பேரருள் பெறவும், தேசத்தின் கலைகள் மற்றும் கலாசாரங்களை வளர்த்துப் பல்லாண்டு காலம் பாதுகாக்கவும் பெரிதும் உதவுகின்றன. பெருவிழாக்களில் பல்வேறு ஊர்திகளில் (வாகனங்களில்) இறைவன் பவனிவருவது நம் உள்ளங்கவரும் கண்கொள்ளாக்காட்சியாகும். அவற்றுள் சிறப்புமிக்கதும், பெருமைவாய்ந்ததும், போற்றப்படுவதும், **தேர்த்திருவிழா** ஆகும். அழகுற அசைந்தசைந்து வீதியில் வீட்டருகே தேரேறிவந்து இறைவன் அருள்செய்வது நாம்பெற்ற பெரும்பேறாகும்.

தெய்வத்தேர் அசையும் கோயிலான அருள்வடிவமேயாகும். **தேர்பவனி** என்பது ஞானக்கிரியாசக்திகளின் உச்சநிலைச்செயலாம். ஸர்வதேவதாஸ்வரூபமான தேரானது ஜீவாத்மா மற்றும் பரமாத்மாவின் தத்துவ நிலையை உணர்த்தும் ஆன்மீக அறிவியல் ஞானக் கலைக் கோயிலாக விளங்குவதாகும். இது ஆன்மீக தத்துவநிலையை உணர்த்துவதாக வேதங்கள் உபநிடதங்கள் ஆகமங்கள் சிற்பசாத்திரங்கள் யாவும் தெரிவிக்கின்றன.

இத்தகைய தெய்வீகத் திருமேனியான **திருத்தேரை** வடிவமைத்திடும் விதிமுறைகளையும், தேவையான உச்சகட்ட **தொழில்நுட்பம், செயல்திறன், கலைநயம்** இவைகளையும், இதன் ஒப்பனையில் உள்ள பல்வேறு **வழிமுறை, நடைமுறைகளையும்** ஆகமங்களும், சிற்பசாஸ்திர நூல்களும், நன்கு தெளிவுபடுத்தியுள்ளன. இதன்படியே தொன்நெடுங்காலமாகவே நம் தேசம் முழுவதும் ஆங்காங்கே ஆலயங்களில் **தெய்வத் தேர்பவனி** நடந்து வருகின்றது.

பலதெய்வங்களும், பலமன்னர்களும், தேரில் எழுந்தருளியதை இதிஹாஸபுராணங்களால் அறியமுடிகிறது. திருநாவுக்கரசு நாயனார் இறைவனை **"கல்விஞானக் கலைப்பொருள் ஆயவன்"** எனத்துதிக்கிறார். இறையை உணர்த்தும் சாஸ்திரக் கல்வியறிவு, முக்திநெறியின் மெய்ஞானம் தெய்வீகசிற்பக்கலைநயம் இவற்றை முழுமையாகக் கொண்டது **ரதோத்ஸவஸேவை.** திருவிழாவில் தேர்பவனியின் போது செய்யப்படும் தெய்வதரிசனம் **மறுபிறப்பற்ற முக்திநிலையை அளிக்கவல்லது**

என்பது ஆகமகூற்றுகளின்படி, அடியவர்களின் வலுவான நம்பிக்கை. தேவலோகச் செயல்திறனின் கடவுளான தேவசிற்பி விச்வகர்மா என்பவர் தேவர்களுக்கும், இவரது வழித்தோன்றிய மனு, மயன், சில்பி, துவஷ்டா, முதலானோர்கள் மூவுலகிலும் தேவர்க்கும் மன்னர்களுக்கும் தேர்களைத் தயாரித்து அளித்துவந்துள்ளனர்.

விச்வகர்மாவின் குலத்துதித்த வாஸ்துவிஞானகலைஞர்களான, ஸ்தபதி, மரச்சிற்பதச்சுக் கலைஞர்கள், சிற்பிகள், பொற்கொல்லர்கள், பத்தர்கள், ஓவியர்கள், நெசவாளர்கள், கைவினைக் கலைஞர்கள் என்ற பலவகைக் கலைஞர்களும் ஒன்றுகூடி, தேரை உருவாக்கியும், அலங்கரித்தும் கோயில்களுக்கு பலநூற்றாண்டுகளாக அளித்து வருகின்றனர்.

பண்டையகாலத்தில் மன்னரின் நால்வகைப் படைகளுள் ஒன்றாக தேர்ப்படை விளங்கின்று. இவை மூன்று அல்லது நான்கு சக்கரங்களைக் கொண்ட செலுத்தும் வண்டிபோன்ற சிறியரக ஸ்யந்தனம் எனப்படும்.னும் ரதவகையாகும். இவைகாலப்போக்கில் உருமாற்றம்பெற்று, இக்காலத்தில் பீரங்கிவண்டிகளாகவும், கார்களாகவும் விளங்குகின்றன. ஆனால் கோயில்களின் தேர்மட்டுமே இன்றளவும் தொன்மை மாறாமல் வடிவமைக்கப்பட்டு கையாளப்பட்டு வருவது போற்றுதற்குரியது. டெம்பிள்கார் எனப்படும் கோயில்தேர்கள் உலோகத்தேராகவோ, அல்லது மரத்தேர்களாகவோ நான்குசக்கரம் முதல் பத்துசக்கரங்கள் வரையில் கொண்டதான பெருந்தேர்களாம். இத்தகைய தொன்மையும் பெருமையும் மிக்க, கோயில்தேருக்குரிய அமைக்கப்படவேண்டிய விதிமுறைகளையும், பலநிலைவடிவங்களில் பலவாறாக அலங்கரிக்கப்படும் நமது பாரம்பரிய வழிமுறைகளையும் தொகுத்துக் காக்கும் விதமாகப் பதிவுசெய்ய வேண்டும், இளந்தலைமுறையினருக்கு இவற்றை விளக்கிடவேண்டும், என்ற விருப்பத்தின் காரணமாக பல நூல்களிலிருந்து தேர்த்திருவிழாத் தொடர்புடைய செய்திகளைத் திரட்டி, கோயில் தெய்வங்களின் தேர்பவனிமுறை மற்றும் தேர்பெருமைகளை விளக்குவதாக "தேர்பவனிப் பெருமை" என்ற பெயரில் தொகுத்து எழுதப்பட்டுள்ளது. தேர்செய்யும்முறைகள் அவற்றின் உரிய அளவுமுறைகள் நூல் விரியுமென்றஞ்சி விடப்பட்டுள்ளது. அவற்றை தச்சுக்கலைஞர்கள் வா யிலாக அறிதலே நலம் தருவதாகும்.

இந்நூல், தேரேறிய தெய்வத்தின் தரிசனசிறப்பினை அறிய விரும்பும் ஆஸ்தீகப்பொதுமக்களுக்கும், குறிப்பாக மரச்சிற்பக் கலைத்துறைத் தொழிலாளர்களுக்கும், ஆலயஆசார்ய அர்ச்சகப் பெருமக்களுக்கும் தெய்வத்தேரைப்பற்றிய உருவவிளக்க தத்வார்த்த உண்மைகளையும், ஐயத்தெளிவையும், பெருமையையும் அறிந்து உணர்ந்துகொள்ள உதவும் என்பதில் ஐயமில்லை.

திருவண்ணாமலையில் நாயேனையும் ஒருபொருட்டாக நயந்து வந்து விசேஷதீட்டைதந்து ஆட்கொண்டருளிய எனது ஆசார்யர் சிவாகம சரஸ்வதி, பட்டம் சிவஸ்ரீ இராமலிங்கசிவாசாரியார் அவர்களின் சீடரும், தவப்புதல்வரும், அண்ணாமலையார் ஆலயத்தின் அர்ச்சகரும், ஜங்கமலிங்கத் திருமேனியான சிவமூர்த்தியும், எனது அன்பிற்கும் போற்றுதற்கும் உரியவருமான திருவண்ணாமலை பெரியபட்டம் சிவஸ்ரீ ஸா. ஹாலாஸ்யநாத சிவாசார்யார், ஸ்ரீமதி. பராசக்தி அம்மையார் தம்பதியரின் சதாபிஷேகவைபவ விஜயரதோத்ஸவ பவிழாவில் இந்நூல் வெளிவருவது பெருமகிழ்ச்சியளிக்கிறது.

இந்நூலை வெளியிடும் சென்னை ஸ்ரீ காளிகாம்பாள்கோயில் அர்சகரும், சிவாசார்ய குலபூஷணமுமான Dr.தி.ஷ.ஸாம்பமூர்த்தி சிவாசார்யார் அவர்களது குமாரர்களால் நடத்தப்பட்டுவரும் அறக்கட்டளைகளையும், அவரது குடும்பத்தினரையும், போற்றுவதோடு. பவளவிழாதம்பதியின் பதமலர்பணிந்து, அவர்களின் குடும்பத்தினரையும் உளமாரப் பாராட்டி மகிழ்கிறேன்.

இந்நூல் வெளிவர அச்சிட்டு உதவிய திரு.அ.கணேஷ், அவர்களுக்கும், இந்நூலுக்கு ஆசியுரை, வாழ்த்துரை, வழங்கிய பெரியோர்களுக்கும், அறிஞர்களுக்கும், தேரின்படங்களை அளித்தும், அணிந்துரை வழங்கியும், உதவிய அன்பர்களுக்கும் எமது நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருவிழாவில் வீதிஉலாக்காட்சியைமட்டுமே கண்டு வணங்குவோர் விழாவின் உட்கருத்துக்களையும் பெருமைகளையும் அறிந்து, தரிசிப்பார்களேயாயின் அவர்கள் பக்திரஸத்தின் மேலீட்டையும் இறையருளையும் விரைவில் பெற்றுய்வர். எனவே இந்நூலை வாசிக்கும் வாசகர்களான அன்பர்கள் யாவரும் அண்ணாமலையார் அருள்பெற்றுய்ய எனது இஷ்டதெய்வத்தை வணங்கி உளங்கனிந்து வாழ்த்தி மகிழ்கிறேன். மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

துஞ்சலும் துஞ்ச லிலாத போழ்திலும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்று அடிவாழ்ந்த வந்தகூற்று
அஞ்சஉ தைத்தன அஞ்செழுத்துமே. (திருஞானசம்பந்தர்)

வாழ்க சீர்அடியாரெல்லாம்.
சுபம்

இப்படிக்கு

அண்ணாமலையார் அடிப்பொடியன்

**வி.சோமசேகரசிவன்,** சென்னை.

உ
ஸ்ரீ முகாம்பிகை துணை



சாதக சிந்தாமணி
சிவாகம செம்மல்
சிவாகம அருட்செல்வர்
சிவாகம சார்வ பௌமா
சிவாகம க்ரியா கல்பநிபுணா
**சோ.சபேச சிவாச்சார்யர்**

சைவாகம ஸ்ரீ
ஆகம பட்டாரக:
சாக்த ப்ரக்ரியாமணி
சிவாகம வாசஸ்பதி
வைதிக சைவரக்ஷாமணி
முன்னாள் ஸ்ரீ கைலாஸ ஆச்ரம
வேத சிவாகம பாடசாலை முதல்வர்

முகவரி : ஸ்ரீ குருக்ருபா நிலையம், நெ.2, வள்ளலார் கோவில் ஒத்தத்தெரு, மயிலாடுதுறை - 609 001
போன் : 04364 - 229228, 9976503503.

# வாழ்த்துரை

உமாமஹேஸ்வரனுடைய திருவருளால் ஆலயங்களில் உத்ஸவம் செய்ய, ஆகமங்களில் யானக்ரமம் உண்டு, அதில், ரதாரோஹணம் செய்யனும், ராஜா முதல் தாவரஜங்களை ரக்ஷிப்பதற்காக செய்வதே தேர்பவனி.

சிவன், முதல் க்ராமதேவதை வரை தேர் இலக்கணம் உள்ளன. இதை தவிர தந்த்ரசாஸ்த்ரங்களில் தண்டினீரதம் மந்த்ரிணீரதம், கீதை உபதேசம் செய்யும்போது இருந்த ரதம் இதுகளின் லக்ஷணத்தை யாவரும், தெளிவாக புரியும் வண்ணம், பலக்ரந்தங்களை பார்த்து ஆராய்ந்து சிவஸ்ரீ நூலாசிரிய பெருந்தகை, தனக்கே உரிய பாணியில், எழுதி, அமைத்து திருவண்ணாமலை ஆயிரம் பிறைகண்ட பெரியவர் ஸா. ஹாலாஸ்யநாத சிவாசார்யர், ஸௌ.பராசக்தி அம்மையார் சதாபிஷேகத்தில் "ரதோத்ஸவ பெருமை" வெளியிடுவது சாலச்சிறந்தது, தீக்ஷையில், நிர்வாணதீக்ஷையில் அத்வசுத்தி, சிகாச்சேதம் செய்தபிறகு ஆசார்யர் சிஷ்யனை ஆலிங்கனம் செய்து நீயும் நானும் ஒன்றே? எனக்கூறி சிஷ்யனை, சிவனிடத்தில் ஸம்யோஜனம் செய்வதை உணர்த்துவதுபோல, உத்ஸவத்தில் எல்லா தேவதைகளையும் அடக்கிய தேரின் மத்தியில் தெய்வத்தை அமர்த்தி, எல்லோரும், ஒன்று சேர்ந்து தேரை இழுத்து வருவதை, உலகத்தில், ஸ்தாவரம் ஜங்கம தேவர்கள் ரிஷிகள், மானுடர்கள் எல்லோரும், சிவனுடன் ஐக்யம் என்பதை குறிக்கும். பெருந்தேர், இழுக்கும்தேர், தூக்கும்தேர், பதினெட்டாம் பெருக்கில், குழந்தைகள் இழுத்து வரும் தேர்வரை பலவகை தேரின் மஹிமையை எடுத்து நூல்வடிவமாக எழுதி இருப்பதை இந்த ஜனஸமூஹம் அறிந்து நம் குழந்தைகள் பின்பற்றி நடந்து கொள்வார்களேயானால், உலகம் சுபிக்ஷம் அடையும் என்பதில், அய்யமில்லை.

அண்ணாமலையானும், உண்ணாமுலையாளும் சேர்ந்து இப்பூமண்டலம் வாழ நூலாசிரியர், ஆகமகல்பத்ருமன் அகோரசிவம் என்கிற வி. சோமசேகர சிவாசார்யார் மூலம் தேர்பவனிபெருமை எழுத ஆணையிட்டுள்ளார்கள். இதுபோல், இன்னும் பல அரிய விசேஷ நூல்களை வெளியில் கொணர்ந்து ஆசீர்வதிக்க, ஆரோக்யமும் நலமுடன் வாழ, அனுக்ரஹம் செய்ய, நமது குருவான ஸ்ரீதுர்வாஸாசார்யரை வணங்கிப்ப்ராத்திக்கிறேன்.

**சி.ஸபேச சிவாசார்யார்.**

சி. ஸபேச சிவாசார்யா -



உ
ஸ்ரீஅண்ணாமலையார் துணை

இளவரசு பட்டம்
**P. தியாகராஜ குருக்கள்**
அர்ச்சகம்,
அருள்மிகு அருணாசலேஸ்வரர் திருக்கோயில்,
திருவண்ணாமலை.



---

# ஆசியுரை

"சிவாகம ஞான பாஸ்கரர்" "சிவாகமசெ செல்வர்" "சிவாகம வாசஸ்பதி' பட்டம். **சிவஸ்ரீ. சா.ஹாலாஸ்யநாத சிவாசார்யர் சொபாக்யவதி பராசக்தி தம்பதிகளின் சதாபிஷேக கனகாபிஷேக வைபவத்தில் ரதோத்ஸவ மஹிமா (தேர்பவனிப் பெருமை)** எனும் நூல் வெளியிடுவதை கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். இந்நூல் திருக்கோயிலில் நடைபெறும் தேர் திருவிழா, ரதத்தின் சிறப்பு மற்றும் இறைவன் தேர்பவனி பற்றிய அறிய விஷயங்களை தொகுத்து புத்தக வடிவாக தொகுத்து வழங்கிய சிவஸ்ரீ. வி. சோமசேகர சிவாசார்யர் அவர்களுக்கு எனது பாராட்டும் ஆசிகளும்.

இந்நூல் அனைத்து ஆன்மீக அன்பர்களும் அறிந்து கொள்ள உதவும் பயனுள்ள நூலாகும். இந்நூலினை **சென்னை காளிகாம்பாள் டாக்டர் சிவஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாசார்யர்** குமாரர்களால் நடத்தப்பட்டும், **சிவாசார்யர் அறக்கட்டளை மற்றும் சிவஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாசார்யார் டிரஸ்ட்** சென்னை மூலமாக வெளியிடுவதை கண்டு பெருமகிழ்ச்சி அடைகிறேன். எதிர்வரும் காலத்தில் இதுபோன்ற பல ஆன்மீக புஸ்தகங்கள் வெளிவந்து, மக்கள் அனைவருக்கும் பயன் பெறவேண்டும்.

சதாபிஷேக கனகாபிஷேக விழா தம்பதிகள் அவர்களுடைய குடும்பத்தார்கள் மற்றும் புத்தக தொகுப்பாளர், சென்னை காளிகாம்பாள் சிவஸ்ரீ. சாம்பமூர்த்தி சிவாசார்யர் குடும்பத்தினர் மற்றும் சிவாசார்யர் டிரஸ்ட் அனைவருக்கும் எனது பாராட்டினையும், ஆசிர்வாதத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**ஸ்ரீ அண்ணாமலையார் ஆசிர்வாதம்.**

**இங்ஙனம்**
**இளவரசு பட்டம் P. தியாகராஜ குருக்கள்**
**அர்ச்சகம், அருள்மிகு அருணாசலேஸ்வரர் திருக்கோயில்,**
**திருவண்ணாமலை**

# வெளியீட்டுரை.

எல்லாம்வல்ல எம்பெருமாட்டி தாய் காளிகாம்பாளின் திருவருட்பயனால், உலகமக்களிடையே தெய்வபக்தி மேலோங்கி வளரவேண்டும். இந்து சமயத்தின் ஸநாதனதர்மம் தழைத்து ஓங்கவேண்டும், என்றநோக்கில் எமது அறக்கட்டளையின் மூலமாக சமயஆன்மீக பொதுநலசேவைகளைத் தொடர்ந்து செய்து வருகிறோம். இதில் குறிப்பாக எங்களது குருநாதரும், எமது அறக்கட்டளையின் கௌரவ ஆலோசகரும், மார்கதர்சியுமான சிவஸ்ரீ.வி.சோமசேகர சிவாசார்யர் அவர்கள் எழுதித் தொகுத்தளித்த பலதெய்வீகநூல்களை வெளியிட்டு சமயம் மற்றும் சமூகஅறப்பணிகளை செய்துவருகிறோம்.

இவ்வகையில், எமது குருநாதர் தற்போது தொகுத்தளித்துள்ள **தேர்பவனிப் பெருமை** என்னும் நூல், 2022 ப்லவ வருஷம், தை மாதம் 10–ம் நாள் அன்று 23.01.2022 தினத்தில் திருவண்ணாமலையில் வெளியிடப்படுகிறது.

கோயில் விழாக்களின் தத்துவ விளக்கங்களையும், தேரின் தெய்வாம்சப் பெருமைகளையும், விழாக்காலதெய்வதரிசனத்தின் உயரிய பயன்களையும் இந்நூல் நன்குவிளக்குகிறது. இந்நூல் தேரின் பல்வேறு உருவஅமைப்புகளைப்பற்றியும், கலைத்துறையின் ஒப்பற்ற சேவைகளைப் பற்றியும் எடுத்துரைக்கிறது. அனைத்து தரப்பினருக்கும் கலைத்துறை மற்றும் சமயம் சார்ந்த சிறந்த செய்திகளைக் தெளிவுபடுத்தும் இந்நூலை ரதாதிரூடரான முப்புரமெறிசெய்த முக்கண்ணர் உறையும் அண்ணாமலையில் வெளியிடுகிறோம்.

சென்னை காளிகாம்பாள் ஆலயத்தில் பலமுறை காளீயாகங்களை நடத்தியவரும் காளீபெருமைகளை எடுத்துரைத்தவருமான, இந்நூலாசிரியர் இந்த ஆலயத்தில் இந்த நூலை வெளியிடுவது, எங்களையும் கௌரவப்படுத்துவதாக உள்ளது. இதனை எண்ணி பெருமிதம் கொள்கிறோம்.

இந்நூலை ஆஸ்தீகப்பொதுமக்கள் யாவரும் வேண்டிப்பெற்று பயனுறவேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம். இந்த புத்தகத்தை வெளியிடுவதற்கு எங்களுக்கு வாய்ப்பளித்தமைக்கும், நல்வழிகாட்டுதலுக்கும், எமது குருநாதரை வணங்கி நூல் சிறக்க வாழ்த்துகிறோம்.

நன்றி. வணக்கம்.



இப்படிக்கு

சாக்தச்செம்மல்

சிவஸ்ரீ. T.S. காளிதாஸ் சிவாசார்யர்.

ஸ்ரீகாளிகாம்பாள் ஆலய ஆசார்யர்,

சென்னை–1.

உ
ஸ்ரீஅண்ணாமலையார் துணை









# மகிழ்வுரை

எங்களது பொற்றோர்களது சகஸ்ர சந்திர தர்சன சதாபிஷேக கனகாபிஷேக விழா நடைபெறும் இந்த மகிழ்ச்சியான தருணத்தில் ரதோத்ஸவ மஹிமா (தேர்பவனி பெருமை) எனும் அற்புதமான இந்த நூலினை சிவஸ்ரீ வி. சோமசேகர சிவாசார்யர் அவர்கள் ஆகம முறைபடியும், சிற்ப சாஸ்திர முறைபடியும், ஆன்மீக அன்பர்கள் இறைவன் தேர் பவனி வரும் சமயத்தில் எப்படி இறைவனை வணங்க வேண்டும். தேரின் அங்க லக்ஷணங்கள் போன்ற தேரை பற்றிய இதுவரை அறியாத விஷயங்களை மிக அழகாக தொகுத்து அளித்திருக்கிறார். அவருக்கு எங்களது பணிவான நமஸ்காரங்களை தெரிவித்துக்கொள்கிறோம். இவ்வரிய நூலினை குறுகிய காலத்திற்குள் மிக சிறப்பாக வெளிவர உதவி புரிந்த சென்னை ஸ்ரீ காளிகாம்பாள் திருக்கோயில் சிவஸ்ரீ சாம்பமூர்த்தி சிவாசார்யர் டிரஸ்ட் மற்றும் சிவாசார்யர் அறக்கட்டளை சார்பாக எங்களது தாய்மாமா மூவருக்கும் எங்கள் குடும்பத்தின் சார்பாக நன்றி கலந்த நமஸ்காரத்தை தெரிவித்துக்கொள்கிறோம்.

இங்ஙனம்,

**பட்டம். சிவஸ்ரீ ஹா.முத்துக்குமாரசாமி சிவாசார்யர்**

**பட்டம். சிவஸ்ரீஹா. வெங்கட்ராஜ சிவாசார்யர்**

**பட்டம். சிவஸ்ரீ ஹா. கீர்த்திவாச சிவாசார்யர்**

**அர்ச்சகம்**

**அருள்மிகு அருணாசலேஸ்வரர் திருக்கோயில்**

**திருவண்ணாமலை.**

உ

திருச்சிற்றம்பலம்

# தேர்பவனிப் பெருமை

## (ரதோத்ஸவ மஹிமா)

## பொருளடக்கம்

ஸ்ரீ குருப்யோ நம:



## ஆதிசைவ ஸம்ப்ரதாய குருவந்தனம்

நமோ ப்ரம்மபதார்த்தாய லோகானாம் ஸித்திஹேதவே.
ஸச் சிதா னந்த ரூபாய சிவாய பர மாத்மனே.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

ஸதாசிவம் அனந்தம் ச ஸ்ரீகண்டம் புனர் அம்பிகாம்.
குஹம் விஷ்ணும் ச தாதாரம் குரூன் ஸப்த ஸமாச்ரயே.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

குருர் பிரம்மா குருர் விஷ்ணுர் குருர் தேவோ மஹேச்வர:.
குருஸ் ஸாக்ஷாத் பரம் ப்ரம்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

குரவே ஸர்வ லோகானாம் பிஷஜே பவ ரோகினாம்.
நிதயே ஸர்வ வித்யானாம் தக்ஷிணா மூர்த்தயே நம:.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

ஸ்ரீகண்ட வம்சோததி பூர்ணசந்த்ரம்
ஸ்ரீகண்ட சாஸ்த்ரார்த்தவிதம் முநீந்த்ரம்.
ஸ்ரீகண்ட பாவாஞ்சித யக்ஞஸூத்ரம்
ஸ்ரீகண்ட மாசார்ய மஹம் பஜாமி.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

தூர்வாஸ கௌசிக விரிஞ்சி ம்ருகண்டு புத்ர
தேவேந்த்ர பாண ஹரி சக்தி ததீசி ராமான்.
கண்வாத்ரி பார்கவ ப்ருஹஸ்பதி கௌதமாதீன்
புண்யான் இமான் பரம பாசுபதான் நமாமி.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

சுத்த ஸ்படிக ஸங்காசான் மந்தஸ்மித முகாம்புஜான்
வ்யாக்யா புஸ்தக ஸம்யுக்தான் சிவஞான ப்ரபோதகான்.
குரூன் பராபரான் ஸர்வான் குருவம்ச க்ரமாகதான்
அஸ்மத் ஆசார்ய பர்யந்தான் வந்தே தேசிக புங்கவான்.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

சிவம் சக்திம் கணாதீசம் குஹம் வாகீச்வரீம் க்ரமாத்.
தூர்வாஸஸம் அஹம் வந்தே பைங்களாத்யாம்ச்ச தேசிகான்.

◇◇◇◇◇◇◇◇◇◇◇

# சைவாகமபத்ததி ஆசார்ய வந்தனம்







மஹாகாளர் வெண்மழு சிவசின்னம் பிரணவ சிவலிங்கம் புள்ளிமான் சிவாயநம

நமசிவாய ஹரஹர நமப் பார்வதீ பதயே ! ஹர ஹர மஹா தேவ !!

ஸ்ரீ குருப்யோ நம:

தூர்வாஸாப் பிங்களஸ் சைவ உக்ரஜ்யோதிஸ் ஸுபோதக:.
ஸ்ரீகண்டோ விஷ்ணுகண்டஸ் ச வித்யாகண்டஸ் ததைவ ச.
ராமகண்டோ ஞானசிவோ ஞானசங்கர ஏவச.
ஸோம சம்புர் ப்ரம்ம சம்புஸ் த்ரிலோசன சிவஸ் ததா.
அகோர சிவ ஏவா(அ)த ப்ராஸாத சிவ ஏவச.
ராமநாத சிவஸ் சைவ ஈசான சிவ ஏவச.
வாருணாக்ய சிவஸ் சைவா(அ)ஷ்டாதசா சார்ய புங்கவா:.
ஏதைர் திவ்யைர் சிவாசார்யைர் பத்ததிப் பரிபாஷிதா:.
தேப்யோ நித்யம் நமோ திவ்ய தேசிகேந்த்ரேப்ய ஏவச.
ஸித்தாந்த மார்க்க தர்சிப்யோ ஆசார்யேப்யோ (அ)ஸ்து மே நதி:.

**பக்தசுந்தரமூர்த்திஸ்தவ:** கேயூர குண்டல கிரீட விபூஷி தாங்கம்
ஹஸ்தோத்பலம் கடிகரம் த்ருத ராஜவேஷம்.
ருத்ராக்ஷ ருத்ர ஜப பூதி லலாட பாஜம்
த்யாயேத் த்ரிபங்க சிவசுந்தர மூர்த்தி ரூபம்.




சைவ ஸந்தான ஆசார்யர்கள்

# இஷ்டதேவதாவந்தனம்





**கணேசாய நம:**

குணாதீத மாத்யம் சிதானந்த ரூபம்
சிதாபாஸகம் ஸர்வகம் ஞானகம்யம்.
முனித்யேய மாகாச ரூபம் பரேசம்
பரப்ரம்ம ரூபம் கணேசம் பஜே ஹம்.



**ஷண்முகாய நம:**

குந்தேந்து மந்த ஸ்மித சுந்தரா ஸ்யம்
வந்தாரு பூதேவ வரை ருபா ஸ்யம்
ப்ருந்தார காராதி ஜனை ரசா ஸ்யம்
வந்தே பவானீ தநயம் ஷடா ஸ்யம்.



**சாங்கராய நம:**

தவள மய சாரம் ஸர்ப்ப சூலஞ் ச பாசம்
பரசு மனல கட்கம் கேடகம் வஜ்ர ஹஸ்தம்
அபய வரத ஹஸ்தம் பஞ்சவக்த்ரம் த்ரிநேத்ரம்
பணி சசி ஜல மௌளிம் தேவதேவம் நமாமி.



**ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே நம:**

கபர்திநம் சந்த்ர கலா வதம்ஸம்
த்ரிநேத்ர மிந்துப்ரதிமா நநோஜ்வலம்
சதுர்புஜம் ஞானத மக்ஷசூத்ரம்
புஸ்தாக்னி ஹஸ்தம் ஹ்ருதி பாவயேத் சிவம்



**நடேசாய நம:**

க்ருபாஸமுத்ரம் சுமுகம் த்ரிநேத்ரம்
ஜடாதரம் பார்வதி வாம பாகம்
ஸதாசிவம் ருத்ர மனந்த ரூபம்
சிதம்பரேசம் ஹ்ருதி பாவயாமி



**ஸ்ரீலலிதாம்பாயை நம:**

ஸ்ரீம் பதபூர்ண மஹா மநு ரூபே
ஸ்ரீ சிவகாமி மஹச்வர ஜாயே
ஸ்ரீ குஹ வந்தித பாத பயோஜே
ஸ்ரீ லலிதா பர மேசி நமஸ்தே



**ஸ்ரீ கிருஷ்ணாய நம:**

இந்தீவர ச்யாமள கோமலாங்கம்
இந்த்ராதி தேவார்ச் சிதபாதபத்மம்
ஸந்தான கல்பத்ருமம் ஆச்ரிதானாம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி



**ஸ்ரீவிஷ்ணுவே நம:**

மேக ச்யாமம் பீத கௌசேய வாஸம்–
ஸ்ரீவத் ஸாங்கம் கௌஸ்துபோத் பாஸிதாங்கம்.
புண்யோ பேதம் புண்டரீகாய தாக்ஷம்–
விஷ்ணும் வந்தே ஸர்வ லோகைக நாதம்.



**ஸ்ரீ மஹாலக்ஷ்மியை நம:**

ஸரஸிஜ நயனே ஸரோஜ ஹஸ்தே–
தவளதரா ம்சுக கந்த மால்ய சோபே.
பகவதி ஹரி வல்லபே மனோக்ஞே–
த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்.



**ஸ்ரீதுர்க்காயை நம:**

நமஸ்தே சரண்யே சிவே ஸாநுகம்பே
நமஸ்தே ஜகத் வ்யாபிகே விச்வரூபே
நமஸ்தே ஜகத் வந்த்ய பாதாரவிந்தே
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே.

**ஸ்ரீஸரஸ்வத்யை நம:**



சுராசுர சேவித பாத பங்கஜா-
கரே விராஜத் கமநீய புஸ்தகா.
விரிஞ்சி பத்னீ கமலாஸந ஸ்திதா-
ஸரஸ்வதீ ந்ருத்யது வாசி மே ஸதா.

**ஸ்ரீ ஹயக்ரீவாய நம:**



ஞானா னந்தம் மயம் தேவம்
நிர்மல ஸ்படிகா க்ருதிம்
ஆதாரம் ஸர்வ வித்யானாம்
ஹயக்ரீவம் உபாஸ்மஹே.

**ஸ்ரீ லக்ஷ்மீநிருசிம்மாய நம:**



யஸ்ய அபவத் பக்தஜன ஆர்த்தி ஹந்து:
பித்ருத்வம் அன்யேஷு அவிசார்ய தூர்ணம்
ஸதம்பே அவதாரந்தம் அநந்ய லப்யம்
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹம் சரணம் ப்ரபத்யே.

**ஸ்ரீ மஹாசாஸ்த்ரே நம:**



ஹரிவரா ஸநம் விச்வ மோஹனம்
ஹரிததீ ச்வரம் ஆராத்ய பாதுகம்
அரிவிம ர்தநம் நித்ய நர்த்தனம்
ஹரிஹரா த்மஜம் தேவ மாச்ரயே.

**ஸ்ரீபைரவாய நம:**



கட்கம் கபாலம் டமரும் த்ரிசூலம்
கராம் புஜைஸ் ஸந்த்ததம் த்ரிநேத்ரம்
திகம் பரம் பஸ்ம விபூஷி தாங்கம்
நமாம் யஹம் பைரவ மிந்து சூடம்.

**ஹநுமதே நம:**



அசேஷ லங்கா பதி ஸைன்ய ஹந்தா
ஸ்ரீராம ஸேவா சரணைக கர்த்தா
அசேஷ துக்காஹத லோக கோப்தா
த்வஸௌ ஹநூமான் தவ ஸௌக்ய கர்த்தா.



நடேசாய நம:

க்ருபாஸமுத்ரம் சுமுகம் த்ரிநேத்ரம்
ஜடாதரம் பார்வதி வாம பாகம்
ஸதாசிவம் ருத்ர மனந்த ரூபம்
சிதம்பரேசம் ஹ்ருதி பாவயாமி



ஸ்ரீலலிதாம்பாயை நம:

ஸ்ரீம் பதபூர்ண மஹா மநு ரூபே
ஸ்ரீ சிவகாமி மஹேச்வர ஜாயே
ஸ்ரீ குஹ வந்தித பாத பயோஜே
ஸ்ரீ லலிதா பர மேசி நமஸ்தே



ஸ்ரீ கிருஷ்ணாய நம:

இந்தீவர ச்யாமள கோமலாங்கம்
இந்த்ராதி தேவார்ச் சிதபாதபத்மம்
ஸந்தான கல்பத்ருமம் ஆச்ரிதானாம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி



ஸ்ரீவிஷ்ணுவே நம:

மேக ச்யாமம் பீத கௌசேய வாஸம்-
ஸ்ரீவத் ஸாங்கம் கௌஸ்துபோத் பாஸிதாங்கம்.
புண்யோ பேதம் புண்டரீகாய தாக்ஷம்-
விஷ்ணும் வந்தே ஸர்வ லோகைக நாதம்.



ஸ்ரீ மஹாலக்ஷ்மியை நம:

ஸரஸிஜ நயனே ஸரோஜ ஹஸ்தே-
தவளதரா ம்சுக கந்த மால்ய சோபே.
பகவதி ஹரி வல்லபே மனோக்ஞே-
த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்.



ஸ்ரீதுர்க்காயை நம:

நமஸ்தே சரண்யே சிவே ஸாநுகம்பே
நமஸ்தே ஜகத் வ்யாபிகே விச்வரூபே
நமஸ்தே ஜகத் வந்த்ய பாதாரவிந்தே
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே.

**ஸ்ரீஸரஸ்வத்யை நம:**



சுராசுர சேவித பாத பங்கஜா-
கரே விராஜத் கமநீய புஸ்தகா.
விரிஞ்சி பத்னீ கமலாஸந ஸ்திதா-
ஸரஸ்வதீ ந்ருத்யது வாசி மே ஸதா.

**ஸ்ரீ ஹயக்ரீவாய நம:**



ஞானா னந்தம் மயம் தேவம்
நிர்மல ஸ்படிகா க்ருதிம்
ஆதாரம் ஸர்வ வித்யானாம்
ஹயக்ரீவம் உபாஸ்மகே.

**ஸ்ரீ லக்ஷ்மீந்ருசிம்மாய நம:**



யஸ்ய அபவத் பக்தஜன ஆர்த்தி ஹந்து:
பித்ருத்வம் அன்யேஷு அவிசார்ய தூர்ணம்
ஸதம்பே அவதாரந்தம் அநந்ய லப்யம்
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹம் சரணம் ப்ரபத்யே.

**ஸ்ரீ மஹாசாஸ்த்ரே நம:**



ஹரிவரா ஸநம் விச்வ மோஹனம்
ஹரிததீ ச்வரம் ஆராத்ய பாதுகம்
அரிவிம ர்தநம் நித்ய நர்த்தனம்
ஹரிஹரா த்மஜம் தேவ மாச்ரயே.

**ஸ்ரீபைரவாய நம:**



கட்கம் கபாலம் டமரும் த்ரிசூலம்
கராம் புஜைஸ் ஸந்தததம் த்ரிநேத்ரம்
திகம் பரம் பஸ்ம விபூஷி தாங்கம்
நமாம் யஹம் பைரவ மிந்து சூடம்.

**ஹநுமதே நம:**



அசேஷ லங்கா பதி ஸைன்ய ஹந்தா
ஶ்ரீராம ஸேவா சரணைக கர்த்தா
அசேஷ துக்காஹத லோக கோப்தா
த்வஸௌ ஹநூமான் தவ ஸௌக்ய கர்த்தா.



## ஸதாசிவ ஸ்தவ தசகம். (ரௌரவாகமம்)

ஸுராதிபம் நமஸ் க்ருத்ய சசாங்க க்ருத சேகரம்.
கபால மாலிநம் தேவம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 1

காலேச்வரம் மஹாகாலம் காலஞ்ஜர நிவாஸிநம்.
காலக்ருத் காலதாதாரம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 2

ஸர்வக்ருத் ஸர்வ வேத்தாரம் ஸர்வக்ஞம் அபராஜிதம்.
ஸர்வபூதாத்ம பூதஸ்தம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 3

யோ (அ)ஸ்ருஜத் ஸர்வபூதாநி ப்ரம்மாத்யான்ச சுராசுரான்.
தமஹம் லோக கர்த்தாரம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 4

வரம் வரேண்யம் வரதம் வரிஷ்டம் வர வாஹனம்.
வனமாலா தரம் தேவம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 5

ப்ரீதிமத் ப்ரீதி தாதாரம் ஸுப்ரியம் ப்ரிய தர்சனம்.
உமாப்ரியம் ஸதா காந்தம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 6

தர்மா தர்ம மயம் தேவம் சுக துக்க பலோதயம்.
பந்த மோக்ஷ ப்ரணேதாரம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 7

மனோ புத்தி ரஹங்கார தன்மாத் ரேந்த்ரிய கோசரம்.
ப்ரதான புருஷேசானம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 8

யம் த்யாயந்தி மஹாத்மானோ முநயஸ் ஸம்சித வ்ரதா:
தம் ஓங்காரபரம் சூக்ஷ்மம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 9

சூக்ஷ்மம் ஸர்வகதம் நித்யம் ஸர்வ வித்யேச் வரேச்வரம்.
ஸர்வ தத்வாச்ரயம் தேவம் ப்ரணதோ(அ)ஸ்மி ஸதாசிவம். 10

ஓம் நமோ பகவதே பரமஹம்ஸாய பரமகுரவே ஸதாசிவாய நம:

ஸ்ரீ அண்ணாமலையார் துணை



ஓம் நமோபகவதே அருணாசலேச்வராய சிவாய நம:

## அண்ணாமலையாரின் சோனாத்ரிநாத ஸ்துதி அஷ்டகம்.

சிவாய ருத்ராய சிவார்ச்சிதாய – மஹானுபாவாய மஹேச்வராய.
ஸோமாய ஸூக்ஷ்மாய சுரேச்வராய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 1

திக்பால நாதாதி விபாவநாய – சந்த்ரார்த்த ஸூடாய ஸநாதனாய.
ஸம்ஸார துக்கார்ணவ தாரணாய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 2

ஜகன் நிவாஸாய ஜகத் ஹிதாய – ஸேநாநிதானாய ஜய ப்ரதாய.
பூர்ணாய புண்யாய புராதனாய சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 3

வாகீச வந்த்யாய வர ப்ரதாய – உமார்த்த தேஹாய கணேச்வராய.
சந்த்ரார்க்க வைச்வாநரலோசனாய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 4

ரதாதிரூடாய ரஸாதராய வேதாச்வ – யுக்தாய விதி ஸ்துதாய.
சந்த்ரார்க்க சக்ராய சசிப்ரபாய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 5

விரிஞ்சி ஸாரத்ய விராஜிதாய – கிரீந்த்ர சாபாய கிரீச்வராய.
பாலாக்னி நேத்ராய பணீச்வராய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 6

கோவிந்தபாணாய குணத்ரயாய – விச்வஸ்யநாதாய வ்ருஷத்வஜாய.
புரஸ்ய வித்வம்ஸந தீக்ஷிதாய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 7

ஜராதி வர்ஜ்யாய ஜடா தராய – அசிந்த்ய ரூபாய ஹரி ப்ரியாய.
பக்தஸ்ய பாபௌக விநாசநாய – சோணாத்ரிநாதாய நமச்சிவாய. 8

ஸ்துதிம் சோணாசலேசஸ்ய – படதாம் ஸர்வஸித்திதம்.
ஸர்வஸம்பத்ப்ரதம் பும்ஸாம் – ஸேவந்தாம் ஸர்வதோ ஜனா:.

## சோணாத்ரிநாத ஸ்துதி அஷ்டக விளக்கவுரை
## ஸ்ரீ ஆதிசங்கராச்சாரியர் அவர்கள் அருளியது

1. சிவனாகவும், ருத்ரனாகவும், பார்வதியினால் அர்ச்சிக்கப்பட்டவராயும், பெரியவராகவும், மஹேஸ்வரராயும், உமையோடு கூடியவராயும், அணுஸ்வரூபராயும், தேவர்களுக்கு ஈஸ்வரராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

2. இந்தரனால் பூசிக்கப்பட்டவராயும், சந்திரனை சிரசில்தரிசித்தவராயும், மிகவும் பழமையானவராயும், சம்சாரமாகிய துக்கசமுத்திரத்தை தாண்டினவராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

3. உலகங்களுக்கு நன்மை செய்பவராயும், உலகத்திலேயே இருப்பவராயும், சேனாதிபதியாகவும், ஐயத்தை கொடுக்கிறவராயும், நிறைந்தவராயும், புண்ய புருஷராயும் பழமையானவராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

4. ப்ரஹஸ்பதயினாலே வணங்கப் பெற்றவராயும், வரத்தைக் கொடுப்பவராயும், உமையின் பாதி சரிரத்தையுடயவராயும் கணங்களுக்கு அதிபதியாகவும், சந்திரன், சூரியன், அக்நி, இவர்களை கண்களாக உடையவராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

5. வேதங்களாகிய குதிரையையுடையதாயும், சந்திரன், சூரியன், இவர்களை சக்ரமாகயுடையதாயும், இருக்கிற ரதத்தில், பிரம்மாவை சாரதியாகக் கொண்டு ஆரோகணிதவராயும், ரசத்தை ஆதாரமாகயுடையவராயும், ச்நதிரன் போன்ற வெண்மையாக இருக்கிற சிவனுக்கு நமஸ்காரம்.

6. விரிஞ்சியை சாரதியாக உடையவராயும், கிரீந்திரனை வில்லாக உடையவராயும், கிரீஸ்வரனாகவும், நெற்றி கண்களையுடையவராயும், பாம்புகளுக்கு ஈஸ்வராயும் இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

7. கோவிந்தனை பாணமாக உடையவராயும், சகுணபிரம்மவடிவராயும், உலகத்திர்க்கு நாதராயும், விருஷபத்தைத்வஜமாகயுடையவராயும், முப்புரங்களை எரிப்பதில் தீக்ஷையையுடையவராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

8. நரை திறை மூப்பு இவைகளை நீகுகினவராயும், ஜடையை தரித்தவராயும், சிந்திக்கமுடியாத உருவத்தையுடையவராயும் மஹாவிஷ்ணுவுக்கு பிரியமானவராயும், பக்தர்களுடைய பாபக்கூட்டங்களை போக்கபிரசப்பவராயும், இருக்கிற சோணாத்ரி நாதனாகிய சிவனுக்கு நமஸ்காரம்.

9. இந்த சோணாத்ரி நாத ஸ்துதியைப் படிப்பதால் எல்லாம் சித்திக்கும், எல்லா சம்பத்துக்களையும் கொடுக்கும் இந்த ஸ்துதியை ஜனங்கள் எப்போதும் சேவிக்கட்டும்.

ஓம் நமோ பகவதே அருணாசலேசாய சிவாய நம:

# ஸ்ரீ அருணாசலாஷ்டகம்

(தோத்திரமும்-பொருளும்) (ஆதிசங்கரர் அருளியது)

1. ஸ்ரீநாதாதி குரு க்ரமைக சுலபம் ஸ்ரீராஜ ராஜேஸ்வரம்
ஸ்ரீசக்ரா க்ருதி சோணசைல வபுஷம் ஸ்ரீஷோடசார்ணாத்மகம்.
ஸ்ரீஷோடாதி ஷடத்வ ஸௌத ஸதனம் ப்ரஹ்மாண்ட கோட்யூர்த்வத:
க்ரீடந்தம் சுருதி வாக் அகோசர பதம் சேவே பரம் தைவைதம்.

ஸ்ரீவிஷ்ணு முதலிய சப்த குருமார்களுக்கு எளிவராயும், ஸ்ரீராஜ ராஜேஸ்வரராயும், பதினாறு உயிரெழுத்துகளையுடைய த்ரிகோணத்தில் பிந்து ரூபமாயிருக்கிறவராயும், ஸ்ரீசக்ராக்ருதியான சோணசைலத்தை சரீரமாயுடையவராயும், பிரமாண்டங்களுக்குமேல் விளையாடுகிறவராயும், வேதங்கட்கு புலப்படாத இடத்தையுடையவராயும் இருக்கிற, பரம்பொருளாகிய தெய்வத்தை வணங்குகிறேன்.

2. ஸ்ரீப்ராஸாத வரப்ரகாஸ வபுஷம் ஸ்ரீசோண சைலேஸ்வரம்
ஷட் சக்ரோதித பைரவை ரபிவ்ருதம் ப்ரஹ்மாண்ட மாலாஜடம்
ஷோடாந்யாஸ மஹாகலாப மஹிதஜ்வாலா ஸஹஸ்ரோஜ்வலம்
சத்ய ஞான மநந்ய பாவ ரஹிதம் சோணாத்ரி நாதம் பஜே

மேலான ப்ராஸாத மந்திரத்தையும், சோணசைலத்தையும் சரீரமாகயுடையவராயும், ஆறு சக்கரங்களில் உண்டான பைரவர்களால் சூழப்பட்டவராயும், பிரம்மாண்டங்களாகிற வரிசைகளை ஜடமாயும் தான் சேதனமாகயிருப்பராயும், ஷோடாந்யாஸம் முதலிய பெருங்கூட்டங்களால் பெருமையான அநேக ஜ்வாலையோடு பிரகாசிக்கிறவராயும், ஸத்யம் ஞானம், இவைகளுக்கு மாறுபடாத அத்வைததிலையையுடைவராயும் இருக்கிற சோணாத்ரி நாதனை வணங்குகிறேன்.

3. உத்யத் பாஸ்கர கோடி சந்நிப முமா ஸங்க்ராந்த வாமம் சிவ:
சத்ய: சந்நத வாஞ்சிதார்த்த கடநே சந்நத்த சித்தம் சதா
வித்யா மாதவ வீக்ஷணா விஷயவந் மூர்த்தான மர்த்தேந்துந
நத்யா நாக ஜடாபிநத்த மகுடம் சோணாத்ரி நாதம் பஜே

கோடி உதய சூரியர்களுக்கு சமானமானவராயும் அர்த்த நாரீஸ்வர வடிவத்தையுடையவராயும், பக்தர்கள் விரும்பியவற்றை எப்பொழுதும் உடனே கொடுக்கின்ற மனதையுடையவராயும், பிர்ம்ம விஷ்ணுக்களுக்கு புலப்படாத அடிமுயையுடையவராயும், சடையில் கட்டப்பட்ட அர்த்தசந்திரன், நதி, நாகம் இவைகளையுடைய மகுடத்தையுடையவராயும் இருக்கிற சோணாத்ரி நாதனை வணங்குகிறேன்.

4. மூலாதார முகாம்புஜந்ம நவஷட் கக்ஷ்யாந்த ரந்தப்புரே
முக்தாநாம் லயஸீம்நி முக்தி மஹிஷி மாங்கல்ய லீலாக்ரஹே.
ஸ்ரீசிம்ஹாஸந பத்ம ஸீம்நி நிலயம் சிந்தூர சோணாதரம்
தப்த ஸ்வர்ண ஸமாந காந்தி வதனம் சோணாத்ரி நாதம் பஜே.

முக்தர்களால் அடையப்பட்ட பராசக்தியாகிய ஞான சக்தியின் மங்களகரமான விளையாடும் வீட்டில், மூலாதாரம் முதல் சஹஸ்ராரம் வரையில் உள்ள உள் வீட்டில் சிம்மாஸனத்தில் இருக்கின்றவரையும், காய்ச்சிய தங்கத்தின் காந்திக்கு சமானமான வதனத்தையுடையவராயும், சிவந்த கீழுதட்டையுடையவராயும் இருக்கிற சோணாத்ரி நாதனை பஜிக்கிறேன்.

5. மத்யே சௌத மஹாபயோர்நிதி மணித்வீப ப்ரபா விஸ்புரத்
பால ஸ்பீதி மருத்து ரோத்தர நடத் பாடீர வாடீ வ்ருதே
சிந்தா ரத்னமய ப்ரபோத ஸதனே சிம்ஹாஸநே சமஸ்திதம்
ஸேவேபீத குசா சமேத மநிஸம் சோணாத்ரி நாதம் பஜே

அமிர்த கடலனின் மத்தியில் மணித்வீபத்தில் காற்றினால் அசைந்தாடுகிற பாடலி விருக்ஷவாடிகளையுடைய சிந்தித்த பொருளை எல்லோருக்கும் அருளும் சிந்தாமணி கிரகத்தில், சிம்மாசனத்தில் இருக்கக்கூடியவராயும், அபீத குசாம்பிகையுடன் கூடியவராயிருக்கிற ஸ்ரீ அருணாசலேஸ்வரர் ஆகிய சோணாத்ரி நாதனை எப்பொழுது வணங்குகிறேன்.

6. வித்யாவீர மஹேச்வராக்ருத லகு ப்ரஸ்தார விஸ்தாரிதே
ஸ்ரீசைலேந்த்ர மதந்த்ர சந்த்ர கலிகா சூடாவதம்ஸோஜ்வலம்.
கௌரீ ஸங்கர மாநித ப்ரணயிநீ துர்வார கர்வோதயம்
ஹ்ருத்யத் காம கலா கலாப ரஸிகம் சோணாத்ரி நாதம் பஜே.

ஸ்ரீவித்யோ பாஸகர்களாகிய வீரர்களால் சுலபமாயும் விஸ்தாரபடுத்தப்பட்டதாயும், மேரு பிரஸ்த வடிவான ஸ்ரீசக்கரத்தை தனக்கு இருப்பிடமாக உடையவராயும், வளைவான சந்திர பிறையை சிரோ பூஷணமாய் அணிவதால் மிகவும் பிரகாசிக்கிறவராயும், சங்கரனால் பூஜிக்கப்பட்ட சிருங்கார கலகத்தையுடையஇ கௌரியினுடைய தடுக்க முடியாத கர்வத்தின் மேன்மையுடையவராயு காமசாஸ்திரங்களின் ரசிகத் தன்மையையுடையவராயுமிருக்கிற சோணாத்ரி நாதனை பூஜிக்கிறேன்.

7. பக்தானா மபயப்ரதம் விரசித ப்ராலேய சைலாத்மஜா
ப்ராயஸ்சித்த விதான நித்யமிலித ஸ்வந்நாம திவ்யாம்ருதம்.
ப்ராதக்ஷிண்ய வரம் ஹத த்ரிபுவனம் பாபாவளீ பாவனம்
ப்ரம்மாபிக்ய மகண்ட மத்வய ரஸம் சோணாத்ரி நாதம் பஜே.

பக்தர்களுக்கு அபயத்தை கொடுப்பவராயும், பார்வதியினால் பிராயச்சித்தமாக நித்யம் ஜபிக்கப்பட்ட திவ்ய அ மிர்தமான தன்னுடைய நாமங்களையுடையவராயும் பிரதக்ஷிணத்தினாலேயே வரத்தைக் கொடுப்பவராயும், முப்புரங்களை எரித்தவராயும், பக்தர்களுடைய பாபவரிசையை பரிசுத்தப்படுத்துகிறவராயும், கண்டிக்கப்படாதஒரே ரசத்தையுடைய ப்ரம்மம் என்ற பெயருடைய சோணாத்ரி நாதனை பூஜிக்கிறேன்.

8. ஏகாகார ஸமஸ்த லோக ஜநகம் ஹேமாத்திரி பாணாஸநம்
நாகவாஸ கிரீட குண்டலதரம் நாகேந்திர பூஷோஜ்வலம்
ராகாசந்த்ர ஸமாநகாந்தி வதனம் ராஜீவ நேத்ரார்ச்சிதம்
சோகாரண்ய தவானலம் சுபகரம் சோணாத்ரி நாதம் பஜே.

எல்லா உலகங்களுக்கும் ஒரே பிதாவாயும் மேமலையை வில்லாக உடையவராயும், நாகத்தையுடைய மகுடத்தையும் குண்டலங்களையும், ஆபரணங்களையுடையவராயும், பூர்ண சந்திரனையொத்த முகத்தையுடைவராயும் நேத்திரமாகிய தாமரையினால் அர்ச்சிக்கப்பட்டவராயும் சோகமாகிற அடவிக்கு, காட்டுத்தீபோல், இருப்பவராயும் சுபத்தை கொடுப்பவராயுமிருக்கிற சோணாத்ரி நாதனை பூஜிக்கிறேன்.

9. சாந்தம் ஜந்ம ஜராபஹம் சுபகரம் தர்மார்த்த காம ப்ரத
ஸத்யம் தைவ பலப்ரதம் சுசிகரம் தாரித்ரய துக்காபஹம்.
பூத ப்ரேத பிசாச ராக்ஷஸ ஹரம் பாபக்ன மாயுஷ்கரம்
நித்யம் சோண கிரேஸ் தவம் படதி யோ மோக்ஷம் லபேஸ்
ஸாஸ்வதம்.

பிறப்பு இறப்பு மூழுப்பு இவைகளை நீக்குபவராயும் சுப புருஷார்த்தங்களை கொடுப்பவரையும், உண்மையான தெய்வ பலத்தை கொடுக்கக்கூடியவராயும், தாரித்ரம் துக்கம் இவைகளைப் போக்கி தூய்மைப்படுத்துகிறவராயும், பூத ப்ரேத பிசாச இராக்ஷஸ குணதோஷங்களை நீக்கி ஆயுரபிவிருத்தியைக் கொடுப்பவராயும், எவர் இந்த அருணாசல ஸ்தோத்திரத்தை நித்தியம் படிக்கிறார்களோ அவர் நிரந்தர மோக்ஷத்தை அடைகிறார்கள்.



## ஸ்ரீ அபீதகுசாம்பாள் ஸ்தவம்
## (ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதர் அருளியது)

திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அபீதகுசாம்பாஸமேத ஸ்ரீ அருணாசலேஸ்வரரை ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதர், கார்த்திகை உத்ஸவ மையத்தில் தரிசிக்கச் சென்றபோது, ஸ்ரீமான் தீக்ஷிதருக்கு, குளிர்ஜுரம் வந்து, அதனால் வருந்திய அம்மகான், அம்பாளைக் குறித்து ஸ்தோத்ரம் செய்ய, ஜுரம் உடன் நீங்கிறது.

ஸ்ரீ காஞ்சி பெரியவர்களின் ஆக்ஞைப்படி, ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் இந்த ஸ்தோத்திர ரத்தினத்தைக் கல்லில் செதுக்கி, அடைபீபலம் ஸ்ரீபார்வத்யம்பாள் சந்நதியில் வைக்கப்பட்டிருக்கிறது. இதைத்தினமும் பாராயணம் செய்து வந்தால், எவ்வித நோயும் அணுகாது என்பது நிச்சயம்.

ஆனந்த ஸிந்து லஹரீ மம்ருதாம்சுமௌலே:
ஆஸேவிநாமம்ருதநிர்மிதவர்த்திமக்ஷ்ணோ:
ஆநந்த வல்லி விததே ரம்ருதார்த்ர குச்சம்
அம்ப ஸ்மராம் யஹ மபீதகுசே வபுஸ் தே.

உண்ணாமுலையாளாக வீற்றிருக்கும் அன்னையே! ஸ்தன்ய பானமே செய்யாத உலக அன்னையே! உன்திருமேனி அமுதத்தால் நனைந்திருக்கிறது, அத்தகையதிவ்யத்திருமேனிய நினைக்கின்றேன். பார்ப்போர் சேவிப்போர் கண்ணுக்கு நீ மிகுந்த குளுமையை அளிக்கிறாய் சந்திரமௌளியின் பேரானந்தக் கடலின் அலைகளில் நீந்துகிறவர்களுக்கு அமுதத்தை அளிக்கிறாய். அத்தகைய தாயே உன்னை ஸ்மரிக்கிறேன்.

நிர்நித்ர கோகநத கோமல காந்த மம்ப!
நித்யம் ஸுதா நிகரவர்ஷி பதம் த்வதீயம்
மூர்ச்சாகர ஜ்வரருஜா மம தாபிதஸ்ய
மூர்த்நி க்ஷணம் ஸக்ரு தபீதகுசே! நிதேஹி.

கடுமையான தாபஜ்வரத்திலும் மூர்ச்சை கொடுக்கும்நோயிலும் அவதிப்பட்டு, கொதிப்படைந்த என் தலையில் நின் திருவடி இருந்துகொண்டே இருக்கட்டும். அமுத வெள்ளம் அல்லவா உன் திருவடிகளில் இருக்கிறது? மலர்ந்த செந்தாமரை போல் மென்மையும் அழகும் பொருந்திய திருவடிகளை ஒரு கணப்பொழுதாவது என்சன்னிக்கு அணியாக வைத்தருள வேண்டுகிறேன்.

சீதாம்சு கோடி ஸுஷமா சிசிரை: கடாக்ஷை:
அவ்யாஜ பூத கருணாரஸ பூர பூர்னை:.
கர்ப்பூர தூளிமிவ திக்ஷு ஸமா கிரத்பி:
அம்ப! க்ஷணம் ஸ்நபய மாம் அருணாத்ரி மாந்யே!.

அருணாமலையாள் போற்றும் என் தாயே. கோடி சந்திரனின் குளுமைபோல் குளிர்ச்சியுடையதும், திசைகள்தோறும் இறைபடும் கற்பூர தூளி போன்றதும் எவ்வஹை பலனையும் எதிர்பாராது கருணை மழை பொழியும் உனது கடைக்கண்பார்வைகளாலே என்னை ஒருகணம் நனைப்பாயாக. (குளிர்விப்பாயாக)

ஆவிர்ப்பவ க்ஷண மபீதகுசே புரஸ்தாத்
அம்ப! ஜ்வரேண மஹதா மம தாபிதஸ்ய
யேந த்வதங்க்ரி ருசி ஜால ஸுதா ப்ரவாஹே
மக்நஸ் ததைவ தநு தாப மமும் த்யஜேயம்.

தாயே, முதலில் நீ என் முன் க்ஷண நேரம் தோன்றுவாயாக. மிகுந்த ஜ்வரத்தினால் கொதிப்படைந்து இருக்கிறேன், பாத கமலங்களிலிருந்து பாய்கிற அமுத வெள்ளத்தில் மூழ்கி இந்தக் கொடிய தாபத்தைப் போக்கிக் கொள்கிறேன் அம்மா!.

நாநாவிதைர் நளினஜாத லிபி ப்ரக்லுப்தை:
ஆநீத மூர்ச்ச மதிகம் க்ஷுபிதைர் ஜ்வராத்யை:.
ஆச்வாஸய க்ஷண மபீதகுசே! கராக்ர
க்ரீடா கநத் கநயீ ஹல்லக ஸௌரபேண.

தாயே, பலவகை ஜுரத்தால் உடல் கொதிப்படைந்த நிலையில் கதிகலங்கி, மூர்ச்சாக்ராந்தனாய், செய்வதறியாமல் இருக்கிறேன்.

உன் கைவிரல்களில் விளையாட்டாகத் தாங்கியிருக்கும் பொற்றாமரை மலரின் மணத்தை என்மீது வீசி எனக்கு அமைதியை அறிவிப்பாயாக.

**கண்டேவிஷம் விஷமுசோ புஜகா: கபர்த்தே**
**பார்ச்வே ச பூதபதய: ப்ரமதாஸ்ச்ச பீமா:**
**சோணா சலேசமுபஸ்ருத்ய பஜேத கோ வா**
**ந ஸ்யாத் தவாம்ப ஸ்விதே யதி ஸந்நிதாநம்.**

கழுகத்தில் விஷம், சடைமுடியில் விஷத்தைக் கக்கும் ஸர்ப்பங்கள், இருபுறமும் பூதகணங்கள், பயங்கரமான ப்ரமதகணங்கள் இவை யாவும் சோணமலையானிம் இருப்பதனால் யாராவது இத்தகையவனை அணிகுவார்களா? மாட்டார்கள். உன் ஸாந்நித்யம் சோணாசலேசரிடம் இருப்பதனால் தான் அனைவரும் வந்து ஸேவிக்க முடிகிறது. தூய்மை இருக்கும் இடத்தில் பேதைமை இல்லை அல்லவா?

**சக்திர் ஜகத்ஜனன பாலந பஞ்சநேஷு**
**போகேஷு திவ்யமஹிஷீ தருணேந்துமௌளே:.**
**ஸித்திக்கர ப்ரணயிநீ தவ ஸந்நிதாநம்**
**யந் நாஸி தஸ்ய தத்அபீதகுசே ந ஜாநே.**

உலக ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கார்யங்களில் நீ சக்தியாக விளங்குகிறாய். இளமதியைச் சிரஸ்ஸில் தரித்திருக்கிற சந்திரமௌளீ ஸ்வராருடைய இன்ப அனுபவங்களுக்குத் திவ்ய பட்ட மஹிஷியாக விளங்குகிறாய். ஆகவே உனது ஸந்நிதானம் கை கண்டபலனைக் கொடுக்கிறது. அப்படி இல்லையானால் யார் அறிய முடியும் அம்மா?

**த்வம் ஸாக்ஷிணீ ப்ரளய பைரவ தாண்டவாநாம்**
**த்வம் சேஷிணீ ஸஹரி தாத்ரு சராசராணாம்**
**த்வம் மோசிநீ ஸகல ஸம்ஸ்ருதி ஜாலகாநாம்**
**த்வாம் ப்ரஹ்ம ஸம்விதம் அபீதகுசே! நமாமி.**

உலக அன்னையான அபீத குசாம்பிகே, உன்னை வணங்குகிறேன். ப்ரளய கால பைரவ நடனங்களுக்கு நீ சாக்ஷியாக இருக்கிறாய். ப்ரம்மா, விஷ்ணு, சராசங்கள் அனைத்துக்கும் நீ தலைவி, பலவகை இன்னல்களிலிருந்து எம்மை விடுவிக்கிறாய். ஆகவே நீயே ப்ரம்மத்தை அறிந்த ப்ரம்ம ஸம்வித்தாக விளங்குகிறாய். அத்தகைய உன்னை வணங்குகிறேன்.

ஓம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

(தோத்திரமும்-பொருளும்) (ஆதிசங்கரர் அருளியது)



உபாஸகானாம் யதுபாஸநீயம்–
உபாத்த வாஸம் வடசாகி மூலே.
தத் தாம தாக்ஷிண்ய ஜுஷா ஸ்வமூர்த்யா–
ஜாகர்த்து சித்தே மம போதரூபம். 1

கடவுளை உபாஸிப்பவர்கள் முக்கியமாக உபா ஸிக்க வேண்டியவரும், ஆல விருக்ஷத்தின் அடியி லிருப்பவரும், தெற்கு முகமாக அமர்ந்த மூர்த்தியு மான அறிவே உருவமான ஜோதி என்னுடைய மனதில் விளங்கட்டும்.

அத்ராக்ஷம க்ஷண தயா நிதானம்–
ஆசார்ய மாத்யம் வடமூல பாகே.
மௌனேன மந்தஸ்மித பூஷிதேந்த்ரம்–
மஹர்ஷி லோகஸ்ய தமோ நுதந்தம். 2

எல்லையற்ற கருணைக்கு இருப்பிடமும், புன் சிரிப்பினால் அலங்கரிக்கப்பட்ட மௌனத்தினால் மகர்ஷிகளின் அக்ஞானததைப் போக்குகின்றவரும், ஆலமரத்தடியில் அமர்ந்து இருப்பவருமான ஆதி ஆசார்யரை நமஸ்கரிக்கின்றேன்.



வித்ராவிதா சேஷ தமோ கணேந்தரம்-
முத்ரா விசேஷேண முஹுர் முநீநாம்.
நிரஸ்ய மாயாம தயயா விதத்தே-
தேவோ மஹாம்ஸ்த த்தவமஸீதி போதம். 3

அக்ஞானத்தை முழுமையாகப் போக்கும் சின்முத்திரையால் மகரிஷிகளுடைய அஞ்ஞானத்தை கருணையினால் போக்கி, தத்வமஸி என்னும் வேதமஹாவாக்கியத்தன் ஞானம் விளங்குமாறு மஹாதேவன் செய்கிறார்.

அபார காருண்ய ஸுதா தரங்கை:-
அபாங்க பாதை ரவலோக யந்தம்.
கடோரஸம் ஸாரநிதாகதப்தா -
முநீநஹம் நௌமி குரும் குரூணாம். 4

கரைகடந்த கருணா ஸமுத்திரத்தின் அலைகளாகிற தன்கடைக்கண் பார்வைகளால் மிகக்குரூரமான ஜனன மரண துக்கத்தால் தவிக்கின்ற மஹரிஷிகளைப் பார்க்கின்றவரும், ஆசார்யர்களுக்கெல்லாம் ஆசார்யருமான குருதேவரை நமஸ்கரிக்கிறேன்.

மமாத்ய தேவோ வடமூல வாஸீ-
க்ருபா விசேஷாத் க்ருத ஸன்னிதாக:.
ஓங்காரரூபா முபதிச்ய வித்யாம் -
ஆவித்யக த்வாந்த மபாகரோது. 5

மிகுந்த கருணையால் ஆலமரத்தடியில் அமர்ந்தவரான ஆதிதேவர் எனக்கு பிரணவரூபமான வித்யையை உபதேசித்து, அவித்யையாகிற இருட்டைப் போக்கட்டும்.



கலாபி ரிந்தோ ரிவ கல்பிதாங்கம்-
முக்தா கலாபை ரிவ பத்தமூர்த்திம்.
ஆலோகயே தேசிக மப்ர மேயம்-
அனாத் யவித்யா திமிர ப்ரபாதம். 6

சந்திரனின் கலைகளால் செய்யப்பட்டது போன்ற வெண்ணிற அவயவங்களை உடையவரும், முத்துக் கூட்டங் களால் கட்டப்பட்டது போன்ற மூர்த்தியை உடைய வரும், அநாதியான அவித்யையாகிற இருட்டுக் கூட்டத்திற்கு விடியற்காலமானவரும், அறிவுக்கு எட்டாதவருமான, ஆசார்யனைத் தரிசிக்கிறேன்.

ஸ்வதக்ஷ ஜானு ஸ்தித வாம பாதம்-
பாதோதரா லங்க்ருத யோக பட்டம்.
அபஸ்ம்ருதே ராஹித பாத மங்கே-
ப்ரணௌமி தேவம் ப்ரணிதான வந்தம். 7

தனது வலது முழங்காலில் வைக்கப்பட்ட இடது காலை உடையவரும், பாதங்களிலும் வயிற்றி லும் சேர்த்துக் கட்டப்பட்ட யோகபட்டத்தை உடையவரும், அபஸ்மாரமென்னும் ரோகதேவதையின் அங்கத்தின் மீது வைக்கப்பட்ட வலதுபாதத்தை உடையவரும், யோகஸமாதி நிலையில் இருப்பவருமான தேவரை நமஸ்கரிக்கிறேன்.

தத்வார்த்த மந்தேவஸதாம் ருஷீணாம்-
யுவா (அ்)பி ய: ஸநுபதேஷ்ட்டு மீஷ்டே.
ப்ரணௌமி தம் ப்ராக்தன புண்யஜாலை:-
ஆசார்ய மாச்சர்ய குணாதி வாஸம். 8

எந்த ஆசார்யராவனர் தான் யுவாவாக இருந்த போதிலும், விருத்த சிஷ்யர்களான ரிஷிகளுக்கு தத்வார்த்தத்தை உபதேசிக்க வல்லவரோ, அப்படிப்பட்ட ஆச்சர்யமான குணங்களுக்கெல்லாம் இருப்பிடமான ஆசார்யனை, பூர்வ புண்ணியக் கூட்டங்களால் நமஸ்கரிக்கிறேன்.



ஏகேன முத்ராம் பரசும் கரேண–
கரேண சாந்யேந ம்ருகம் ததான:.
ஸ்வ ஜானு வின்யஸ்த கர: புரஸ்தாத்–
ஆசார்ய சூடாமணி ராவிரஸ்து. 9

ஒருகையால் சின்முத்திரையையும், ஒரு கையால் பரசுவையும் (கோடரியையும்) ஒருகையால் மானையும் தரித்தவரும், தன் முழங்காலில் வைத்த கையை உடையவருமான, ஆசார்யன் எனது முன்னிலையில் தர்சனமளிக்கட்டும்.

ஆலேபவந்தம் மதநாங்க பூத்யா–
சார்தூல க்ருத்யா பரிதானவந்தம்.
ஆலோகயே கஞ்சன தேசிகேந்த்ரம்–
அக்ஞான வாராகர பாடபாக்னிம். 10

மன்மதனை எரித்த சாம்பலைப் பூசிக்கொண்டவரும். புலித்தோலைப் போர்த்திக் கொண்டவரும், அக்ஞானமாகிற ஸமுத்திரத்திற்கு வடவாக்னி போல் இருப்பவருமான ஓர் சிறந்த ஆசார்யனை தரிசிக்கிறேன்.

சாரு ஸ்மிதம் ஸோம கலா வதம்ஸம்–
வீணா தரம் வ்யக்த ஜடா கலாபம்.
உபாஸதே கேசன யோகினஸ் த்வாம்–
உபாத்த நாதானுபவ ப்ரமோதம். 11

அழகாக ஆஸனத்தில் அமர்ந்தவரும், சந்திரசூடனும், வீணையை தரித்தவரும், விரிந்த ஜடாபாரத்தை உடையவரும், நாதப்ரம்மா நுபவத்தினால் மிக்க சந்தோஷமடைந்தவருமான, யோகியை சிலர் உபாஸிக்கின்றனர்.



உபாஸதே யம் முனயஸ் சுகாத்யா: –
நிராசிஷோ நிர்மமதா திவாஸா: .
தம் தக்ஷிணா மூர்த்தி தநும் மஹேச: –
உபாஸ்மஹே மோஹமஹார்தி சாந்த்யை 12

எந்த தக்ஷிணாமூர்த்தியை, அகங்கார மற்றவர்களும் ஆசையற்றவர்களுமான சுகர் முதலிய மஹரிஷிகள் உபாஸிக்கின்றனரோ, அப்படிப்பட்ட மஹேசனான தக்ஷிணாமூர்த்தியை மோஹமாகிற பீடை விலக நான் உபாஸிக்கிறேன்.

காந்த்யா நிந்தித குந்த கந்தலவபுர்
ந்யக்ரோதமூலே வஸந் –
காருண்யாம்ருத வாரிபிர் முநிஜனம்
ஸம்பாவயந் வீக்ஷிதை: .
மோஹ த்வாந்த விபேதனம் விரசயன்
போதேன தத் தாத்ருசா –
தேவஸ் தத்வமஸீதி போதயதுமாம்
முத்ராவதா பாணினா. 13

தனது சரீர காந்தியினால் தாமரைத் தண்டின் காந்தியை ஜயித்தவரும், ஆலமரத்தினடியில் வசிப்பவரும், கருணையாகிற அம்ருதப்ரவாஹம் போன்ற பார்வையால் முனிஜனங்களை அனுக்கிரஹிக்கின்றவரும், மிகச் சிறந்த ஞானத்தினால் மோஹமாகிற இருட்டைப் போக்குகின்றவருமான தேவர், சின்முத்திரையோடு கூடிய கையால் தத்வமஸி என்னும் ஞானத்தை எனக்கு உண்டாக்கட்டும்.



அகௌரகாத்ரை ரலலாட நேத்ரை: –
ஆசாந்த வேஷை ரபுஜங்க பூஷை: .
அபோதமுத்ரை ரநபாஸ்த நித்ரை: –
அபூர்ண காமை ரமரை ரலம் ந: . 14

வெண்மையான சரீரம் இல்லாதவர்களும், நெற்றிக்கண் இல்லாதவர்களும், சாந்தியற்ற வேஷமுள்ளவர்களும், பாம்பை ஆபரணமாகக் கொள்ளா தவர்களும், ஞானமுத்ரை இல்லாதவர்களும், தூக்கத்தை விடாதவர்களும், மேன்மேலும் விருப்ப முள்ளவர்களுமான, தேவர்களால் (சிவனல்லாதவர்களால்) எங்களுக்கு ஆவது ஒன்றுமில்லை.

தைவதானி கதி ஸந்தி சாவநௌ–
நைவ தானி மனஸோ மதாநி மே.
தீக்ஷிதம் ஜடதியா மனுக்ரஹே–
தக்ஷிணாபி முகமேவ தைவதம். 15

உலகில் எத்தனையோ தெய்வங்கள் உள்ளன. அந்த தெய்வங்கள் எனக்கு பிடித்தமில்லை. மந்தபுத்தி உள்ளவர்களை அனுக்கிரகம் செய்வதில் வ்ரதம் கொண்டவரும், தெற்குமுகமாய் அமர்ந்திருப்பவருமே எனக்கு தெய்வம்.

முதிதாய முக்தசசி நா வதம்ஸினே–
பஸிதாவலேப ரமணீய மூர்த்தயே.
ஜகதிந்த்ர ஜால ரசனா படீயஸே–
மஹஸே நமோ (அ)ஸ்து வடமூல வாஸினே. 16

ஆனந்தம் கொண்டவரும், அழகான இளம்மதியை, பாலசந்திரனை சிரஸ்ஸில் தரித்தவரும், விபூதியை தரித்துக்கொண்டதால் அழகுவாய்ந்த சரீரம் உள்ளவரும். உலகமாகிற இந்திரஜாலத்தைச் செய்வதில் சமர்த்தரும், ஆலமரத்தினடியில் வஸிப்பவருமான தேஜஸ்ஸுக்கு நமஸ்காரம்.



வ்யாலம்பிநீபி: பரிதோ ஜடாபி: –
கலாவசேஷேண கலாதரேண.
பச்யல் லலாடேன முகேந்துனா ச –
ப்ரகாசஸே சேதஸி நிர்மலானாம். 17

நான்குபக்கங்களிலும் தொங்குகின்ற ஜடைகளாலும், ஒரு கலையே மீதமுள்ள பிறைச்சந்திரனாலும், கண்ணுள்ள நெற்றியாலும், பிரகாசிக்கின்ற சந்திரன் போன்ற முகத்தாலும், நிர்மலர்களான மஹான்களுடைய மனதில் விளங்குகின்றீர்.

உபாஸகனாம் த்வ முமா ஸஹாய:
பூர்ணேந்து பாவம் ப்ரகடீகரோஷி
யதத்ய தே தர்சன மாத்ரதோ மே
த்ரவத் யஹோ மானஸசந்த்ரகாந்த: 18

பார்வதியுடன் கூடிய தாங்கள், உபாஸிப்பவர்களுக்குப் பூர்ணசந்திரனாக இருக்கும் தன்மையை வெளிப்படுத்துகிறீர். யாது காரணத்தால் தங்களை தரிசித்த உடனேயே என் மனமாகிற சந்திரகாந்தக்கல் உருகுகின்றது, ஆச்சரியம்.

யஸ் தே ப்ரஸன்னா மநு ஸந்ததாநோ –
மூர்த்திம் முதா முக்த சசாங்க மௌலே:.
ஐச்வர்ய மாயுர் லபதே ச வித்யாம் –
அந்தே ச வேதாந்த மஹா ரஹஸ்யம். 19

எவன் பாலசந்திரனை சிரஸ்ஸில் தரித்த தங்களுடைய பிரஸன்ன மூர்த்தியை தியானம் செய்கின்றானோ, அவன், ஆயுள், ஐச்வர்யம், வித்யை இவைகளை அடைகின்றான். முடிவில் வேதாந்தத்தின் பரமரஹஸ்யமான தங்களை அடைவான்.

தக்ஷிணாமூர்த்தி துதியுரை முற்றும்.

உ
திருச்சிற்றம்பலம்

# ஆலயவிழாவும் தெய்வத்தேரும்



## ரதோத்ஸவ விளக்கம்

### "திருத்தேர் தரிசனம் திவ்யதரிசனம்"

சிவாய ருத்ராய சிவார்ச்சிதாய
மஹானுபாவாய மஹேச்வராய
ஸோமாய ஸூக்ஷ்மாய சுரேச்வராய
சோனாத்ரிநாதாய நமச்சிவாய.

உலகெலாம் வாழும் உயிர்கள் இம்மையிலும் மருமையிலும் போகமோக்ஷங்களைப்பெற்றிட இறைவனால் அருளப்பட்ட முழுமுதல் அறநூல்கள் வேதசிவாகமங்கள். இவற்றுள் மோக்ஷஸாதனமான ஞானத்தைப் பெற்றிட கர்மகாண்டங்கள் உதவும், அதில் அருள்நெறியாக பக்திமார்கம் கூறப்பட்டுள்ளது. இறைவழிபாடு ஒன்றே உயிர்களுக்கு மேன்மையைத் தரவல்லது. எனவே ஆன்றோர்கள் தம்வசிப்பிடங்களில் கோயிலை அமைத்து, உலகநன்மையைக்கருதி அங்கு பூஜை, திருவிழாக்கள் முதலியவற்றை மேற்கொண்டு வந்துள்ளனர். இவ்விதம் செய்யப்படும் கோயில் திருவிழாக்களில் அருள்தரும் அரியசெயலான தேரோட்டத் திருவிழாவின் முறையினைப்பற்றி திவ்ய ரதோத்ஸவ மகிமை என்கிற தலைப்பில் சிவாகம முறைப்படி சிலகருத்துக்களை இனி காண்போம்.



## ஆலயவிழாச் சிறப்பு

ஆலயம் சென்று அங்குள்ள சந்திரசேகரர், சோமாஸ்கந்தேச்வரர் முதலான மகேசமூர்த்திகளை துதித்து வழிபடுதல் சரியையில் கிரியையாம். ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பர். இம்முறையை அப்பர் சுவாமிகள் ஒரு பாடலில் விளக்குவார்.



நிலை பெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீ வா
நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர் வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந் தேத்திப் புகழ்ந்து பாடித்
தலை யாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சய போற்றி போற்றி யென்றும்
அலை புனல் சேர் செஞ்சடையெம் மாதீ யென்றும்
ஆரூரா வென் றென்றே யலறா நில்லே. (திருநாவுக்கரசு நாயனார்)

ஆலயங்களில் விதிப்படி உற்சவம் செய்பவர்களுக்கும், செய்விப் பவர்களுக்கும் பாவம் நீங்கும், ஞானமுண்டாகும், அங்கு அசுரர்கள்களின் தொல்லைநீங்கி அமைதியும் வளமும் பெருகும். இதனை சேக்கிழார் பெருமான் பிறவிப்பயன் என்று பெரியபுராணத்தில் கூறுவார். அது.

மண்ணி னிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ண லார டியார் தமை யமுது செய்வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்
உண்மை யாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார்.
(பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் புராணம்)

# பத்துநாள் உற்சவ தத்துவவிளக்கம்

**முதலாம்நாள் விழா**

ஆலயத்தின் மகோற்சவநாள் பத்தினுள் முதல் நாள் விழாவானது, பல பத்தான்மாக்கள் ஸ்தூலதேகத்தை நீக்கிக்கொள்ளுவதற்காகச் செய்யப் படுவதாகும். பரமவைத்தியராகிய சிவபெருமான் ஸ்தூலசூக்குமமாகிய இருவகைப் பிரபஞ்சங்களையும் மருந்தாக நமக்குத் தந்தது, மலமாகிய நோயை நீக்கி அஞ்ஞானத்தைக் கெடுத்துச், சிவஞானத்தை விளக்கிச் சிவானந்தப் பெரும்பேறு தந்தருளுதற் பொருட்டேயாம்.

**இரண்டாம்நாள் விழா**

இரண்டாம்நாள் விழாவானது தூலசூக்குமம் நீங்குதற்பொருட்டும்,

**மூன்றாம்நாள் விழா**

மூவினையும், முப்புத்தியும், முக்குணமும், மும்மணமும், முக்குற்றமும், முப்பிறப்பும், முப்பற்றும் நீங்குதற்பொருட்டும்,

**நான்காம்நாள் விழா**

நாற்கரணமும், நால்வகைத் தோற்றமும், நீக்குதற்பொருட்டும்,

**ஐந்தாம்நாள் விழா**

ஐம்பொறி செயலும், ஐந்து அவஸ்த்தைகளும், ஐந்துவகை மலங்களும் நீக்குதற்பொருட்டும்,

**ஆறாம்நாள் விழா**

காமம் குரோதம் முதலானவை ஆறும், கலையாதியாறும், வினைக் குணமாறும், பதமுத்தியாறும், நீக்குதற்பொருட்டும்,

**ஏழாம்நாள்விழா**

ஏழுவகைப்பிறப்பும், கலாதிஏழும், மாயாமல குணங்களேழும் நீக்குதற் பொருட்டும்,

**எட்டாம்நாள்விழா**

இறையின் எண்குணம் விளக்குதற் பொருட்டும்,



**ஒன்பதாம்நாள்விழா**

மூன்றுருவும், முத்தொழிலும், மூன்றிடத்துறைதலும் இல்லையென்ற பொருட்டும்.

**பத்தாம்நாள்விழா**

பரமானந்தகடலில் ஆன்மா அழுந்துதற்பொருட்டும் செய்யப்படுவதாகவும், இவற்றினை விழாக்கிரியைகள் உணர்த்துபவைகளாகவும் சைவாகமநூலான 'ஸ்ரீமத் பிம்பதந்த்ரம்" சிவோத்ஸவவிதிபடலம் கூறுகின்றது. இவ்வாகமம் கூறும் மகோற்சவ உண்மையைச் "சைவசமயநெறி" எனும்நூலில் பொதுவிலக்கணத்து 346ம் திருக்குறளில் ஆறுமுகநாவலர் விசேடஉரையிற்காண்க. கூடுதலாகப் பலநாட்களில் செய்யப்படும் பெருவிழாக்களில் ஒவ்வொரு நாளும் இக்கருத்துகளே தனித்தனியாக நடுவிலேயே சிறப்புடனே விளக்கிடுவனவாகச் செய்யப்படுகின்றனவாகும். கொடியேற்றமும், தீர்த்தவாரியுமே முதலும் முடிவுமான கருத்தைக் கொண்டவையாகத் திகழ்வனவாகும்.

## விழா வகைகளின் பயன்கள்

"உத்ஸவம் என்பது (உத்+ஸவம்) உத்–சப்தபாஷிதம்; ஸவம்–சிருஷ்டி; அதாவது சிருஷ்டி மார்க்கத்தைக் குறிப்பது. (படைத்தலை உணர்த்துவது)

இவ்வுற்சவம் ஆறுவிதமும், வ்ருஷயாகாதி பக்தோத்சவாந்தம் உள்ள பதினெண்கிரியையு முடையது.

| | | | |
|---|---|---|---|
| 1. பைத்ருகம் | – 12 நாள் | 4. பார்த்திவம் | – 5 நாள் |
| 2. சௌக்யம் | – 9 நாள் | 5. சாத்விகம் | – 3 நாள் |
| 3. ஸ்ரீகரம் | – 7 நாள் | 6. சைவம் | – 1 நாள் |

இன்னும் பல விதங்களுமுண்டு. 18 கிரியைகள் முதலிய பல விவரங்களையும், அகோரசிவாசாரியார் இயற்றிய க்ரியாக்ரம ஜ்யோதிகா ஆறாம்பாகமான, "மஹோற்சவ விதி" என்னும் நூலில் காணலாம்.

**சூக்ஷ்மாகமப்படி உத்ஸவ தினங்கட்குப் பலன்**

| | | | |
|---|---|---|---|
| 1 நாள் – | ராஜவிருத்தி; | 12 நாள் – | முத்தி. |
| 3 நாள் – | சிவத்தைச் சந்தோஷிப்பித்தல் | 13 நாள் – | சர்வசித்தி. |
| | | 15 நாள் – | ஜனங்கட்கு சுகம். |
| 5 நாள் – | போகப்ரதம்; | 17 நாள் – | புண்யப்ர தம். |
| 7 நாள் – | சிவப்ரியம் | 19 நாள் – | சர்வபாபஹரம். |

## காமிகாகமப்படி உற்சவதினங்கட்குப் பலன்கள்

1 நாள் – சிவப்ரீதி.
3 நாள் – கிராமரக்ஷை.
5 நாள் – பூதரக்ஷை.
7 நாள் – கிரிஜாப்ரியம்.
9 நாள் – லோகரக்ஷை.
11 நாள் – புக்தி.
13 நாள் – சாந்நித்யம்.
15 நாள் – நரருக்கு சௌக்யம்.
17 நாள்– ஜனங்கட்குப் புஷ்டி.
19 நாள்– புபுக்ஷு கட்கு விருத்தி.
21 நாள்–சர்வதேவப் பிரியம்
12 நாள் – சுரருக்கும், சகலருக்கும் பிரீதி.

## அயனம் முதலிய உற்சவபலன்

அயனோற்சவங்கட்கு – புண்யபலம்.
மாசோற்சவங்கட்கு – ராஜதோஷம், மகாதோஷங்கள் நிவர்த்தி,
அமாவாசைக்கு – தாரபுத்ராதி இஷ்டகாம்யசித்தியும், புண்யபலமும்.
பௌர்ணமி – சகலபாப நிவாரணம்.

இவ்வாறே 27 நக்ஷத்ரோற்சவங்களுக்கும் பலன் சொல்லப்பட்டுள்ளது. இன்னும் உள்ள விவரங்களை முன்னர்க்கூறிய "மஹோற்சவ விதி" என்னும் நூலில் காண்க.

## தேவாலய உத்ஸவம் (கோயில் திருவிழா)

தேவாலயங்களில் திருவிழாக்கள் நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூன்றுவகையில் அனுசரிக்கப் படுகிறது. இந்த மூவகையிலும் தேரில் ஊர்வலம் அல்லது ராஜவீதிவலம் நடைபெறுகிறது. பழனி, திருச்செந்தூர் போன்ற பலதலங்களில் பெரிய திருத்தலக் கோயில்களில் தேரோட்டம் தினமும் நடைபெறுகிறது.



கோயிலில் உள்ள இறைவன் திருவிழாவில் புறப்பாட்டின்போது கருணையோடு உலகில்உள்ள சகல ஜீவராசிகளுக்கும் தனது காருண்ய அருட்பார்வையால் சாம்பவீதீக்ஷையினை செய்வித்து சேவார்த்திகளுக்கு, மனதில் மலபரிபக்குவத்தை உண்டாக்கி, இவ்விதம் மலநீக்கத்தைப்பெற்ற ஜீவான்மாக்கள் அனைத்தும் முக்திபேற்றினை அடையக்கூடிய அரிய வாய்ப்பினை ஆலயத்தில்

நடத்தப்படும் உற்சவங்கள் ஏற்படுத்தி, அவை நமக்கு, பெரிதும் உதவி செய்கின்றன. கோயிலின் மூலஸ்தானத்தில் பூஜிக்கப்படுகின்ற இறைவனே, உற்சவமூர்தங்களில் எழுந்தருளி, சுற்றுத்தெய்வங்கள் சூழ்ந்திருக்க கோயிலுக்கு வெளியில் வீதிவலம் வருவதே உற்சவம் என்பதாகும். உற்சவமானது இறைவன் உயிர்களுக்குச்செய்து உதவுகின்ற ஐந்தொழில்களை உணர்த்துவதாகும். உற்சவக்கிரியைகள், பஞ்ச கிருத்யங்களின் அம்சமுள்ள தத்வ பாவனைகளை விளக்கும் அரிய செயல்களாகும்.



திருவாரூர் திருத்தேர்

## உத்ஸவம் என்ற சொல் விளக்கம்

உத்ஸவம் என்றசொல் படைப்பாற்றலை உணர்த்துவதாகும், இதில் உத் + ஸவ என்ற இரண்டில் உத் என்பது உண்டுபண்ணுதலையும், ஸவ என்பது ச்ருஷ்டி என்பதையும் காட்டுவதாகும், உத் என்ற பதம் ஞானம்அளித்தலை குறிப்பதாகவும் ஆகும். இதனைக்கூறும் காரணாகமச்சான்று இதுவே.

**ஸவ இத் யுச்யதே ஸ்ருஷ்டி: ததுத் ஸ்யாத் சப்தபாஷிதம்.**
**உத்பூதஸ் ஸ்ருஷ்டி காரித்வாத் உத்ஸவக் கதிதோ மயா.**

மேலும் உத்தரகாரணாகமமானது, புக்தியையும் முக்தியையும் விழா தரவல்லதாக சிறப்பித்துப் பொருள்கூறுகிறது. அதற்கான சான்று இதுவேயாம்.

**உத் சப்தம் ஞான மித்யுக்தம் ஸர்வகல்யாண காரணம்.**
**போக மோக்ஷ மிதி ஞேயம் சதுர்வித மிதி ஸ்மிருதம்.**

உத்ஸவம் என்பது பலவகைப்படும், ஒருநாளில்செய்வது முதலாக, மூன்று, ஐந்து, அல்லது ஏழுநாள் என்று செய்யப்படுவது உத்ஸவத்தின் ஒரு வகைமுறை. இவற்றின் மும்மடங்கு நாட்களில் அதாவது ஒன்பதுநாள்

முதலாக பதினைந்துநாள், 21 நாட்கள், இருபத்தேழுநாட்கள்வரை ஒற்றைப்படையான நாட்களில் செய்வது **மஹோத்ஸவம்** எனப்படுவது மற்றொரு சிறப்புமுறை.

## மஹோத்ஸவம் (ப்ரம்மோத்ஸவம் பெருவிழா)

மஹோத்ஸவமானது ஒன்பதுவகையாக, உத்தமாதி பேதங்களில் கூறப்படுகின்றன. **கொடியேற்றம்** முதலாக **கொடியிறக்கம்** வரையிலான கிரியைகளைக் கொண்டதாகச் செய்யப்படுவது **மஹோத்ஸவம்** அல்லது **பிரம்மோத்ஸவம்** என்பதாகும். உத்ஸவத்தை ஸூக்ஷ்மாகமம் உத்தமாதியாக ஒன்பது வகையில் கூறுகிறது. அவை 1,3,5 நாட்களில் செய்யப்படுபவை **அதமத்ரயம்** என்றும் 7,9,11 நாட்களில் செய்யப்படுபவை **மத்யமத்ரயம்** என்றும் 13,15,17 நாட்களில் செய்யப்படுபவை உத்தமத்ரயம் என்றும் கூறுகிறது. **சுப்ரபேதாகமம்** ஒன்பதுநாள்விழா **உத்தமம்** என்றும், ஏழுநாள்விழா **மத்யமம்** என்றும், ஐந்துநாள் விழா **அதமம்** என்றும் கூறுகிறது. உத்ஸவத்தில் மாஸத்தின் சிறப்பு நக்ஷத்திரத்தில் **தீர்த்தவாரி** செய்யப்படும். ஆகையால் இந்த உத்ஸவத்தை ஆண்டுதோறும் செய்யவேண்டும். இந்த மஹோத்ஸவமே மக்களுக்கு தீக்ஷைப்பயனைத் தருவது, பாவத்தை நீக்கக்கூடியது, ஸர்வமங்களத்தையும், ஞானத்தையும் தரவல்லது என்கிறது உத்தரகாரணாகமம். **தீக்ஷையே உத்ஸவம் விழா** என்பதற்கான சான்று.

**பரம் சாம்பவ தீக்ஷாக்யம் உத்ஸவம் பாபநாசனம்.**
**ஸர்வ கல்யாண மித்யுக்தம் உத்ஸவம் ஞான ஸம்பவம்.**
**தஸ்மாத் உத்ஸவ மாக்யாதம் உத்ஸவம் ப்ரதிவத்ஸரம். (காரணம்)**

இந்த பெருவிழா எனும் மஹோற்சவம் என்பது பேரீதாடனபூர்வகம், த்வஜாரோஹணபூர்வகம், அங்குரார்ப்பணபூர்வகம் என்று மூன்று வகையில் துவங்கப்படும். இதனை மாலையில் துவங்கி, இரவில் முடிப்பர். இதில் ஏழாம் நாளிலோ அல்லது ஒன்பதாவது நாளிலோ தேரோட்டம் பகலில் மட்டுமே செய்யப்பட்டு, அம்மாலையில் பரிகாரமாக ப்ராயச்சித்த அபிஷேகம் செய்யப்படும். உற்சவத்தின் க்ரியைகள் பலவாறாக பலஎண்ணிக்கையில் கூறப்படுகின்றன. **மஹோத்சவக்கிரியைகள் பதினெட்டு.** இதனால் **மஹோத்சவமானது** அஷ்டாதசக்ரியாவளியைக் கொண்டதாகும். அவைகள் முறையே 1.வ்ருஷயாகம் 2.த்வஜாரோஹணம் 3.ப்ருஹத்தாளம் 4.அங்குரம் 5.யாகசாலை 6.அஸ்த்ரயாகம் 7.யானக்ரமம் 8.பலிதானம் 9.பரிவேஷம் 10.நீராஜனம் 11.கௌதுகம் 12.தீர்த்த ஸங்க்ரஹணம் 13.சூர்ணோத்ஸவம் 14. தீர்தோத்ஸவம் 15.த்வஜ அவரோஹணம் 16. ஸ்நபனம் 17. விவாஹம் 18.பக்தோத்ஸவம் ஆகியன பதினெட்டுகிரியைகள் என்று **காமிகாகமம்** கூறுகிறது.

# மஹோத்ஸவத்தின் 18வகை (அஷ்டாதச) கிரியைகள் (பெருவிழாவின் பதினெண்கிரியைகள்).

மஹோத்ஸவம் என்பது நூற்றுக்கணக்கான கிரியைகளை உள்ளடக்கி இருக்கிற போதிலும், அவை அனைத்தையும் பதினெட்டிற்குள் அடக்கிச்சேர்த்து, பதினெட்டுவகையாக ஆகமங்கள் விளக்கியுள்ளன. இதற்கான சைவாகமசான்று மஹோத்ஸவவிதிமுறையில் சிறப்பாகக் கூறப்படுகிறது. 18கிரியைகளின் வரிசைமுறையைக்கூறுகின்ற சைவாகம மகோத்ஸவ அஷ்டாதச கிரியாவளிக்கான சான்று,



பிரதமம் விருஷயாகம் ச துவஜாரோஹம் த்விதீயகம்.
பிருஹத்தாளம் திருதீயம்ச சதுர்த்தம்ச அங்குரார்ப்பணம்.
யாகசாலா லக்ஷணம்ச அஸ்த்ரயாக மதப்பரம்.
ஸப்தமம் பலிதானம்ச யானநக்கிரமம் அதாஷ்டமம்.
நவமம் பரிவேஷம்ச தசம் நீராஞ்சனக் கிரமம்.
ஏகாதசம் கௌதுகம்ச துவாதசம் தீர்த்த ஸங்கிரஹம்.
சூர்ணோத்ஸவம் த்ரயோதச்யாம் சதுர்தச்யாம்து தீர்த்தகம்.
அவரோஹம் பஞ்சதசம் ஷோடசம் ஸ்நபனம் பவேத்.
வைவாஹிகம் ஸப்ததசம் பக்தோத்ஸவ மதப்பரம். (காமிகம்)

இதன்படி முறையே அவை, 1. விருஷயாகம், 2. துவஜஆரோஹணம், 3. பிருஹத்தாளம், 4.அங்குரம், 5. யாகசாலை, 6. அஸ்திரயாகம், 7. பலிதானம், 8. யாநகிரமம், 9. பரிவேஷம், 10. நீராஜனம், 11. கௌதுகம், 12. தீர்த்தசங்கிரஹணம், 13. சூர்ணோத்ஸவம், 14. தீர்த்தஉத்ஸவம், 15. துவஜஅவரோஹணம், 16. ஸ்நபனம், 17. விவாஹம், 18. பக்தோத்ஸவம் ஆகியன. இவ்விதமாக காமிகாகமம் 18ஆகக்கூறியதையே வீராகமம் 20ஆக கூறுகிறது.

உத்ஸவத்திற்கான ஆகமக்கிரியைகள். பொதுவாக உத்ஸவ கிரியைகள் யாவும் விருஷயாகம் முதலாக பக்தஉத்ஸவம் வரையிலாக இடம்பெற்று விளங்குபவையே ஆகும். சில உட்கிரியைகளின் சேர்க்கையால் இது எண்ணிக்கையில் பலவாகும். இவற்றை விரிவாக இனிகாண்போம். 1) விருஷபயாகம், 2) துவஜாரோஹணம், 3) பிரஹத்தாளம், 4) பலிதானம், 5) யாகசாலை, 6) அஸ்திரயாகம், 7) கௌதுகம், 8) யாகம், 9) உற்சவம், 10) பரிவேஷணம், 11) ரதாரோஹணம், 12) மிருகயாத்திரை, 13) சூர்ணோத்ஸவம், 14) தீர்த்தம், 15) பூர்ணாகுதி, 16) ஸ்நபனம், 17) அவரோஹணம், 18) மௌனோத்ஸவம், 19) சண்டயாகம்,



தியாகராஜர் ஆழித்திருத்தேர்

20) பக்தோத்ஸவம் என்று வீரதந்திரம் இருபதாக விளக்குகின்றது. "துவஜாரோஹாத்யவரோஹந்தா கிரியா உத்ஸவ உச்யதே". என்கிற காமிகாகமவசனத்தின்படி கொடியின் ஏற்றம்முதலாக, இறக்கம்வரையிலான பல கிரியைகளை உள்ளடக்கியதே உத்ஸவம் என்றறிக. மேற்கண்ட அஷ்டாதசகிரியையும், முறையைக்கூறாது, முன்பின்னிருப்பானேன்? எனில், அவை முறையே இருப்பது முக்கியம் ஆயினும், அதைப்பொதுவாயும், அவரவர் விருப்பத்திற்குஏற்ப ஒருமுறையை பின்பற்றும் வகையில் பயனுள்ளதாகவுமிருப்பதை உத்தேசித்து, அந்தந்த நடைமுறையில்உள்ள தலத்திலும், சிஷ்டாசாரமாய் முன்னதாய்பின்னதாய் அவ்விடங்களுக்கு வேண்டியவாறு அமைத்து நடத்தப்பட்டுவருகின்றன. எடுத்துக்காட்டாக மூன்றுஅங்குரத்தில் அதிவாசத்திற்கும், தீர்த்தத்திற்கும் ஆன இருஅங்குரங்கள் அதிகம் வழக்கில் பின்பற்றப்படுவதுஇல்லை. இவற்றை விரிவாக விளங்கிக் கொள்ளுவதற்கு, ஆகமங்களில்உள்ள உத்ஸவவிதிகளை முதலில் நாம் விளங்கிக்கொள்வதால் இவற்றுள் அடங்கிஉள்ளதும், முன்னர் செய்யத்தக்கவையும் (பூர்வாங்கக் கிரியைகள்), பிரத்யஹகிரியைகள் (உத்ஸவத்தின்தினசரிக்கிரியைகள்), தீர்த்தாங்கமான கிரியைகள், (உத்ஸவத்தின் கிராமப்பிரதக்ஷிணாங்கமான கிரியைகள் மற்றும் பின்னர் செய்யத்தக்க உத்தராங்கக்கிரியைகள் என்று கிரியைகளைப் பலவாறு பகுத்துஉணரலாம். இவ்வாறு உத்ஸவத்தைக் கொண்டாடும் நடைமுறைகளும் பலவாகும்.

## உத்ஸவக்கிரியைகளில் பஞ்சகிருத்யம் (பெருவிழாவில் இறையின் ஐந்தொழில்நிலைகள்)

உத்ஸவகாலத்திலேயே, செய்யப்படுகிற ஒவ்வொரு கிரியையும், சிருஷ்டி முதலிய ஒவ்வொரு கிருத்தியத்தைக் குறிப்பதால், இக்கிரியைகள் ஒவ்வொன்றும், ஆன்மாக்களது பாசமாகிய மலத்தை நீக்கி வீடுபேற்றை அருளுவதற்காகவே கூறப்பட்டுஉள்ளன என்பதை இதன் மூலம் உணரவேண்டும். இதனையே காரணாகமம், பகுத்து அந்தந்த கிருத்திய போதகமாக விளக்கிஉள்ளது. அதாவது, அங்குரார்ப்பணம், வாஸ்துசாந்திபூஜை, கல்யாண உத்ஸவம், உத்ஸவயாகம், பேரீதாடனம், இவைகள் **சிருஷ்டிகர்மம் (படைத்தல்)** என்றும், தேவதாஆவாஹனம், யாத்ராஸ்நபனம், துவஜாரோஹணம், வாஹநோத்ஸவம், ஸந்தியா ஆவாஹநம் இவைகள் **ஸ்திதிகர்மம் (காத்தல்)** என்றும், பலிபூஜை, தீர்த்தாங்குரம், ரக்ஷாபந்தனம், கணயாகம், அஸ்திரயாகம், இவைகள் **ஸம்ஹாரகர்மம் (அழித்தல்)** என்றும், துவஜஅவரோஹணம், மிருகயாத்ரா, கிருஷ்ணகந்தம் இவை **திரோபாவகர்மம் (மறைத்தல்)** என்றும், சக்தியாத்ரா, மத்ஸ்யலீலா, சண்டேசபூஜை, குருபூஜை இவைகள் **அநுக்ரஹகர்மம் (அருளுதல்)** என்றும் இவ்விதம் ஆகமம். உத்ஸவத்தின் முக்கியகிரியைகளை ஐந்தொழிலடிப்படையில் பகுத்துவிளக்கிஉள்ளது.

## சோமாஸ்கந்தமூர்த்தியின் தனிச்சிறப்பு, (உத்ஸவ சிவகௌதுக பேரவிதானம்)

சைவாலயப்பெருவிழாவில் வீதிஉலாவிற்கு எழுந்தருளும் மாஹேசமூர்த்தங்களுக்குள், மிகவும் சிறந்தது, **சோமாஸ்கந்த மூர்த்தம்** ஆகும். இதற்கான காரணத்தைக் காரணாகமம் சிறப்பாக விளக்குகிறது. அது, உலகசிருஷ்டியை உணர்த்துகிற உத்ஸவத்தில், பஞ்சகிருத்ய மூர்த்தங்களான இருபத்திஐந்துவகை மாகேசமூர்த்தங்களும், எவ்வாறு சாம்பவீதீட்சைக்குரிய, **1.மண்டலம், 2.கும்பம், 3.அக்னி, 4.ஆசார்யர், 5.சிஷ்யர்** எனப்படும் இறைவனது ஐவகையான அதிஷ்டானங்களும் எவ்வாறு பொருந்தி அமைந்தவையாகும்? என்று சுவாமிஷண்முகப் பெருமான், சிவபெருமானிடம் கேட்க, அதற்கு சிவனார் விளக்கிக்கூறியுள்ளது யாதெனில், மண்டலமூர்த்தி, 1.அஸ்திரமூர்த்தி கலசமூர்த்தி, 2.சோமாஸ்கந்தமூர்த்தி, 3.அக்னிமூர்த்தி, 4.ஆசாரியர், 5.சிஷ்யர்கள் என்று தீட்சைக்கு உரிய ஐந்தும் விழாவில் இருப்பதாகவும், இவற்றில் இங்கு தீக்ஷிக்கப்படாதபக்தர்கள், ஆசையற்ற தீக்ஷிதர்கள்,



ஸமய ஆசாரமில்லாதவர்கள், சிஷ்யர்களாக இருப்பார்கள் என்று விவரித்துள்ளார். மேலும் சிவன் உமை கந்தன் என்று மூவருமுள்ள சோமாஸ்கந்த மூர்த்தத்தில் பரமேச்வரனே வாகீச்வரர் என்றும், (சோமாஸ் கந்தரின் அருகில் தனித்துஉள்ள சக்தி) போகசக்தியே வாகீச்வரி என்றும், இருவரின் நடுவில் உள்ள கந்தப்பெருமானே ஞான சிவாக்னி என்றும் விளங்கி இருப்பதனாலேயே இம்மூர்த்தி யின் வீதிஉலாஉத்ஸவம் சாம்பவீ தீக்ஷை எனக்கூறப்பட்டு, அதில் பக்தர்கள் அருள்நோக்கால் பயனடைவர் என்றும் கூறப் படுகிறது. சிவாக்னி வடிவினரான ஸ்கந்தர் இடம்பெறாத மற்றய 24வகை மாகேச்வரமூர்த்தங்களில் தேவன்தேவிஇருவர் மட்டுமே இருப்பார்கள். ஆதலால் சோமாஸ்கந்தமூர்த்தமே மஹோத்ஸவத்திற்குஏற்ற உத்தமசிவமூர்த்தம் ஆகும் என்றுஅறிக. சோமாஸ்கந்தமூர்த்தம் இல்லாதபக்ஷத்தில் ஆலயத்தின் உத்ஸவத்திற்கு 1) நடராஜர், 2) சந்திரசேகரர், 3) கல்யாணசுந்தரர், 4) உமேசர் ஆகியவற்றுள் ஏதேனும் ஒருமூர்த்தத்தை முக்கியமாக கைக்கொண்டு மத்யமபக்ஷமாக விழாவை செய்துகொள்ளலாம் என்று ஆகமங்கள் மாற்று வழிமுறையைக் கூறுகின்றன. சோமாஸ்கந்தமூர்த்தத்தின் மகிமைகூறும் ஆகமசான்று,

வாகீச்வரா கிருதிச் சம்பு: வாகீசீ போக சக்திகா.
சிவாக்னி ஸ்கந்த இத்யுக்தம் தஸ்மாத் ஞானாக்னிருச்யதே.
வீக்ஷ்யதே ஸர்வ லோகாநாம் சோமாஸ் கந்தேச் வரம் விது:
அன்யே ஷாமபி தேவாநாம் தேவதேவீ த்வயம் ததா.
சிவாக்னி பாவநா நோசேத் அன்யாம்ச சிவபேதகான்.
வர்ஜயேத் முக்யம் வக்ஷ்யாமி உத்ஸவேசம் ப்ரகீர்த்திதம்.
சோமாஸ் கந்தேச்வர அபாவே நடேசம் சசிசேகரம்.
வைவாஹ்யம் ஸ்யாத் உமேசம்ச மத்யமம் பரிகீர்த்திதம்.

(உத்தரகாரணாகமம்)

## தேவீஸஹித தேவபேரத்தின் அவசியம்.
## (தேவனின் புறப்பாட்டில் தேவியின் தேவை).

உத்ஸவமானது பஞ்சகிருத்தியங்களையும் உணர்த்துவதற்காகவும், சிவனார், ஞானகிரியா சக்திகள் இருவருடன்சேர்ந்து சர்வகர்த்தாவாக விளங்கி ஐந்தொழிலாற்றுவதை உணர்த்திடுவதற்காகவும், சோமாஸ்கந்த மூர்த்திக்கு, தனித்த வீரசக்தியுடன் கூடியதாகவே உத்ஸவம் செய்யப்படவேண்டும். சோமாஸ்கந்தேச்வரருடன் ஒரேபீடத்தில், கந்தருடன் பிரியாதிருக்கிற யோகசக்தியும் பிரிக்கப்படாமல் உத்ஸவத்தில் கட்டாயம் இருந்திடவேண்டும். இருசக்திகளில் எதையும் விலக்கிவைக்கக்கூடாது. விலக்குவதால் பஞ்சகிருத்யபாவனையை உலகிற்கு உணர்த்த முடியாமையால் அச்செயல் பெருங்குற்றமாகஆகும். சிவனின் உத்ஸவகாலத்திலேயே சக்திஉத்ஸவத்தையும், சக்தியின் உத்ஸவகாலத்தில் சிறப்பாக சிவனுக்கு உத்ஸவத்தையும் செய்யவேண்டும் என்கிறது காரணாகமம். சோமாஸ்கந்தமூர்த்தத்தின் வீரசக்தியை மற்றய மாகேசமூர்த்தங்களோடு புறப்பாட்டில் சேர்த்திடுதல்கூடாது. அவ்வாறு சேர்ப்பதானது பெருங்குற்றமாகி நமது குலத்தை அழிக்கும். ஆதலால் தேவிசிலையை மாற்றிசேர்த்திடுதல், விலக்கத்தக்க, கூடாத செயலாகும். நடேச்வரரை மட்டில் தேவியின்றியும், சிறப்புவிதியாக பெருவிழாவில் பூசைக்கு ஏற்கலாம். இனி உத்ஸவகிரியைகளை தனித்தனியே அறிவோம்.

## யானக்ரமவிதி. (இறைஊர்வலம்வரும்முறை)
## (புறப்பாட்டுக்கிரியை 18ல்8வது விழாக்கிரியை).

சிவனது மஹோத்ஸவத்தின் ஊர்வலபுறப்பாட்டு நெறிமுறைகளாகிய யானக்ரமம் பற்றி இனிகாண்போம். கோயிலில் உத்ஸவம் துவங்கப்படுவதற்கு பலநாட்கள் முன்னதாகவே வாஹனாதிகளை, அதாவது தேவாலயம், ஆலயத்தினுடைய மண்டபங்கள், வாஹனங்கள், தேர் வீதிஉலாவிற்கான தளவாடப்பொருட்கள், உபசரிப்புக்கொடை, தீபஇஷ்டி, (தீவிட்டி), வண்ணக் கொடிகள், தீபதண்டவகைகள், விதானம் (மேல்கட்டுவிரிப்பு), பதாகை (புகழ்பலகை, சின்னங்களின்பதாகை), அஷ்டமங்களம்,தசாயுதங்கள்,பலவகைஇசைக்கருவிகள் முதலானவற்றை சுத்திகரித்தும், தூய்மைப்படுத்தியும், புதுமைப்படுத்தியும் ஏற்றவகையில் உரிய சீர்திருத்தங்கள் செய்துமுடித்திடவேண்டும். ஆலயம்,கோபுரம், மண்டபம், ஒய்வுமண்டபங்கள், ஆலயசுற்றுப்பகுதிகள், வீதிகள் இவற்றை

சமப்படுத்தியும், இவற்றில் இருக்கும் புற்கள், செடிகொடிகள், முட்கள், தடைகள், தூசிகள் இவற்றை அகற்றியும், ஊர், வீதி, ஆலயம் இவற்றை வாழைமரம், மாவிலை, தென்னங்குலை, கரும்பு, வண்ணத்துளிகள், தோரணமாலை முதலியவைகளால் நன்கு அலங்கரிக்கவேண்டும். ஸர்வவைபவங்களுடன் முதலில் கிராமதேவதையான பத்ரகாளிக்கு அவளது கோயிலில் காளீஉத்ஸவத்தைச்செய்து, பின்பு விநாயகருக்கு சிறப்புபூஜையுடன் அப்பம், மோதகம் நிவேதித்து, விநாயகருக்கு உத்ஸவத்தைச்செய்து, பிறகு மறுநாள் சிவோத்ஸவத்தின் துவக்கத்தைச் செய்திடுவதே ஆகமமுறையாகும்.

இவ்விதமாக வீதிகள் வாஹனாதிகளை அலங்கரித்து, சிறியதோஜீலோ, ரங்கத்திலோ, கேடகத்திலோ, எடுப்புப்பல்லக்கிலோ, பலவகை அலங்காரத்தோடும், புஷ்பபிரபைகளுடனும் கூடியவாறு தேவனைதேவியுடன் மூலஸ்தானத்திற்கு கொண்டுசென்று ஆவாஹித்து, பூசித்து, தூபதீபங்களைச்செய்து புஷ்பாஞ்ஜலிகளால் அர்ச்சித்து, சக்திபேரம் முதலாக, பக்தபேரத்தோடும் கூடியதாக, தேவனின் சிவபெருமானது கிராமபிரத'ஜீணமாக, நகர்வலவீதிஉலாவரும் சுற்றுப்பயணத்தை, புறப்பாட்டைத்துவக்கவேண்டும். திருவீதிஉலா வரவேண்டியதன் விதிமுறையில் முன்னதாக அலங்காரத்துடன் கூடியவைகளாக பேரி (முரசு), உடுக்கை, படஹம் (தம்பட்டம்), ஜல்லரீ (ஜால்ரா), சங்கு, எக்காளம் (கரஹளம்), மத்தளம், மிருதங்கம், குழல், தாளவகைகள், பஞ்ச முகவாத்யம் முதலான 18வகையான உத்ஸவத்திற்கு உரிய வாத்தியங்களுடன் பயணத்தில் வீதியில் உடன் செல்லும் சைவர்களும், இவர்களுக்கு இடையில் முறையே அதிகார நந்திகேச்வரரும், பிறகு விநாயகர், பிறகு சுப்ரமண்யர், நடுவில் தேவியுடன் கூடிய சோமாஸ்கந்தர், முன்போ அல்லது பின்புறத்திலோ பக்த பேரங்கள், அதன்பிறகு சண்டேச்வரர் என்று இம்முறையிலேயே தெய்வங்களின் மூர்த்தங்கள் வீதிஉலா நகர்வலப்புறப்பாட்டை மேற்கொள்ள வேண்டும்.



வீதிஉலாவரும்பொழுது அர்ச்சகரும், அதிகாரிகளும் தவறாமல் உரியமுறையிலே தேவனின் உடனேயே வரவேண்டும். பயணத்தின் துவக்கம் முதல் வீதிஉலாவருதலின் முடிவு வரை தொடர்ந்துவரவேண்டும். இதன் முறைகளும் ஆகமங்களில் கூறப்படுகின்றன. காப்புக் கட்டிக்கொண்டுள்ள ஆசாரியர் அல்லது அவரால் நியமிக்கப்பட்டவர், சீடர், உறவினர் இவர்களில் ஒருவர் தவறாமல் தேவனுக்கு வலதுகைப்பக்கத்தில் இருந்துகொண்டு, வீதிஉலா வருகையில் மூலமந்திரம் அல்லது அகோரமந்திரத்தை எண்ணிக்கைக் கணிப்பின்றி ஜபித்தவாறு உடன்வரவேண்டும். தேவனுக்கு இடதுபாகத்தில் அரசன் அல்லது தர்மகாதிகாரி ஒருவர் சாமரம் வீசியவாறோ, வணங்கியபடியோ உடன்வரவேண்டும். இதனைக்கூறும் சான்று,

கணிகா நடனைஸ் ஸார்தம் ராகா நுக்கிரமதஸ் தத : .
வீணா மிருதங்க பேரி யப்ஜ தாள ஸ்வஸ்திக மல்லரீ .
படஹா நக கண்டாத்யா : வாதயேத் தேவ திருப்தயே.
காந்தாராத்யைஸ் ஸ்வரைஸ் ஸம்யக் கானம் குர்வீத பக்தித : .

இவ்வாறு தேவனுக்கு எதிர்புறத்தில் நர்த்தகர், குழல்ஊதும்கிற வம்சகர், பாடுகிற காயகர், மிருதங்கம்வாசிக்கிற மத்தளகர் ஆகியோரும், இருபக்கங்களில் நிருத்தத்துடனேயே வருகின்ற ருத்திரகணிகா நாட்டியமாதர்கள், முன்புறத்தில் மஹாசைவர்கள், பின்புறத்தில் வேதாதி கோஷங்களை எழுப்பியவாறு தொடரும் வேதப்பிராம்மணர்கள், அதனைத்தொடர்ந்து நால்வகைவருணத்தார்களான மாஹேச்வர அடியார்பெருமக்கள், பொதுமக்கள் யாவருமாக இவ்விதம் தொடர்ந்து முறையே பயணத்தில் அன்புடன் மதித்து, இறைவனுடன் பின்தொடர்ந்து செல்ல வேண்டும். இவ்விதம் உத்ஸவத்தில் இறைவனோடு செல்பவர்கள் அச்வமேதயாகம் செய்த பயனை அடைவார்கள். வீதிசுத்தம் செய்யப்படாத நிலையிலும், வீதியில் புனிதம் மற்றும் மகிழ்ச்சியற்றநிலையிலும், அலங்கரிக்கப்படாத நிலையிலும் (குப்பைகளை நீக்கிப்பெருக்கி) வீதியை சுத்தம் செய்யப்பட்டு நீர்தெளிக்கப்படாதநிலையிலும், வாத்தியஓசை இல்லாமலும், பக்தர்கூட்டத் தொடர்ச்சி இல்லாமலும், தனியாகவும், தெய்வத்திற்கு புறப்பாட்டை ஒருபோதும் செய்யக்கூடாது. மேலும் மழையில் தெய்வம் நனையாதவாறு மேல்கூரை (விதானம்) 4காலில் மூலைகளில் உடனேயே பிடிக்கப்படவேண்டும். ராஜாவிற்கு உரியஉபசரிப்புகள், கொடை, சாமரம் போன்றவை தவறாது உடனிருத்தல் அவசியம். இவை குறைவுபடின் பரிகாரத்தைச் செய்யநேரிடும். இவ்விதமாக தேவனை யானகிரமத்தில் மகிழ்வித்தல்முறை. மேலும் உத்ஸவ ஊர்வலத்திற்கு பகலில் ரங்கம், மஞ்சம், சிபிகை (பல்லக்கு),

விமானம், கேடகம், பிரபையுடன்கூடிய பீடவகைகள் இவற்றில் உத்ஸவமூர்த்தியை எழுந்தருளச்செய்யலாம். உத்ஸவத்திற்கான வாஹனங்களை ஒவ்வொருநாளும் ஒவ்வொருவகையில் ஆகமங்களில் கூறப்பட்டபோதிலும், அவற்றுள் ஏதேனும் ஒருவரிசைமுறையினை பின்பற்றி கையாளுதல் முறையாகும். சிலதினங்களிலோ, ஒருநாள் விழாவிலோ, பகலிலும் சிறப்புவாஹனங்களை கைக்கொள்ளலாம். தேர்த்திருவிழாவானது எப்பொழுதும் பகலில்மட்டுமே, தேரேற்றம் (ரதாரோஹணம்) செய்யப்பட்டு மாலையில் ரதாவரோஹணம் செய்யப்பட்டுஉரிய மூலஸ்தானத்தை அடைவிக்கவேண்டும். கட்டுத்தேர் (சிறுதேர், சப்பரம், முத்துத்தேர், கிண்ணித்தேர்கள்) வகைகளைமட்டுமே இரவில் செய்யலாம். தேவதைக்குஏற்ப வாஹனங்களின் வகைகளும், வரிசைமுறைகளும், உத்ஸவத்தின் நாள்கணக்கிற்குஏற்ப வாஹனம் வேறுபாடு உடையதாகும். இவற்றை ஆகமங்களில் உள்ளவாறு முதலில் அறிந்து, தேர்வுசெய்து, முடிவுசெய்து அதனைபிறகு மாற்றாது, தொடர்ந்து பின்பற்றவேண்டும். பெருவிழாவில் விரும்பியவாறு இதனை செய்யக்கூடாது. வீதிஉலாமுடிந்து, மீண்டும் ஆலயகோபுரத்தடி அல்லது வாயில்எதிரில் சுவாமிவரும்பொழுதில், அங்கு சிறிதுநேரம் இளைப்பாறச்செய்து, ஸகலரும், வாத்யகாரர்கள், நாட்டியநங்கையர் முதலாக வலம்வருதலாகிற பரிவேஷணத்தையும், ருத்ரகணிகையர், காளிதீபம், கும்பதீபம் தாங்கி, திருஷ்டி தோஷம் நீக்கிடும் தீபநீராஜனத்தையும் செய்துமுடித்து, பிறகு ஆரத்திஎடுத்து, இறைவனுக்கு பாததீர்த்தம்அளித்து, வரவேற்று கோயிலுக்குள் புகச்செய்து, உரியமண்டப இருக்கையில்சேர்த்து பின்பு நீராட்டிப் பூசித்தல் **யானகிரமம்** எனப்படுகிறது.



# உத்ஸவபேர யானகிரமம்
# (சுவாமிபுறப்பாட்டு விதிமுறை)

திருவிழாவில் தினமும் இருவேளையும் வீதிஉலாவருவதைச் செய்தல் அவசியம். இதற்கான ஆகம சான்று,

**யானம் பிரதிதினம் குர்யாத் அன்ஹி ராத்ரௌ மஹோத்ஸவே. ரதாதௌ சிபிகாதௌ வா பரிசாரக மூர்தசு. (காமிகம்).**

உத்ஸவத்தில் யானகபேரமான உத்ஸவமாகேசமூர்த்திகள் சூக்ஷ்மாகமப்படி முதல் நாளிலிருந்து 9நாளைக்கு முறையே 1) சந்திரசேகரர், 2)உமார்தர் (அர்நாரீசர்), 3) விருஷபாரூடர், 4) கௌரீசம்வாதலீலாமூர்த்தி, 5) கஜஹாரீ, 6) உமேசர் (சாம்பவர்), 7) கல்யாண சுந்தரர், 8) திரிபுரக்னர், 9) காலஹாரீ (மிருத்யுஞ்ஜயர்) என்று அறியவும். ஒன்பதுநாளுக்கும் இவ்விதம் ஒன்பதுமூர்த்திகள் இல்லாதபொழுதில், எல்லாநாளும் சோமாஸ்கந்தர்பேரம் ஒன்றே சிறந்தது ஆகும். அந்தந்ததேவதைக்குத் தகுந்தவாஹனங்களை முறைப்படிஅறிந்து அவற்றையே உபயோகிக்கவும். சிவனுக்கு முறையே சூ';மாகமத்தின்படி புறப்பாட்டுமுறை 1) கப்ளீ, 2) பூதம், குண்டோதரன், 3) விருஷபம், 4) முத்துபிரபை, 5) யானை, 6) புஷ்பகவிமானம் (புஷ்பயானம்) (பூப்பலக்கு), 7) சியந்தனம் (சப்பரத்தேர்), 8) குதிரை, 9) சிபிகை (பல்லக்கு) என்பவை ஒன்பது தினங்களின் புறப்பாட்டு வாஹனங்கள் ஆகும். வாஹனங்கள் இல்லாதபொழுதில் சிபிகையில் (பல்லக்கில்) யானத்தைச் செய்யவேண்டும். மழை முதலான ஏதோஒரு காரணத்தினால் கிராமப் பிரதக்ஷிணம் செய்யப்படவில்லை என்றால் திசாஹோமத்தைச் செய்யவேண்டும். இதனைக் கூறும் சான்று, '**கிராமப்பிரதக்ஷிணே ஹீனே திசாஹோமம் து காரயேத்**". என்கிறது காமிகாகமம். மேலும் ஒவ்வொரு கிரியைகளையும், உரியகாலத்திற்குள் செய்துமுடித்து, உத்ஸவத்தை காலத்திற்குள் செய்வதே பயன்தருவனவாகும் என்கிறது காமிகாகமம். இதற்கு சான்று

**ஸ்வகாலே அனுஷ்டிதாஸ் துவேதா : கிரியாஸ் ஸர்வார்த்த ஸாதகா: உக்தகால பரித்தியாகே சாந்திஹோமம்ச காரயேத்**

என்று குற்றமாகிய அந்த காலாதீதத்திற்கு காலம்கடந்த தாமதத்திற்கு பிராயச்சித்தத்தையும் கூறி, மிகவும் பெருமுயற்சியோடு உத்ஸவத்தை உரியகாலநேரத்திற்குள்ளாக செய்துமுடிக்க வேண்டும்

என்று காமிகாகமம் கட்டளை இட்டுள்ளது. மகோத்ஸவ காலத்தில் மூலமூர்த்தி முதலாக சண்டேசர் வரையிலாக அனைத்து மூர்த்திகளும், யானகமூர்த்தியுடன் செல்வதாகவும் கூறப்பட்டு உள்ளதால்மஹேசரின் ஊர்வலம் நடைபெறும் யானகாலத்தில் மூலபேரத்தை தரிசித்தல் கூடாது. உத்ஸவர் வெளியில் உள்ளபோது அறியாமையாலோ, ஆசையாலோ மூலவரை தரிசித்தால், உத்ஸவரை நிந்தித்த பாவியாகி, மறுபிறவியில் குருடனாக ஆவார்கள் என்கிறது ஆகமம். இவ்வாறு மூலபேரதரிசனத்தின் விதிமுறை பயனுக்குரிய சான்று,



விமான உருவத்தேர்

மூலாதி சண்ட பர்யந்தம் உத்ஸவே யானகம் பவேத்.
மஹேச யான காலே து மூல பேரம் ந தர்சயேத்.
மோஹேன தர்சயேத் வித்வான் அந்தத்வம் ஸமவாப்நுயாத்.

## ரதாரோஹணஉத்ஸவம் (தேர்திருவிழா).

பொதுவாக தேர்திருவிழாவானது மஹோத்ஸவத்தில் ஒருநாளில் 7வதுநாளிலோ, 9வதுநாளிலோ காலையில் ஒருவிசேஷஉத்ஸவமாய் இடம்பெறும். மேலும் ஆலயமூர்த்திகளுக்கு உரியசிறப்புகாலங்களில், இதனையே சிறுதேரில் காம்யோத்ஸவமாகவும், ரதோத்ஸவத்தைச் செய்யலாம். இதனை உத்ஸவகாலத்திலும், மேலும் ஸ்தாபனகாலம், அயனாரம்பகாலம், விஷுவ காலம், மாதப்பிறப்பு, அமாவாஸ்யா, அரசனின் பிறந்தநாள், அத்புதபுண்யதினம் இவைகளிலும் தேர்வீதிவலம்வருமாறு செய்யலாம். இந்த தேர்த்திருவிழாவை, முறையே முதல்நாள்மாலையில் சுவாமிக்கு காப்புகட்டி பூசித்து, மறுநாள்காலையில் ரதோத்ஸவம் செய்யப்படவேண்டும். பூர்வகாரணாகமம் 142ல் இதற்கான சான்று,

**தேவேசம் பிரார்த்தயேத் பூஜ்ய ரதஸ்யா ரோஹணம் பிரதி.**
**உத்ஸவே ஸ்தாபனே சைவ சாயனே விஷுவே ததா.**
**தினச்சித்ரேஷு ஸங்கிராந்தௌ துவமாவாஸ்யா மதாபிவா.**
**ராக்ஞோ ஜன்மதினே வாத ரதம் ஆரோபயேத் பிரபும்.**
**ரதாரோஹண பூர்வே து ராத்ரௌ கௌதுக பந்தனம்.**
**(காரணாகமம்)**

ஸ்யந்தனம் எனப்படுகிற சிறியவண்டித்தேரில் கோயிலுக்கு உள்வீதியிலும், தேர்த்திருவிழாவை இறைவனுக்கு விரும்பும்நாளில் காமியஉத்ஸவமாக செய்விக்கலாம் என்பது ஆகமங்களால் அறிப்படுகிறது. பெரியதேர்த்திருவிழா பகலில் மட்டுமே நீராட்டல் முடிவாக செய்யப்பட வேண்டியது.

## மஹோத்ஸவ ரதோத்ஸவ விதிமுறை

பெருவிழாவில் மஹோத்சவத்தின் யானக்ரமத்தில் தேர்த்திருவிழா எனும் தேரோட்டம் ரதாதௌசிபிகாதௌவா என்பதாக மதன்மையான மிகச்சிறப்பானதாகும். சிவோத்ஸவத்தில் பஞ்ச மூர்திகளுக்கும் தனித்தனியே தேரோட்டம் செய்யப்படுவது உத்தமமான செய்முறையாகும். இயலாத பொழுதில் பரமபதியான சிவபெருமானுக்கு மட்டும் ஒரே தேரோட்டமாகவும், அத்தேரிலேயே மற்ற நான்குமூர்த்திகளையும் நாற்புறமும் சுற்றிலுமாக வைத்தும் வீதிவலம் செய்விப்பதும் ஒருவித முறையாகும். இதனைக்கூறும் ஆகமச்சான்று.



**கணேசம் கார்திகேயம் ச பார்வதீ சண்டநாயகம்.**
**மகேச்வரம் ச பஞ்சைதே ரதயானம் ப்ருதக் ப்ருதக்.**
**அதவா ஏகயானம் வா தேவ மாரோபயேத் தத:**
**ப்ரத்யேகம் ரத யானம் ஸ்யாத் உத்தமம் பரிகீர்திதம்.**
**அதவா ஏகயானே ச தேவஸ் சிம்ஹாஸனே பவேத்.**
**கௌரீம் ச வாமபாகே ச த்விதீயா வரணம் ச்ருணு.**
**கணேசம் கார்த்திகேயம் ச த்விபார்ச்வே பரிகீர்த்திதம்.**
**பச்சாத் தேசே து சண்டேசம் ப்ரதக்ஷிண க்ரமேண வா.**
**(ரதயானவிதி, காரணாகமம்)**

பூர்வகாரணாகமத்தின் 142வது ரதோத்ஸவபடலத்தின்படி இம்முறையை அறியலாம். இதன்படி ஒரே தேரில் பஞ்சமூர்திகளையும் இருக்கச்செய்யும் முறையாவது, தேரின் மைய சிம்மாசனத்தில் **சிவனையும்,** அவருக்கு அருகில் இடது பாகத்தில் கௌரீஅம்மையையும், அடுத்த

சுற்றாக உள்ள பகுதியில், வலது இடது எனும் இரு பக்கங்களில் முறையே விநாயகரையும் முருகனையும் அமர்த்தி, பின்புறத்தில் பக்தசண்டேசனையும் வைத்து புறப்பாட்டை செய்வது ஒரு முறை. அல்லது வடக்கில் உமையவள், எதிரில் கந்தன், தெற்கில் கணேசர், பின்புறம் மேற்கில் சண்டேச்வரர் என்று அமரச்செய்து புறப்பாட்டை செய்யலாம். இன்றும் பலசிவஸ்தலங்களில் பஞ்ச ரதோத்சவம் (5தேர்) பிரம்மோத்ஸவத்தில் நடைபெற்றுவருகிறது. இன்றும் திருமயிலை கற்பகாம்பாள் ஸமேத கபாலீஸ்வரர் ஆலயம் மற்றும்பல ஆலயங்களிலும் ஐந்து தனித்தனித் தேரோட்டமாக தேர்த்திருவிழா நடைபெறுகின்றது.


நடராஜர்தேர் சிதம்பரம்

## ரதோத்ஸவ காலவிதி
## (தேர்த்திருவிழாவிற்கு ஏற்ற காலங்கள்)

இத்தகைய தேரேற்றத் திருவீதிவலத் திருவிழாவை பலநாள் செய்யப்படுகிற மகோத்சவத்தின் செயலில் மட்டும் அல்லாது, பல சிறப்பு தருணங்களிலும் ரதோத்சவத்தை செய்யலாம் என்கிறது ஆகமம். ஶ்ரீமத் காரணாகமம் படலம் 142ல் கூறுவதாவது, உத்சவத்திலும், எவ்வகையான விழாவிலும், ஒருநாள் விழாவிலும், ஸ்தாபனகாலங்களிலும், புதுத்தேரை ஏற்கும்பொழுதும், ரதப்ரதிஷ்டா காலத்திலும், அயனோத்ஸவம், விஷுபுண்யகாலங்கள், உகந்தநக்ஷத்திர நாட்கள், மாஸப்பிறப்புதினம், அமாவாசைதினம், தெய்வத்திற்கு உகந்ததிதி அல்லது திருநக்ஷத்திரதினம், தேசத்து அரசனின் பிறந்தநாள் இவைகளில், இறைவனை தேர்மீது ஏற்றி, ஊர்வலமாக திருவிழாவை சிறப்பாக செய்யலாம் என்று சைவாகமங்கள் கூறுகின்றன. இதற்கான சான்று இதுவே.

**உத்ஸவே ஸ்தாபனே சைவ சாயனே விஷுவே ததா.**
**தினச் சித்ரேஷு ஸங்கிராந்தௌ த்வமாவாஸ்யா மதாபி வா.**
**ராக்ஞோ ஜன்மதினே வாத ரதம் ஆரோபயேத் ப்ரபும்.**

**(காரணாகமம்)**



தேவோத்ஸவ சகடைத்தேரில் உலாவாஹணம்

## சங்கநூல்களில் திருவிழாக்கள்

சங்ககாலத்தில் பன்னிரு திங்களிலும் விழாக்கள் நடந்திருக்குமேனும் அக்காலப் பனுவல்களால் இற்றைக்கு அறியத்தகும் விழாக்கள் சிலவேயாம்.

### 1. கார்த்திகைப் பெருவிழா

கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் மாலையில் வீடுகளிலும், திருக்கோயில்களிலும் திருவிளக்கேற்றி அவற்றின் வாயிலாக ஒளிவளர் விளக்காக விளங்கும் ஒப்பற்ற இறைவனை வணங்கி வந்தனர். இக்குறிப்புக்கள் பல இடங்களில் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளன.



'நலமிகு கார்த்திகை நாட்ட வரிட்ட –
தலை நாள் விளக்கில்'
'கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்றன'
'இலையில் மலர்ந்த முறையில் இலவம் –
கலிகொள் ஆயம் மலிபு தொகுப்பு எடுத்த –
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்ற'
என வருவன இவ்விழாவைப் பொதுவகையில்
குறிப்பனவாம்.

'மழைகான் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயன் மறு நிறங் கிளர மதி நிறைந்து

அறுமீன் சேரும் அகலிருள் நடு நாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறன் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம'

எனவரும் அகப்பாடலால் கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளொடு கூடிய, நிறைமதி நாளில் இவ்விழா நிகழ்ந்தது என்பதும், அந்நாளில் தெருவை அலங்கரித்து, வீடுகளில் விளக்கேற்றி வைத்து விழவயர்ந்தனர் என்பதும், இவ்விழா தலைவனும், தலைவியும் இயைந்திருந்து செயத்தக்கது என்பதும், தெரியவருகின்றன.

'அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலை இல மலர்ந்த இலவ மொடு
நிலையுயர் பிறங்கல் மலை இறந் தோரே'



எனும் பாடலில் பெருவிழா எனப் பொதுவகையால் குறிக்கப் பெறினும், இலவம்பூக்களை ஒப்ப வரும் விளக்கம் எனவரும் உவமையால், ஈண்டுவரும் விளக்கம் விளக்கு என்பதும், உவமைப் பன்மையால் அவ்விளக்குகள் பல என்பதும், அவ்வாறான விழா "கார்த்திகை விளக்கீடு" என்பதும் பெறுதும்.

அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே



எனவரும் நற்றிணைப் பாடலால் கார்த்திகைப் பெருநாளில் அறம் செய்தலைக் கடப்பாடாகக் கொண்டிருந்தனர் என்பது தெரிய வருகிறது.

## உ. திருவாதிரை விழா

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளாகிய திருவாதிரை நாளில் சிவபெருமானை நோக்கி எடுக்கப் பெற்றது இப்பெரு விழாவாகும். இதனைக்

'கனைக்கும் அதிர்குரல் கார்வான நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறு நிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க'



எனவரும் பரிபாடலால் அறியலாம். இப்பெருவிழா திருவாரூரில் கி.பி.

7ஆம் நூற்றாண்டில் மிகச்சிறப்பாக நிகழ்ந்துவந்தமையை நாவுக்கரசர் பெரும் பத்திமையோடு குறித்துப் போற்றுவர். பிற்காலத்தில் இவ்விழா தில்லையில் சிறப்பாக நிகழ்ந்து வந்தமை,



'ஆரார் வந்தார் அமரர் குழாத்தில்
அணியுடை ஆதிரைநாள்
நாராயண னொடு நான்முகன் அங்கி
இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்குழாங்கள்
திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும்
பல்லாண்டு கூறுதுமே'

எனவரும் பல்லாண்டு பாடலால் அறிய இயலுகின்றது.

### 3. பங்குனி விழா

பங்குனி திங்களில் வரும் நிறைமதியோடு கூடிய உத்தரம் பெருநாளில் சோழர் தலைநகரமாய உறையூரில் இவ்விழா பெருஞ் சிறப்பொடு திகழ்ந்து வந்துள்ளது.



வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர்
இன்கடுங் கள்ளின் உறந்தை ஆங்கண்
வருபுனல் தெறிதரும் இக்கரைப் பேரியாற்று
உருவ வெண்மணன் முருகநாறு தண்பொழில்
பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்
வீயிலை அமன்ற மரம்பயில் இறும்பிற்
தீயில் அடுப்பின் அரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே
கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு'

என வருவனவற்றான் இவ்வுண்மை அறியப்படும்,

### 4. உள்ளி விழா

இவ்விழா பற்றிய விளக்கம் தெரிந்திலது. நற்றிணையில் உள்ளிவிழவின் வஞ்சியும் சிறிதே' என்றொரு குறிப்புக் காணப்படு கிறது. தலைவியின் மார்பு நலத்திற்கு, உள்ளிவிழா நடக்கும் வஞ்சியின் (கருவூர் நலனும் இணையாகாது என்பது இதன் பொருளாகும். நற்றிணையில் இவ்விழா நிகழ்வுபற்றி அறியத்தகும்

குறிப்புக்கள் வேறு இலவேனும், அகநானூற்றில் இதுபற்றியதொரு குறிப்புக் காணப்படுகின்றது. அது, இவ்விழா நாளில் ஆடவர்கள் இடுப்பில் மணியைக் கட்டிக்கொண்டு ஆடுவர் என்பதாகும்.

'கொங்கர் மணியரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழவின் அன்ன
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே' என்பது அப்பகுதியாகும்.

## 5. பூந்தொடை விழா

வில்வீரர்கள் தம் பயிற்சியைத் தொடங்கும் முதல்நாளில், தம் தெய்வத்தை வணங்கி விழவெடுத்து அப்பயிற்சியைத் தொடங்கினர். இதற்குப் பூந்தொடை விழா என்று பெயர். இதனை,

'வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலை நாள் அன்ன
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்'



எனவரும் பகுதியால் அறியலாம். கண்ணப்பநாயனார் வரலாற்றிலும் இதுபற்றிய குறிப்புக்கள் உள்ளன. இதுகாறும் கூறப்பட்ட விழாக்களுள் கார்த்திகைவிழாவும், பங்குனிவிழாவும் திருக்கோயில்களிலும் இல்லங்களிலும் நிகழ்ந்து வந்தனவாம். இன்றும் இவ்வீரிடங்களிலும் நடந்துவரும் எஞ்சிய இருவிழவுகளுள் பூந்தொடைவிழா வில் வீரர்களின் பயிற்சிக் கூடங்களில் நிகழ்ந்ததாகும். உள்ளிவிழாப் பற்றிய குறிப்பு தெரிந்திலது.



ஆரூர் ஆழித்தேரோட்டக்காட்சி

## திருக்கோயில் விழாக்கள்

இனித் திருக்கோயில்களிலேயே நிகழ்ந்த விழாக்களாக அறிவன ஐந்தாம். அவை 1. சிவபெருமானுக்குரியது. 2. முருகவேளுக் குரியது. 3. காமவேளுக்குரியது 4. இந்திரனுக்குரியது, 5. குடமுழுக்குவிழா.

### 1. சிவபெருமானுக்குரிய விழா

திருக்கோயில்களிலிருக்கும் திருவுருவங்களை வீதிகளில் எழுந்தருளுவித்து, விழாக் கொண்டாடுதல் பற்றி விரிவான குறிப்புக்கள் சங்கஇலக்கியங்களில் காணக் கிடைத்தில. எனினும், குறிப்பாக அத்தகைய விழாக்கள் நிகழ்ந்தன என அறிதற்கு இடமுளது.

'முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெரும நின் சென்னி'

எனவரும் பாடற்பகுதி இதனைக் குறிப்பாக அறிவிக்கின்றது.



'நீரும் நிலனுந் தீயும் வளியும்
மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவின் தூரியங் கறங்க'

எனவரும் பகுதியால் சிவபெருமானுக்கும், அப்பெருமானை முதல்வனாகக் கொண்ட திருமால், முருகன் முதலிய கடவுளர்க்கும் விழா நிகழ்ந்தமை தெரிய வருகிறது.

### 2. முருகவேளுக்குரிய விழா

குறிஞ்சி நிலத் தெய்வமாகப் போற்றப்படும் தெய்வம் கந்தவேளாகும். இப்பெருமானுக்கு அந்நிலத்தன்றிப் பிறநிலத்தும் விழா நிகழ்ந்திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. இதனை,



'ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்
கால்கோள் என்று ஊக்கி'

என வரும் கலித்தொகையானும்

'ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள்
காண்மினோ எனக் கண்டு நிற்குநரும்'
எனவரும் மணிமேகலையானும் அறியலாம்.

### 3. காமவேள் விழா (மன்மதன்விழா)

இன்ப எழுச்சிக்குரிய, தெய்வமாகக் கருதப்படும் இக்காம வேளுக்கு விழா எடுத்திருந்தமை, இது மன்மதன் கோயில்விழா ஆகும்.

காமவேள் விழவாயின் கலங்குவள்
பெரிதென ஏமுறு கடுந்திண்தேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே
எனவரும் கலித்தொகையால் அறியலாம்.



### 4. இந்திர விழா

பண்டைப் பெருமக்கள் மழைவளம் பெருக இந்திரனுக்கு விழாவெடுத்து வந்தனர். தைத்திங்களின் முதல்நாள் பொங்கல் திருநாளாகும். அது கதிரவனை நினைந்து வழிபடுவது. அதற்கு முன்னை நாளைப் போகி என்பர். போகி – இந்திரன். அமருலகில், பெரும் சுகபோகத்தைத் துய்த்துக் கொண்டிருப் போனாதலின், இவன் போகி எனப்படுவான், மருதநிலத் தலைவனாகிய இவனை நினைந்து, வழிபடும்நாள் போகியாகும். இது இன்றும் நிகழ்ந்து வருவதாம். இனிச் சிலப்பதிகாரத்தும், மணிமேகலையிலும், இந்திரவிழாவைப் பற்றிய குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் இந்திர விழாவெடுத்த காதை என்றே ஒருகாதையும் உள்ளது.

இந்திரவிழா காவிரிப்பூம்பட்டினத்தில் அகத்திய முனிவரின் ஆணைவழித் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியனால் தொடங்கப் பெற்றதென்றும், அவ்விழா இருபத்தெட்டு நாட்கள் நடந்ததென்றும் மணிமேகலை கூறுகின்றது.


மரச்சட்ட அடுக்குத்தேர்

## 5. குடமுழுக்கு விழா (பிரதிஷ்டோத்ஸவம்)

திருக்கோயிலில் இறைவனைக் குறித்தற்குரிய திருவுரு வொன்றை எடுப்பித்து, அதன்கண் அத்தலை நாள் முதல், அவ்விறைவன் நின்றருளுதற்காகச் செய்யப்பெறும்விழா, **குடமுழுக்குவிழா** எனப்படுவதாகும். சேரன் செங்குட்டுவன் வஞ்சிமா நகரில் கண்ணகியின் திருவுருவத்தை எழுந்தருளுவித்துக் கடவுள் மங்கலம் செய்தமை இவ்வாறாய விழாவாகும். கண்ணகியின் திருவுருவை எழுந்தருளுவித்துக் குடமுழுக்கு விழாச் செய்தருளியமையைக் காட்சிக் காதை முதலாக வாழ்த்துக் காதை ஈறாகவுள்ள பகுதியில், சிலப்பதிகாரம் விரிவாக அறிவிக்கின்றது.

## அரசரைப் பற்றிய விழாக்கள்

இவையன்றி வேந்தன் நிலையில், அவர்தம் பிறந்தநாள்விழாவும், முடிபுனைந்த நாள் நினைவாக ஆண்டுதோறும் கொண்டாடப்பெறும் முடிசூடியநாள் விழாவும், மாற்றார் மதிலை அழித்தமை குறித்த வெற்றிவிழாவும், போரில் வெற்றி பெறுதற்குத் துணையாய் இருந்த வாள்விழாவும் கொண்டாடப்பட்டு வந்தன. இவற்றுள் வாள் மங்கலம் இருவகைத்து. ஒன்று வாளினை வாளா வாழ்த்துவது. பிறிதொன்று கொற்றவையோடு தொடர்புபடுத்தி வாழ்த்துவது.



திரிபுராந்தகர் சிவனார் சிற்பம்

'பிறந்த நாள்வயின் பெருமங்
கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமும்
நடைமிகுத் தேத்திய குடை நிழன் மரபும்
மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமும்
வென்ற வாளின் மண்ணோடு ஒன்ற'

எனவரும் தொல்காப்பியப் பகுதிகளால் இவ்விழாக்களைப் பற்றிய குறிப்பு அறியப்படும்.

## இறையனார் களவியல் வழி அறியத்தகும் விழாக்கள்

இனி இவ்விழாக்களுட் சில, இறையனார் களவியலுரையில் குறிக்கப்பட்டிருப்பதும் ஈண்டு நினைவு கூர்தற்குரியதாம்.

ஊர் துஞ்சாமை என்பது, ஊர்கொண்ட பெருவிழா நாளாய்க் கண்படையில்லையாமாக, அதுவும் இடையீடாம் என்பது. அவை, மதுரை ஆவணியவிட்டமே, உறையூர்ப் பங்குனியுத்திரமே, கருவூர் உள்ளிவிழாவே என இவை போல்வன பிறவும் எல்லாம் அப்பெற்றியான பொழுதும் இடையீடாம் என்பது.

## ஆளுடைய பிள்ளையார் வழி அறியத்தக்க விழாக்கள்

இனித் திருஞானசம்பந்தர் திருமயிலாப்பூர் திருப்பதிகத்தில் ஆனி முதல் வைகாசி ஈறாக வரும் பல விழாக்களைக் குறித்தருளுகின்றார். அவை பத்துவகையாம்.

### 1. பெருஞ்சாந்தி விழா

இது ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி ஆகிய நான்கு திங்களில் ஒன்றில் செய்யப்படும் விழாவாகும். இதனைப் **பவித்திரோற்சவம்** என அழைப்பர்.

பவித்திரம் – பூணூல். தங்கம், வெள்ளி, பட்டு, பருத்தி, நூல் ஆகியவற்றுள் யாதானும் ஒன்றால் பூணூல் செய்து, வேள்விச் சாலை அமைத்து, அதன் நடுவண் மண்டலேசுவரரையும், 27 பரிவாரங்களுடன் யாகேசுவரன், யாகேசுவரியையும் அமைத்து வழிபட்டு, வேள்விக் குண்டத்தில் உள்ள எரியின் கண்ணும் வழிபட்டு, தர்ப்பனம், தீபனம், ஓமங்கள் செய்து, உயிர்கள் செய்யும் வினைகளுக்குச் சான்றாக எழுந்தருளியுள்ள மண்டலேசுவரரிடம் விண்ணப்பம் செய்து, பூணூலைத் திருக் கோவிலில் உள்ள எல்லா மூர்த்திகளுக்கும் உரித்தாக்கி, வேள்விநிறைவில் பூர்ணாகுதி செய்து, இறைவனைத் திருவீதிவலம் செய்வித்தல் இத்திருவிழாவின் நெறிமுறையாகும்.

ஐவகை மலங்களாலும் பிணிப்புண்டிருக்கும் உயிர்கள், பல குற்றங்களுக்கு ஆளாகின்றன. அன்றியும் பழவினைப் பயனாகத்



பழனித்தேரோட்டம்

தன்னாலும், பிறவுயிர்களாலும், தெய்வத்தானும் பல்வேறு துன்பங்களையும் அடைகின்றன. இவற்றையெல்லாம் உயிர்க் குயிராக உள்ள இறைவனே நன்கறிந்து வருகின்றான். ஆதலின் உயிர்க்குற்ற, இத்தீவினைப் பயன்களை அவனிடத்தேயே ஒப்படைத்து, அதன் வழி உயிர்கள் தூய்மை பெறவும், அவ்வப்பொழுதும் நாள் வழிபாட்டில் நிகழ்ந்துவந்த குற்றங்களுக்குக் கழிவாகவும் செய்யப் பெறுவதே இப்பெருஞ் சாந்தியாகும்.

'கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான் றன்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்'

என்பது ஆளுடைய பிள்ளையாரின் திருவாக்காகும்.

### உ. புரட்டாசித் திங்கள்விழா

இத்திங்களில் சிவனடியார்கட்குச் சிறந்த உணவு அளித்து வழிபடும் விழாவாகும். இதை அன்னாபிஷேகவிழா, நவநைவேத்யம் என்பர்.

'ஒட்டிட்ட பண் பினுருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்'

என்பது ஞானசம்பந்தர் திருவாக்காகும்.

### 3. ஐப்பசித் திங்கள்விழா

இத்திங்களில் திருவோணத்தில் கொடியேற்றிக் கார்த்திகையில் தீர்த்தவாரி செய்யும் விழாவாகும், திருவோணம் திருமாலுக்குரிய நாளாம். அவர் தமக்குரிய நாளில் செய்த வழிபாட்டை நினைவு கூர்ந்து இது செய்யப் பெறுவது எனக் கூறலாம். இதைச் ச்ரவணோத்ஸவம் என்பர்.

ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய்

என்பது ஆளுடைய பிள்ளையாரின் திருவாக்காகும்.

### 4, கார்த்திகைத் திங்கள்விழா

இத்திங்களில் வரும் கார்த்திகை நாளில், இல்லங்களிலும், திருக்கோவில்களிலும் திருவிளக்கிட்டு வழிபடும் திருவிழாவாகும். இவ்விழா மிகப்பழமையானது என முன்னரும் கூறப்பெற்றது.

'கார்த்திகை நாள் தளத்தேந் திளமுலையார் தையலார்
கொண்டாடும் விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்'
என்பது காழிப் பிள்ளையாரின் திருவாக்காகும்.

### 5. மார்கழித் திங்கள்விழா

திருவாதிரை எனும் நாள்மீன் இறைவனுக்கு உகந்ததாம். இந்நாளிற்குப் பத்து நாட்களுக்கு முன் தொடங்கி இந்நாளில் நிறைவு பெறும் திருவிழாவாகும், இதுபற்றி முன்னரும் கூறப்பெற்றது.

'கார்தரு சோலைக் கபாலீச் சரம மர்ந்தான்
ஆர்திரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்'

என்பது காழிப்பிள்ளையாரின் திருவாக்காகும். எதுகை நோக்கி ஆர்திரையாயிற்று.

### 6. தைத் திங்கள்விழா

தைப்பூசத் திருவிழாவென்பது மகளிர் நெய் மிகுந்த நல் உணவினை அடியவர்க்கும், வறியவர்க்கும் வழங்கி இறைவழிபாடாற்றும் விழாவாகும்.

'நெய்ப்பூசு மொண்புழுக்க ணேரிழையார் கொண்டாடும்
தைப் பூசம் காணாதே போதியோ பூம் பாவாய்'

என்பதும் அவர் திருவாக்காகும்.

### 7. மாசித் திங்கள்விழா

இது மாசித்திங்களில் வரும் மக நாளன்று, இறைவன் கடலாட்டுக் கொள்ள, அப்பெருமானுடன் அடியவரும் கடலாட்டுக் கொண்டு அப்பெருமானின் திருவுலாக்கண்டு மகிழும் நாளாகும்.

'அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம் பாவாய்' என்பதும் அவர் திருவாக்காகும்.

### 8 பங்குனித் திங்கள்விழா

இத்திங்களில் வரும் உத்திர நாள் அன்று இறைவற்கு அமுது படைத்தும், அடியவற்கு உணவு அளித்தும் பல்வேறு மங்கல ஒலிகள் முழங்கக் கொண்டாடும் விழாவாகும்.



'பலிவிழாப் பாடல்செய் பங்குனி உத்திர நாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம் பாவாய்'

என்பதும் அவர் திருவாக்காகும்.

### 9. சித்திரைத் திங்கள்விழா

இத்திங்களில் வரும் அட்டமி நாளில் பதிணென் கணங்களையும் பரவி வழிபாடாற்றி மகிழும் திருநாளாகும். இது அஷ்டமீயாகம் என்பதாம்.



'பண்ணார் பதிணென் கணங்கடம் அட்டமி நாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம் பாவாய்'

என்பதும் அவர் திருவாக்காகும்.

### 10. வைகாசித் திங்கள்விழா

இத்திங்களில் இறைவனை ஊஞ்சலில் வைத்து விழா கொண்டாடி மகிழும் நாளாகும். இது வஸந்தடோலோத்ஸவம் எனப்படுவதாம்.

'கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றப்புக் காணாதே போதியோ பூம் பாவாய்'



இதுவும் திருஞானசம்பந்தரின் திருவாக்காகும்.

# திருக்கோயிலில் நடைபெற்றுவரும் திருவிழாக்கள்

இனித் திருக்கோவிலில் நடைபெற்று வரும் திருவிழாக்களைக் காணலாம். சிவாகமங்களில் திருக்கோவில்களில் 1 முதல் 27 ஆம் நாள் வரையிலான திருவிழாக்கள் நடைபெற்று வந்ததற்கான குறிப்புக்கள் காணப்படுகின்றன.

முதல் ஐந்து நாள் வரை செய்யப்படும் விழாக்களுக்குக் கொடியேற்றம் இன்று. 1, 2 நாட்கள் வரை செய்யும் விழா **சைவம்** என்றும், மூன்று நாள் வரை செய்யும் விழா **சௌளம்**, 4, 5 நாட்கள் வரை செய்யும் விழா **பௌதிகம்** என்றும், 7 நாள் வரை செய்யும் விழா **ஸ்ரீகரம்** என்றும், 9 நாள் வரை செய்யப்பெறும்விழா **சௌக்கியம்** என்றும் அழைக்கப்பெறும். 9 நாள் வரை செய்யும் விழாவே இன்றைய நாளில் 11 நாட்களில் செய்யும் விழாவாக அமைக்கப்பட்டுள்ளது. இதனை **'நவதின துவஜாரோஹண தீர்த்தாந்த கல்யாண மகோற்சவம்'** என அழைப்பர். 17 நாட்கள் வரை செய்யும் விழா **சாந்த்ரம்** எனப்படும். சந்திரகலை 16, 17வது நித்திய கலை சிவபெருமானின் திருச்சடையில் உள்ள சந்திரனைப் போல் உள்ளது. இவ்வகையில் இவ்விழா நடைபெறும். 27 நாட்கள் வரை நடைபெறும் விழா **சௌரம்** என அழைக்கப்பெறும், கதிரவன் 27 விண்மீன்களிலும் போதரும் காலம் சௌரம் எனப் படும். இவ்விழாவிலும் 9 நாட்களே இன்றியமையாததாகக் கொள்ளப்படுகிறது.

இவற்றுள் 10 நாட்கள் வரை செய்யும் விழாக்கள் இற்றைய நாளில் பெரிதும் உள்ளன. இறைவன் செய்யும் படைத்தல் முதலிய ஐந்தொழில்கள் இப்பத்துநாள் விழாவில் அமைந்துள்ளன. மண் எடுத்தல், முளையிடுதல், கொடியேற்றம் முதலாயின படைத்தல் தொழிலைக் குறிப்பனவாம். ஊர்திகளில் எழுந்தருளுவித்தல், யாகம், பலியிடுதல் முதலாயின காத்தல் தொழிலைக் குறிப்பனவாம். தேர்த் திருவிழா, பரிவேட்டை, சாந்தணிதல் முதலாயின (அழித்தல்) ஒடுக்கத் தொழிலைக் குறிப்பனவாம். ஒலியின்றி மௌனமாக நடத்தும் விழா மறைத்தலைக் குறிப்பதாகும். நடராசர்விழா, மட்டையடி,


தங்கரதம்

திருஊடல் முதலாயின அருளலைக் குறிப்பனவாம். முதல் ஐந்து நாட்கள் நடக்கும் விழாக்கள் இறைவனின் ஐந்தொழிற் பெருக்கத்தையும், பின் ஐந்து நாட்கள் நடக்கும் விழாக்கள் அவற்றின் ஒடுக்கத்தையும் காட்டும் என்பர். பத்து நாட்கள் நடக்கும் விழா **தசகாரியவிளக்கமாக** அமைவது என்றும் கூறுவர். இனி இவ்விழாக்கள் ஞானாசிரியன் தன் மாணாக்கனுக்கு எரியோம்பல்வழியாக வினைப்பயன் நுகர்வைக் கழித்துச் சிவப்பேறு அடைவிக்கும் குறிப்பை வெளிப்படுத்துவதாகும் என்றும் கூறுவர்.

## கொடியேற்றம்

இது முதல்நாள் திருவிழாவாக நடைபெறுகிறது. அவ்வத் திருக்கோவில்களிலும் உள்ள மூலமூர்த்தியின் ஊர்தியின் வடிவை ஒரு கொடியில் எழுதி, வழிபாடு ஆற்றி, அதனைக் கொடிமரத்தின் உச்சியில் ஏற்றுவது **கொடியேற்று விழாவாகும்.** தத்துவங்கள் தோன்றும் முறைமையினை இக்கொடியேற்று விழா விளக்கி நிற்கிறது. கொடியில் எழுதப்பெற்றிருக்கும் ஆனேறு உயிரையும், அறத்தையும் குறிக்கும். இவ்விரண்டும் உயர்ந்தும், சிறந்தும் விளங்க வேண்டும் என்பதே இச்செயலின் உண்மையாகும்.

## முதல்நாள் விழா

முதல்நாள் இரவு இறைவன் மரத்தடியில் எழுந்தருளி யிருப்பதாக விளக்குவது விருட்ச வாகனமாகும். இது உலகைத் தோற்றுவிக்கும் கோலமாகும். மரத்தின் கிளைகளும், இலைகளும், தத்துவங்களையும், உயிரினங்களையும் குறிப்பனவாம். இறைவன் இருந்து செய்யும் உலகத் தோற்றங்களுக்கெல்லாம் வேர் போலத் தான் இருந்தருளுவதைக் குறிப்பதாகும். இவ்விழாவில் தலவிருக்ஷம் மரவகை கல்பகத்தரு ஊர்தியாகும்.

## இரண்டாவது நாள் விழா

காலை **சூரியப் பிரபை,** மாலை **சந்திரப் பிரபை** இவை இறையருள்வழி நிற்கும் கதிரவனும், சந்திரனும் உயிர்கட்கு வெப்பம், மழை முதலியவற்றையும் மன நிறைவையும் அருளுவதைக் குறிக்கின்றன.

## மூன்றாம் நாள் விழா

காலையில் **அதிகாரநந்தியையும்,** மாலையில் **பூதத்தையும்** இறைவன் ஊர்தியாகக் கொண்டு எழுந்தருளுவன். இவ் வதிகாரநந்தி, மான், மழு, நான்கு தோள்கள், முக்கண்கள் முதலாய வடிவுடன் இருக்கும் இறைவனின் திருவுருவைப் (சாரூப்பியம்) பெற்றவர். விஞ்ஞானகலருள்

சிறந்தவர். இவ்வாறு உயிர்கள் மல நீக்கம் பெற்று உயர்ந்து விளங்கற்கும், பூதகணங்களைப்போல் இறைவனுக்கு அணுக்கத் தொண்டுசெய்து வாழும் புண்ணியம் பெறுதற்கும் இந்நாள்விழா நடத்தப் பெறுகிறது. இது அளித்தலைக் குறிக்கும்.

### நான்காம் நாள் விழா

**நாக ஊர்தியில்** எழுந்தருளுவன். நாகம் நஞ்சையும், மாணிக்கத்தையும் மறைத்து வைத்திருந்து வேண்டும்போது வெளிப்படுத்தவும் செய்யும். இறைவனின் மறைப்பாற்றலை இது குறிப்பதாம். மறைப்பாற்றல் உயிர்க்குற்ற வினை நீங்குங்காறும் மறைத்தும், நீங்கிய பின்பு அதுவே அருள்வெளிப்பாட்டைச் செய்தும் தருவதாம். இது இறைவன் செய்யும் மறைத்தல் தொழிலைக் குறிப்பதாம்.

### ஐந்தாம் நாள் விழா

**ஆனேற்றில்** அம்மைப்பரை எழுந்தருளுவிப்பர். இறைவன் அடியவர்களுக்கு அருள்புரியுங்கால் இவ்வூர்தியில் இக் கோலத்துடனேயே வந்தருள்வான். இதனை விளக்கவே இவ்வாறு எழுந்தருளுவிப்பர். ஆனேறு அறவடிவினதாம். அது **சமம், விசாரம், மகிழ்ச்சி,** அடியவரின் **இணக்கம்** ஆகிய நான்கு அறங்களையே கால்களாக உடையது. இத்தகைய அறவடிவான உயிர்களிடத்தேயே இறைவனும் எழுந்தருளுவன் என்பதை இது குறிக்கிறது. எனவே இது அருளலாம். மால் விடையேறிய மஹாதேவனை தரிசித்தல் வீடுபேற்றைத் தரவல்லதாகும்.

இவ்வாற்றான் இவ்வைந்து விழாக்களும் முறையே ஆக்கல், அழித்தல், அளித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் குறிப்பதாகின்றன.

### ஆறாம் நாள் விழா

இறைவனை **யானை ஊர்தியில்** எழுந்தருளுவிப்பர். இவ்வுலகம் யானையின் உடல்போல் பருமனாய், ஒருகால எல்லையில் இருந்து. பின் ஒடுங்குவதைக் காட்டும்.

### ஏழாம் நாள் விழா

இறைவன் **கயிலையில்** எழுந்தருளியிருக்கும் கோலம், இந்நாளில் வலும் வரும் கோலமாம். இராவணன் கயிலையை எடுத்த பொழுது இறைவன் காலால் ஊன்றி அவன் தன் வலிகெடச் செய்தனன். பின்

அவன்தன் நரம்பால் வீணையை இசைத்து அதன்வழி இறைவனை வழிபட அப்பெருமானும் மகிழ்ந்து அவனுக்கு அருளினன். மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும், கண்ணுதலான் தன் கருணைக் கடைக் கொள்ளும் என்பது தெளிய இந்நாளில் இவ்வூர்தியைக் கொண்டருளுகின்றான் இறைவன்.

இவ் ஏழாம் நாளில் இறைவற்குத் **திருக்கல்யாணம்** செய்து வணங்கி மகிழ்வர். அவன் இவ்வாறு போகியாய் இருந்தருளுவது உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் போகங்களைத் துய்த்து வாழவேயாம். இதனைத்

'தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி! பெண்பா
லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர் காண் சாழலோ' (மாணிக்கவாசகர்)

எனவரும் திருவாசகத்தானும், 'மண்ணில் நல்ல வண்ணம்' எனவரும் ஞானசம்பந்தர் திருவாக்கானும், 'போகியாய், இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்' எனவரும் மெய்ந்நூல் கூற்றானும் அறியலாம்.

## எட்டாம் நாள் விழா

இறைவன் குதிரையில் எழுந்தருளும் நாள். இக்குதிரை மறைக் குதிரையாம். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்குமே இதன் கால்கள். கன்மமும், ஞானமுமே இரு காதுகள். பரஞானம், அபரஞானம் ஆகிய இரண்டுமே இரு கண்கள். இவ்வாற்றான் கலைஞானம், மெய்ஞ் ஞானம் ஆகிய ஞானங்களை வழங்குபவன் இறைவன் என்பதை இது உணர்த்துகிறது. பரிமேலேறிய பரமனைப் பணிவது பரகதிதரவல்லது.

## ஒன்பதாம் நாள் விழா

இறைவன் தேரேறிய பவனிவரும் இது **தேர்த்திருவிழாவாகும்.** பிண்டத் தத்துவக் கூட்டான இவ்வுடலே தேர். பத்து வகையான காற்றுகளே சக்கரங்கள். உயிர் வாளாவிருந்து நாளும் இன்பத்தினைத் துய்த்து, இறுதியில் ஒடுங்க வேண்டும் என்பதே இதன் நுட்பமாகும். முப்புரங்களை எரித்துச் சிதைத்த இறைவன் உயிர்களைக் காப்பாற்றியதை உணர்த்தும் விழாவாகக் கோடலும் ஒன்று. விரும்பும் மனோரதத்தைத் தருவது ரதோத்ஸவ ஸேவையாகும்.

### பத்தாம் நாள் விழா

காலையில் கூத்தப்பிரான் எழுந்தருளுவர். அம்பலத்திலிருந்து புறப்படுதல் தோற்றத்தையும், திருமுழுக்கு ஆடுதல் காத்தலையும், கருஞ்சாந்து அணிதல் முதலியன அழித்தலையும், வெண்சாந்து அணிதல் மறைத்தலையும், வீதிவலம் வருதல் அருளலையும் குறிக்கும்.



கோயில்திருவிழா விடைமேல் சிவன்புறப்பாடு

### பதினொன்றாம் நாள் விழா

இந்நாளில் இறைவன் எழுந்தருளித் தீர்த்தம் ஆடுவன். அதுபொழுது பலரும் அப்பெருமானை நினைந்து அப்பெருமானுடன் நீராடுவர். இது தீர்த்தவாரி எனப்படும். கடந்த பத்துநாட்களாக இறையனுபவம் பெற்ற உயிர்கள், நிறைவாக அவன் அருள்வெள்ளத்தில் திளைப்பதையே இது குறிப்பதாகும்.

### பன்னிரண்டாம் நாள் விழா

இறைவன் பிச்சைஏற்கும் கோலத்துடன் எழுந்தருளுவன். தாருகாவனத்து முனிகன்னியர்களை ஆட்கொள்ளும் முகமாக அம்முனிவர்கட்கு அருள் வழங்குதலை இதுகுறிப்பதாகும். இது பிக்ஷாடனேச்வர உத்ஸவம் எனப்படும்.

### பதின்மூன்றாம் நாள் விழா

இது பக்தசண்டேசுரர் விழா. சண்டேசுவரர் எழுந்தருளி அனைவர்க்கும் சிவபுண்ணியப் பயனை வழங்கியருளுவதைக் குறிப்பதாகும். இது பக்தோத்ஸவம் எனப்படுவதாகும். சிவனடியார்கள் விழா.

### பதினாம்காம் நாள் விழா

திருவீதியில் இதுகாறும் எழுந்தருளிய மூர்த்திகளுக்குத் திருமுழுக்காட்டி வழிபாடு செய்து, அவ்வத் திருமேனிகளையும் உரிய இருக்கைகளில் எழுந்தருளுவிப்பர். இதனைப் பிராயச்சித்தாபிஷேகம் என்பர். யாதஸ்தான ஸம்ஸ்தாபனம் என்றும் கூறுவர்.



மாமல்லபுரம் ஐந்துவகைக்கற்கோயில்கள் (ஐந்துரதம்)

## திருக்கோவிலின் தோற்றம்

கோவில் என்பது இறைவன் எழுந்தருளியிருக்கும் இடத்தில் அவன் அருள்வழி நின்று உலகம் காக்கும் அரசர்கள் இருக்கும் இடத்திற்கும் உரிய பெயராம். கோ–யாவர்க்கும் மேலாயதலைவன்; இறைவன்; உலகம் காக்கும் அரசன். இல்–இருப்பிடம் இவ்வகையில் அழைக்கப்பட்ட மரபு பண்டுதொட்டு இருந்ததாம்.

இறைவனுக்குரிய திருக்கோவில்கள் கோட்டம் என்றும் அழைக்கப்பெற்றன. இதற்கு எடுத்துக்காட்டாக.

**'உறந்தை போக்கிக் கோயிலொடு குடி நிறீஇ**
**வெண்கோயில் மாசு ஊட்டும்'**

**'புத்தெளிர் கோட்டம் வலம் செய்து'**

**'அணங்குடை முருகன் கோட்டத்து'**



**'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**அறுமுகச் செவ்வேள் அணி திகழ் கோயிலும்**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்**
**நீலமேனி நெடியோன் கோயிலும்**
**மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்'**

'நுதல் விழி நாட்டத்து இறையோன் கோயிலும்
அருந்தெறற் கடவுள் அதன் பெருங்கோயிலும்'

என வருவனவற்றான் இவ்வுண்மை அறியப்படும்.

## திருக்கோயிலின் தொன்மை

இவ்வாறு இறைவன் எழுந்தருளியிருக்கும் இடத்தைக் கோவில் என்று அழைப்பதும், அவ்வாறாய கோவிலில் இறைவன் வீற்றிருந்து அருளுவதும், காலப்பழமைக்கு எட்டாத காலத்தேயே இருந்து வந்துள்ளது. இதனை,

'மான் மறிக்கை ஏந்தி ஓர் மாதோர் பாகம்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ'

'சிலையால் முப்புர மெரித்த முன்னோ பின்னோ'

'கோலமே நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே'



'மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை
மணி திகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை
ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே'

எனவரும் அப்பரடிகள் திருவாக்கால் அறியலாம்.



சிவனார் தேரேறித் திரிபுரம் எரித்தல்



திருவாரூர் முகபத்ர மஹாரதம்

## திருக்கோயிலின் வளர்ச்சி

இறைவன் யாண்டும் நீக்கமற நிற்பவன், நிலம், நீர், தீ, வளி, விண், ஞாயிறு, திங்கள், உயிர் ஆகிய எண்பொருளாகவும் இருக்கிறான். எனினும் யாண்டும் நிறைந்திருக்கும் இவ்வருமையை நினைத்து வழிபடுதல் பலர்க்கும் அரிதாம். ஆதலால்தான் குறிப்பிட்டதொரு இடத்தில் இறைவனை எழுந்தருளுவித்துகொண்டு தினமும் வழிபடத்தொடங்கினர். இவ்வாறு முதற்கண் மரத்தடியையே இடமாகக்கொண்டு வழிபட்டனர். இவ்வகையிலேயே நம் சிவபெருமானும் ஆலின்கீழ்இருந்து அருள்செய்தனன். ஆலமர் கடவுளன்னல் ஆலநிழல் அன்றிருந்து எனப்போற்றியுள்ளனர். பின்னர் வந்த வேந்தர்கள் பாதுகாப்பு மதிலுடன் மரக்கோயில் பின் கற்கோயில் என அமைத்துதந்து அறம் வளர்த்தனர்.



சிறப்புவகை மரசிற்ப வேலைபாடுகள் கொண்ட
தேர் பவனிவரும் காட்சி



தெளிவாக உள்பகுப்பு முறையை விளக்கும் தேர்காட்சி

# தேரின் அமைப்பும் உருவ இலக்கணமும்



பண்டையகாலத் தேர்வடிவம்

## ரத ஆகிருதி பேதம்
## (பலவகை தேர்கள்/ தேரின் உருவவகைகள்)

ரதோத்ஸவத்திற்கு ஏற்ற தேர்வகையில் சிறிய அளவில் உலோகத்தாலானவை **ஸ்யந்தனம்** எனப்படும். இவை அடிக்கடி ஆலயத்தின்உள்ளும் புறமும் பயன்படுத்தத் தக்கவை. பெரிய அளவிலான மரத்தாலான **மஹாரதம்** பெருவிழாவில் மட்டுமே ஏற்க்கத்தக்கது. ரதகாரர்கள் இதனை மன்னர்களுக்கு இருசக்கரத்தேராகவும், தேவர்களுக்கு நாலு சக்கரத்தேராகவும், பல சக்ரங்களுடையதாகவும், பலவகை உருவத்திலும், பல அமைப்பு முறைகளிலும் செய்து கொடுத்துள்ளனர். இத்தகைய பயணத்திற்கு உரிய தேர்கள் கட்டுத்தேர், இணைப்புத்தேர், ஆழித்தேர் என்று பலவகைப்படும். தங்கரதம், வெள்ளிரதம், முத்துரதம், பவழரதம், கிண்ணிரதம், சித்திரரதம் என்பதாக பலவகையில் பெருவிழாக்களில் தேர்வகை இடம்பெறும். நேர்த்திக்கடனாக அடியவர்கள் விரும்பி சிறிய தேரேற்றவிழாவைச் செய்வர். சுவர்ணரதம், (பொன்/வெள்ளி) ரஜரதம், முதலான உலோகத்தேரேற்றுத் திருவிழாவானது நூறுமடங்கு அதிகபலனை அளிக்கக்கூடியயை எனப்படுகிறது. முத்து ஸ்படிகாதி ரத்னத்தாலான ரதத்தையும், புஷ்பவகைகளால் கட்டப்பட்ட புஷ்பரதத்தையும் ஆகமங்கள் கூறுகின்றன. இவை எல்லையில்லாப்பயனளிப்பவையாம்.

# மஹாரதலக்ஷணம். தேரின் வடிவமைப்பு

தேரானது சக்கர எண்ணிக்கையாலும், வடிவமைப்பாலும், பலவகைப்படும். தேரின் இலக்கணத்தை சிவனார் காமிகாகமத்தில் 71வது படலத்தில் கூறியுள்ளார். அதனைச் சுருக்கமாகக் காண்போம். அடியில் அமையும் பாரவாஹியின் அளவு பலவகையாம்.

ரதாதி ஸ்தாபனம் வக்ஷ்யே தல் லக்ஷண புரஸ்ஸரம்.
ரதோ(அ)னேகவித: ப்ரோக்தஸ் ஸச சக்ரவிபேதத:.
த்ரிசக்ரோ வா சதுஸ்சக்ரோ பஞ்ச ஷட் ஸப்தசக்ரக:.
நவாஷ்ட சக்ரயுக்தோ வா த்விசக்ரஸ் சகடாஹ்வய:.

என்றவசனப்படி இரண்டு சக்கரம் உள்ளது சகடம் எனும் வண்டி என்பதாகும். தேர் என்பது மூன்று சக்கரம் முதலாக ஒன்பது சக்கரம் வரை அமைக்கப்படுவதாகும். நடுவே உள்புறமும் சக்கரங்கள் அமைவதுண்டு. அடியில் பாரம்தாங்கும் அளவிற்கு மிகவும் வலுவான பாரவாஹியை வட்டமாகவோ பட்டைகளுடனோ அமைத்து அந்த பாரவாஹியின்மேல் ஸாரம்மிக்கதான மரத்தினால் அதிககனத்துடன் உபபீடத்தை அமைக்கவேண்டும்.

தேருக்குரிய மரங்கள் அதிக வலிமைமிக்க அந்தஸ் ஸாரவிருக்ஷவகையினதாக இருக்கவேண்டும். கருங்காலி, இலுப்பை, சந்தனம், ஸாலவிருக்ஷம், நாவல், சாரம், மகிழமரம், மருதமரம், பர்பரம், கிருதமாலம், வன்னி முதலியனவாகும்.

ஆகமங்களில் விதானபத்ரகம், பவனபத்ரம், பிருஷதபத்ரம், சந்திர பத்ரகம், அநிலபத்ரகம் என்று ஐந்துவகை தேர் கூறப்படும். சிறுதேர் 5 சக்கரமும், மகோத்ஸவ தேர் 6 முதல் 10 சக்கரம் வரையில் கொண்டவையாகும். தேரில் குக்ஷி அக்ஷம், தந்தம், சித்ரம், கீலம் என்பவை முக்கிய 5 உறுப்புகளாம்.



பஞ்சபர்வ அஷ்டகோண மஹாரதம்
ஐந்தடுக்கு எட்டுபட்டைத்தேர்

பாரவாஹி எனப்படுகிற அடித் தள சதுர கட்டைதள்த்திலிருந்து அதன் நான்கில் ஒருபாகம் கூடுதலாக வைத்தவாறு இரண்டு முழம் அளவுக்கு வெளியில்

நீண்டிருப்பதாக கூட்டிக்கொண்டே ஆறுபாகம் வரையில் ஐந்து அடுக்குகட்டம்வரை கீழிருந்துமேலே அகன்றதாக உபபீடத்தை அமைத்திட வேண்டும். இதற்கான சான்று,

பாரோர்த்வம் உபபீடம் ஸ்யாத் தன்மான மிஹ கத்யதே
ஏகபாகாத் விகராந்த மேகபாக விவர்த்தனாத்
ததுபானாத் விநிஷ்க்ராந்திர் பாரபாஹ்யாதசாம்சத:
பாகபாஹ்ய விவ்ருத்யா து ரஸபாகா வஸாநகா:

அதன்உயரத்தை 31 அம்சமாகப் பகுத்து, அவற்றைக்கொண்டு அடியிலிருந்து மேல்வரையில் முறையே உபானம்–3 + பத்மம்–1 + கம்பம்–1 + கண்டம்–9 + கம்பு–1 + பத்மம்–6 + வாஜனம்–3 + கம்பம்–1 என்றவாறு = 29–ல் எடுத்துக்காட்டாகக்கொண்டு, இவற்றையே கால், அரை, முக்கால், முழுபங்கு என்றவாறு இருமடங்கு அல்லது மும்மடங்கு மேலே அகலம் வருமாறு கூட்டியோ குறைத்தோ அதிக அழகும் வலிமையும் பொருந்தியுள்ளவாறு உள்ளும் புறமும் கொண்டு இருப்பவையாக மூலக்கோயிலுக்குக் கூறியஉபபீடத்திற்குக் கூறப்பட்ட உள்உறுப்புக்கூறுகள் அனைத்தையும் கொண்டதாக எட்டுதிசையிலும் பத்ரம், முகபத்ரம், உபபத்ரம் இவைகளுடன் கூறியவாறு கண்டவர்கமானது பாதங்களுடன் கூடியதாகவும் உருண்டைகளை உடையதாகவும் அமைத்திடவேண்டும். உபபத்ரத்திற்கு மேலே மேல்தளப் பலகையால் மூடிடவேண்டும். மேல் பலகை முதல் கீழ் பாரவாஹிநடுவரையில் தூண்கள் தாமரைமொட்டுகள், தாமரைதண்டுகள் இவைகளால் அலங்கரிக்கப்படவேண்டும்.

ஏகோன த்ரிம்ச தம்சம் வா ததுச்சம் விபஜேத் குரு:.
குண சந்தர மஹாபூத வ்யோம நந்த வியத் குணைர்.
த்ரிபாகே நைகபாகேந மூலாத் ஆரப்ய காரயேத்.
உபான பத்ம கம்பாநி கம்பம் கர்ணம் ச கம்பம்.
பத்மம் ச வாஜனம் கம்பம் திருஷ்டாந்தார்த்த முதாஹ்ருதம்.
பாதேநார்த்தெந பாகேந த்ரிபாகேந த்விபாகத:.
த்ரிபாகேந சதுர்பாகை ரூனம் வாப் யதிகம் நயேத்.
ஏஷாம் ப்ரவேசோ நிஷ்க்ராந்தி: சோபா பல வசாத் பவேத்.
தாமோக்தம் உபபீடம் யத் ஸர்வ மத்ர விதீயதாம்.
சதுஷ் கோணேஷு மத்யேஷு ததா பத்ரோப பத்ரயோ:.
குளிகா பாத பாதைஸ்ச நாடகைர் பூஷயேத் களம்.
உபபீடோச்ரயாந்தம் வா கர்த்தவ்யம் உபபத்ரகம்.
உபபத்ரோர்த்வதக் குர்யாத் பலகா(ஆ)ச்சாதனம் த்ருடம்.

பலகா பாரமத்யம் து பாதாத்யைர் பரிபூஷயேத்.
பலகா மத்ய பாராந்தம் யோஜயேத் பத்ம குட்மளம்.
ஸநாளம் நாளமானம் து த்வி ஸப்தத்ரயங்குலோர்த்வத:.
உத்தரகாமிக படலம் 71 ல் 33–40

சதாம் சாந்தம் ஸமுத்திஷ்டம் தன் மூலம் வேத பாகத:.
வச்வம் சாந்த கனோபேதம் வ்ருத்தம் வா(அ)ஷ்டாச்ர மேவவா.

அங்குஉபபீடத்தின்மேல் பலதூண்களை அமைத்திட வேண்டும்.

தத்ர பாதா: விதோயா: ஸ்யு: உபபீடா வஸானகே.
பலகே த்வே விதாதவ்யே தத் பாதோபரி ஸம்ஸ்திதே.
தத்ர ஸந்நத்த விஷ்டே த்வே பஞ்ச க்ராஹிகதே ச தே.

இதன்படி அங்குமேலே உபபீடத்தின்மேல் கண்டவர்கள் அகலத்தில் தூண்களை நிறுத்தி, அந்த தூண்களை மேலே அவற்றின் உச்சியில் இரண்டு கனமான பலகைகொண்டு வலுவுற அசையாதவாறு புகுத்திப்பொருத்தி இரும்புப்பட்டைகளால் வலுவூட்டிட வேண்டும். நடுவே மூன்றில் ஒருபங்கினால் சமசதுரமாய் ஆலயத்தைப்போன்ற அதிஷ்டானத்தை அமைத்திட வேண்டும். சக்கரங்கள் உரிய உயரஅகலமான அளவில் உபபீடத்தின் கால், அரை, முக்கால் பங்குஉயரம் இருத்தல் முறையாம். நடுவே அதிஷ்டானத்தின் மேலே



நெல்லையப்பர் பத்ர மஹாரதம் திருநெல்வேலி.

பாதவர்க்கத்தைசெய்து தனித்தனி தூண்களாக உரிய இடைவெளியில் நிலைநிறுத்தி அவற்றின்மேலே ப்ரஸ்தரவர்கத்தையும், இவ்வாறே (மூன்றுநிலைகளிலோ) பாதத்தையும் பிரஸ்த்தரத்தையும் உயரத்தைக் கூட்டியும், அகலத்தைக்குறைத்தும், அமைத்துமேலே கண்டம் குறுகிய கழுத்துப்பகுதியும், அதன்மேலே வட்டமான சிகரத்தையும்மேலே ஸ்தூபியையும் அத்துடன்சிறு குடையையும் பொருந்துமாறு நிலைபெற அமைத்தல் முறை.

பெரியதேரில் உயரமான அமைப்பில் நடுவே உள்புறம் படிகளையும் அமைக்கலாம். இவ்வாறு ரதகாரக ஸ்தபதியாரால் வல்லுனரான தக்ஷகரால் செய்துமுடித்தபின்பு பிரதிஷ்டையும், மந்திரத்தால் செய்வதுமுறை.

## தேர்க்கலை (மரச்சிற்பத் தச்சுக்கலைக்கோயில்)

மரத்தினால் சிற்பங்கள் செய்வதும், அவற்றை மிகஎழிலுடன் படைத்த தேர்களிலே பொருத்தி அழகுறச்செயவதும், நமது தமிழகத்தில் தொன்றுதொட்டுவந்த ஒரு அற்புதக் கலையாகும். பலகாலமாக செய்துவந்த பழக்கத்தால் இப்பணிகளுக்கு எவ்வகை மரங்கள் சிறந்தது? என்பனபோன்ற சிறந்த குறிப்புகளையும் வைத்துள்ளனர். மரத்தாலான தேர்களையும் அவைகள் விரைந்து செல்லும் வண்ணம் அமைத்த திறனையும் சங்கப்பாடல்கள் கூறும். ஒரே பகலில் எட்டுத்தேர்களை செய்யும் ஆற்றல் மிகுந்த தச்சன் இருந்ததை **'வைகல் எண்தேர் செய்யுந் தச்சன்"** என்று சங்கப் பாடலொன்று கூறும். **'பெருங்கதை"** என்னும் தமிழிலக்கியத்தில் தேர்கள்பற்றியும் மரத்தால் செய்யப்பெற்ற சிற்பங்கள் பற்றியும் பலகுறிப்புகள் உள்ளன.

தமிழகத்தில் மரத்தால் மிகப்பெரிய அளவில் தேர்களை அழகுற அமைத்து, அதன்மீது தெய்வத்திருமேனிகளை எழுந்தருளச்செய்து, வீதிகளில் பவனிவரச்செய்து அதனைப் பெருவிழாவாக எடுக்கும்பரபு தொன்றுதொட்டு இருந்துவந்திருக்கிறது. சோழமன்னர்களும், பின்னர்வந்த விஜயநகர அரசர்களும் பல பெருந்தேர்களைச் செய்து கோயிலுக்கு அளித்ததை இவர்களது கல்வெட்டுகள் கூறும்.

வீதிகளில் நிறுத்தப்பெற்றுள்ள தேருக்கு இறையுருவங்களை எடுத்துச்செல்வதற்கென்று படிகளுடன் கூடிய மண்டபங்களை மிகஎழிலுடன் அமைத்தனர். அம்மண்டபங்களைத் "திருத்தேரேற்றுக் கூடம்" என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. பிற்காலத்தில்

இரண்டாம் நிலை குதிரை, சிம்மம், யாளி வரிசை



ஸ்ரீமகாரதத்தின் பிரதான மூர்த்திகள்

இந்த ரதாரோஹண மண்டபத்தை “தேர்நிலை” என்று அழைத்தனர். தஞ்சைமாவட்டம் திருக்கோடிக்காவல் திருக்கோயிலில் பல அற்புதமான சோழர்காலத்து தேர்ச்சிற்பங்கள் உள்ளன.

தேர்களின் எல்லாபுறங்களிலும் நூற்றுக்கணக்கான மரச்சிற்பங்களைச் செய்து பொருத்துகின்ற பாங்கு ஒரு “கைதேர்ந்த நுண்கலை” என்பதில் ஐயமில்லை. தேர்களை பல நிலைகளாகக் கொண்டு, இன்ன நிலையிலே இன்ன இன்ன சிற்பங்கள் இருத்தல்வேண்டும் என்று வகுத்து, அதன்படி சிற்பங்களைப் பொருத்தியிருக்கிறார்கள்.

தமிழிலக்கியத்தில் பெருங்கதை குறிப்பிடும் தேர்பற்றிய செய்திகள் மிகவும் சுவையானவை. இதில் குறிக்கப்பெறும் வாசவதத்தையின் தேர் மிகவும் நுண்ணிய கலையழகுடன் மிளிர்ந்தது. அதை பலநாட்டு கைவினைஞர்களும் கூடிஅமைத்தனர். அவர்களில் யவனநாட்டு தச்சர்களும், அவந்தி நாட்டு கொல்லரும், மகத நாட்டு கலைஞரும், பாடலிபுரத்து பொற்கொல்லரும், கோசல நாட்டு ஓவியத்தொழிலரும், வத்ஸ நாட்டு வண்ணக் கம்மரும், கூடி பலவகையான எழிலுடன் வண்ணப்பொலிவோடு படைத்தனர் என்று கூறுகின்றது. பல்வேறு நாட்டுக் கைவினைக் கலைஞர்களும் ஒன்றுகூடி அற்புதமான தேர்களை கூட்டுமுயற்சியாக உருவாக்கியும் உள்ளனர் என்பதற்கு இந்த இலக்கியம் சான்றாகத் திகழ்கிறது.

தமிழ்நாட்டில் பல திருக்கோயில்களிலுள்ள தேர்கள் இங்கு குறிப்பிடத் தக்கவையாகும். எடுத்துக்காட்டாக, திருவாரூர் தியாகராஜர்

திருக்கோயில், மதுரை மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோயில் திருவண்ணாமலை, அண்ணாமலையார் திருக்கோயில், நெல்லையப்பர் கோயில், சிதம்பரம் நடராஜர் கோயில், ஸ்ரீரங்கம் திருவரங்கப்பெருமாள் கோயில் காஞ்சீபுரம் வரதராஜர்கோயில், வில்லிப்புத்தூர் பெருமாள்கோயில் ஆகியவற்றின் திருத்தேர்கள் மிகப்பெரியஅளவிலும் நுணுக்கங்கள் மிகுந்தும் உள்ளன.

மன்னர்கள் வலம்வருவதற்கும் போரை மேற்கொள்வதற்கும் பலவகையான தேர்கள் வகுத்திருந்தபோதும் ஆலயங்களில் தெய்வத் திருமேனிகள் பவனிவர செய்யப்பெற்ற தேர்கள் அளவிலும், வடிவமைப்பிலும் மாறுபட்டவை.

## தேரிலக்கணம் கூறும் நூல்கள்

தேர்களை வடிவமைப்பதற்கென உரிய இலக்கணங்களைக் கொண்ட நூல்களை நம் முன்னோர் வகுத்தனர். இவற்றுள் **மானசாரம், விஜயதந்திரம், காமிகாகமம், ரதலக்ஷணம்** என்னும் கிரந்தச்சுவடிநூல்கள் குறிப்பிடத்தக்கவைகளாகும். இந்நூல்களில், தேரின் ஒவ்வொரு அங்கங்களின் அமைப்பும், அளவுகளும் விவரிக்கப்பெற்றுள்ளன.

## தேரின் உருவவகைகள்

ரதத்தின் வடிவமைப்பைக் கொண்டு பொதுவாக தேரை ஏழுவகையாகப் பிரித்தனர். அவைகள் முறையே

1. நவஸ்வான்பத்ர: 2.ப்ரபஞ்ஜனபத்ரக: 3.நிவாதபத்ரக: 4.பாவதபத்ரக: 5. ப்ரசாதபத்ரக: 6. இந்திரபத்ரக: 7.அநிலபத்ரக: எனப்படுவனவாகும் இவற்றுள் 1.முதல்வகை சமசதுரஅமைப்புடைய தேர்களாகும். 2. இரண்டாம் வகை ஆறுபட்டைவடிவானதாகும். 3. மூன்றாம்வகை இரண்டுதளமுடையவை. 4. நான்காம்வகை மூன்றுதளமுடையவை. 5. ஐந்தாவதுவகை மற்றும் 6. ஆறாவதுவகை பத்துதளஅமைப்புடையவை. 7. ஏழாம்வகை பன்னிரண்டுதளமுடையவை இதே பகுப்பைக்கொண்டு முதல்வகைத் தேர்களை அரைவட்டம் உடையவையாகவும், இரண்டாம்வகை வட்டவடிவ அமைப்புடையனவாகவும், மூன்றாம்வகை நீள்வடிவுடையதாகவும், நான்காம்வகை நீண்ட சதுரவடிவமாகவும், ஐந்தாம்வகை எட்டுபட்டையுடன் வடிவமுடையவையாகும், ஆறாம்வகை (ஆறுபட்டை) ஆறுகோண வடிவமுடையவையாகவும், ஏழாம்வகை முட்டைவடிவமுடையதாகவும் நூலில் குறிக்கப்பெற்றுள்ளது.



கடலூர் பாடலீஸ்வரர் தேர்அதிஷ்டாணம்

மேலும் தேர்களை நான்கு பெரும்பிரிவுகளாக வகுத்தனர். அவை, 1.நாகரம், 2.திராவிடம், 3.ஆந்திரம், 4.வேசரம் என்பவைகள். இவற்றுள் 1) சதுரவடிவுடையவை நாகர அமைப்பாகவும் 2)எட்டுபட்டை வடிவுடையவை திராவிட அமைப்பாகவும் 3)அறுகோண (ஆறுபட்டை) அமைப்புடையவை ஆந்திர அமைப்பாகவும் 4)வட்டம் மற்றும் இருபதுபட்டையுடைய முகபத்திர அமைப்பை வேசரம் என்றும் கொண்டனர்.

மன்னர்களின், மனிதர்களின் தேராயினும், தெய்வங்களின் தேராயினும், அவற்றின் செயல்பாட்டிற்கேற்ப அதன் சக்கரங்கள் அமைக்கப்பெற்றனவாகும். போருக்குரிய தேர்களுக்கு மூன்றுசக்கரங்களும், போர்விளையாட்டுப் பயிற்சிக்குரிய தேர்களுக்கு நான்கு சக்கரங்களும், தேவாலயங்களில் சாதாரண விழாவுக்குரிய தேர்களுக்கு ஐந்து சக்கரங்களும், மஹாரதோற்சவங்களுக்கு ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது மற்றும் பத்து சக்கரங்களுள்ள தேர்களையும் ஏற்றதாக வகுத்தனர்.

# தேர்உருவத்திருக்கோயில்கள்

திருக்கோயில்களின் கருவறை மற்றும் முகமண்டபங்களை தேர்வடிவில் அமைப்பதும் ஒருவகை மரபாகும். இதனை விஷ்ணுதத்வசம்ஹிதை என்னும் நூல் விரிவாகக் கூறுகின்றது. தமிழகச் சிற்பக்கலையின் கேந்திரங்களாகத்திகழும் பல திருக்கோயில்களின் கருவறையும், முகமண்டபங்களும், தேர்வடிவில் இன்றும் திகழ்கின்றன எடுத்துக்கட்டாக சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மேலக்கடம்பூர்திருக்கோயில் ஒரு அற்புதக் கல்தேராகவே காட்சியளிக்கின்றது கும்பகோணம் சாரங்கபாணியின் கருவறையும் மிக எழில்வாய்ந்த ஒரு தேராகவே திகழ்கின்றது. குடந்தைக்கீழ்கோட்டம் எனப்படுகின்ற நாகேஸ்வரசுவாமி கோயில்மண்டபம், மற்றும் தாராசுரம் ஐராவதேசுவரர் திருக்கோயில் இராஜகம்பீரமண்டபம் போன்றவை தேர்க்கால்களோடு குதிரைகள் இழுக்கும் தேர்களாகவே திகழ்கின்றன. திருவதிகை வீரட்டேச்வரர்விமானம் குறிப்பிடத்தக்கதாகும்.



கர்நாடகா ஹம்பி தேர்வடிவ கற்கோயில்

ஆலயத் தேர்களின் அடிப்பாகம் முழுவதும் மரத்தால் செய்யப்பெற்று, இரும்புக் கம்பிகளாலும், இரும்புப் பட்டைகளாலும், இரும்பு ஆணிகளாலும் நன்கு இணைக்கப்பெற்றிருக்கும். தேரின் அடிப்பகுதி கோயிலின் கருவறைபோன்று அனைத்து அங்கங்களையும் பெற்றிருக்கும். இதன் வெளிப்புறம் முழுவதும் பலஅடுக்குகளக மரச்சிற்பங்களால் நன்கு அலங்கரிக்கப்பெற்றிருக்கும். இவை புராணக் காட்சிகளாகவும், பல்வேறு லீலாமூர்த்தங்களாகவும், அவதாரவடிவங்களாகவும், ஐந்தொழில்களையும் விளக்குகின்ற சிற்பங்களாகவும் இருக்கும்.

**ரதஸ் து ஏகதலப் புரோகத: த்விதலாத் யன்விதோ ந வா.|**
**அனே னைவ ப்ரகாரேண காரயேத் த்ரிதலாதிகம் |**
**சாதயேத் பலகைர் ஊர்த்வ தலம் ஸார தரூத்பவை |:**
**பத்ரம் ச உபபத்ரம் ச சாதயேத் ஏவ மேவ து. (காமிகம் 71ல்66–69)**

காமிகாகமப்படி இவ்வாறு பல தளங்களின் அமைப்புடைய தேரின் மேல்தளத்தின் மையத்தில் தெய்வத்திருமேனிகளுக்குரிய சிமோஸன பீடமானது மேடையாக அமைந்திருக்கும். இதனைச் சுற்றிலும் முறைப்படி தூண்களை சொருகுவதற்கான குழிகள் அமைக்கப்பட்டிருக்கும். இவற்றில் பனைமரச் சப்பைகளாலும் நீண்ட தூண்களாலும் உரியஅளவுகளில் கால்கள் நிறுத்தப்பெற்று, இவற்றுடன் வலுவூட்டிட மூங்கில்மரம் மற்றும் சவுக்குமரங்களை இணைப்பர்.



டில்லி நேஷனல் அருங்காட்சியகத்தில் தொண்மைமிக்கத் தேர்

இவ்வாறு இணைப்பதற்கு சட்டக்கோர்வை என்று பெயர். இதன்மேல் முறையே பொருந்துமாறு துளையிடப்பட்ட மரச்சட்டங்களைக்கொண்டு மேலே பொருத்தி மூன்று, நான்கு அல்லது ஐந்து அடுக்குகளாக விரிந்த களஅமைப்பை எட்டுபட்டை வடிவிலோ ஆறுகோண வடிவிலோ அல்லது திருவாரூர்தேரைப் போன்று முகபத்திர அமைப்பில் இருபதுபட்டைகள் உள்ளவடிவிலோ மேல்தளத்தை அமைத்திடுவர். இவ்வாறு அடிபீடத்தைவிட அகலமாக விரிந்து இருக்கும் தேர்பகுதியை **கானட்** என்று தேர்க்கொத்தர்கள் கூறுவார்கள். இத் தேர்க்கூரையின் உச்சிப்பகுதியில் வட்டமாகவோ, அறுகோணமாகவோ எட்டுபட்டையாகவோ **சிகரம்** என்னும் தலைப்பகுதியை குடத்தை மரச்சட்டங்களாலும், மூங்கில்களாலும் அல்லது பிரம்புத் துண்டுகளாலும் உருவாக்குவார்கள். இந்த சிகரத்தின் உச்சியில் மணிமகுடமான **ஸ்தூபி** என்னும் **கலசம்** இடம் பெற்றிருக்கும். இவ்வாறு உருவாக்கப்பெற்ற தேர்க்கூரையை தென்னங்கீற்றுகளைக் கொண்டு மூடி வேய்வர். பின்னர் அதன்மேல் பலவண்ணமுள்ள தேர்ச்சேலையால் போர்த்தி நன்கு அலங்கரிப்பார்கள்.

மேலும், சட்டக்கோர்வைய் பகுதியை நான்குபுறமும் மூங்கில், அல்லது காகிதம் இவைகளால் உருவாக்கப்பட்ட தூண்கள், எட்டுகால்கள், மற்றும் தோரணவாயில் அமைப்புடைய நான்குமுகப்புகள் ஆகியவற்றால் அலங்கரிப்பார்கள். தேர்க்கூரையின் நீண்ட வெளிவிளிம்புகளில் வண்ணத்துணிகளால் அழகுற தயாரிக்கப்பெற்ற தொம்பைகளைத் தொங்கவிடுவார்கள். தேரில் ஒலிக்கக்கூடிய பல மணிகள் கட்டப்பெற்று மணித்தேராக ஆக்குவர்.

மூங்கில், பிரம்பு, வைக்கோல், நெட்டி, காகிதம் போன்ற மூலப்பொருளால் சுமை குறைவாக விளங்குகின்ற பாயும்குதிரைகள், நான்கினையும், நீண்டபாம்பு யாளம் ஒன்றினையும், தேரின் முன்பகுதியில் மேற்தளத்தையொட்டி வெளிப்பறம் பாயும்நிலையில் கயிறுகளால் வலுவாகக் கட்டிவைத்திடுவர். பின்னர் இக் குதிரைகளை இயக்கும் சாரதியாக (தேரோட்டியாக) அமர்ந்தகோலத்தில் நான்முகப் பிரம்மதேவரின்உருவம் ஒன்றினை, மூங்கில், நெட்டி, காகிதம் ஆகியவற்றால் தயாரித்து தேரின் முகப்பில் பொருத்துவர். தெய்வத்திருமேனி இடம்பெறும் மேடைக்கு இருபுறமும் நெட்டி, காகிதம் இவைகளால் உருவாக்கப்பெற்ற பிரம்மாண்டமாண துவாரபாலகர்களின் திருவுருவங்கள் இரண்டினை வாயிலின் பக்கங்களில் பொருத்துவர். தேரை மக்கள் கூடி இழுக்க ஏற்றவாறு, மிகநீண்டதான கயிறுவடங்கள்

தேரின் அச்சுப்பகுதியோடு, இணைக்கப்பெறும். இத்தேர்வடங்கள் பெரும்பாலும் ஆறு அல்லது நான்கு வடங்களாக இருக்கும். நான்கு குதிரைகள் நான்கு வேதங்களாகவும், தேங்காய்நாற்கயிறுகளான ஆறுவடங்கள் ஆறு அங்கங்களாகவும், தேரின் மேற்பகுதியிலுள்ள சட்டங்கள் கயிற்று நாண்கள் ஆகியவற்றின் வேலைப்பாடுகள் ஐந்தொழிலாற்றும் பஞ்ச காரணேசர்களின் அறுபத்துநான்கு, மந்திரக் கலைகளாகவும், தொண்ணூற்றாறு தத்துவங்கள், (அகக்கருவி 36 புறக்கருவி 60 = 96) 24என்ற தத்துவஅடிப்படையில், அதே எண்ணிக்கையில் அமைப்பது, நமது தேர்க்கொத்தர்கள், மயவிச்வகர்ம ஸதபதிகளின் தொல்மரபாகும். மேலும், மரத்தால் செய்யப்பெற்ற கைப்பிடியுடன் முக்கோணவடிவமுடைய முட்டுக்கட்டைகள், நெம்புகோல் அடிப்படையில் ஏணிபோன்ற, தேர்க்கால்களை நெம்பக்கூடிய, உலுக்குமரங்கள், தேர் எளிதில் திரும்பஉதவக்கூடிய சாரடிக்கட்டைகள் ஆகியவை கோயில் தேரை இயக்க உபயோகிக்கும் முக்கியப் பொருள்களாகும்.

## சக்கரத்தால் தேர்வகை

"த்ரிசக்ரோ வா சதுச் சக்ரோ பஞ்ச ஷட் ஸப்த சக்ர யுக் |
ந வா (அ)ஷ்ட சக்ர யுக்தோ வா த்விசக்ரஸ் சகடா ஹ்வய: ||
(காமிகம்71ல்2)

ஏவம் அஷ்டவிதம் ப்ரோக்தம் விச்வாமித்ர மஹாமுநே |
த்ரி சக்ராத் தசசக்ராந்தம் விஜயாதி யதா க்ரமம் ||

ரதங்கள் அதன் சக்கரங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில், எட்டுவகைப்படும். மூன்று சக்கரம் முதல் பத்து சக்கரங்கள் வரையில் முறையே எட்டு வகைப்படும். அதாவது மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து சக்ரங்கள் கொண்டவையாக 8வகையை அஷ்டபேதங்களை உடையது. பொதுவாக இரண்டுசக்கரங்கள் மட்டுமே உள்ளது சகடம் என்று பெயர்பெறும். சகடம் என்பது வண்டி எனப்படுவது ஆகும். மூன்றுசக்கரம் முதலாக பத்து சக்கரம் வரையிலான தேர்கள் முறையே விஜயரதம் முதலான வெவ்வேறு பெயர்களைப் பெறுவனவாகும். அவை 1.விஜயரதம்,, 2.கண்டாரதம், 3.சக்கராரதம், 4.விசாலரதம் 5.நிபத்தரதம், 6. ஸ்ரீவிசாலரதம் 7. பத்ரரதம் 8. பத்ரவிசாலரதம் எனப்படுபவை. திருவாரூரின் பெருந்தேர் பத்து சக்கரங்களுடன்உள்ள "ஆழித்தேர்" எனப்படுவதாகும். மூன்று சக்கரரதம் யுத்தரதமாக போருக்கு ஏற்ற தேராகும். எனவே ஆலயத்தின் மஹாரதம் என்பவை

நான்குசக்கரம் முதலாக பத்துசக்கரம் வரையிலான அமைப்புடையவை ஆகும். தேரின் முழுபாரத்தையும் தாங்குவது, அச்சுடனிருப்பது, பாரவாஹி எனப்படுவதாகும்.

த்ரி சதுஷ் பஞ்ச ஷட் ஸப்த வசு க்ரஹ விதஸ்தய: |
பார பாஹ்ய விசாலம் ஸ்யாத் ஆயாமாஸ் சாத கத்யதே ||

இதன்படி அடிபாகமான பாரவாஹியின் அகல அளவிலானது, 1 முதல் 10 வரையாக எட்டுவகையாக அமைப்புடையதாகும்.

## ரதாங்க விருக்ஷவிதி (தேரின்மரசக்கர அமைப்பு)

விருக்ஷைகேந விநா சக்ரம் காரயேத் பஹூ வ்ருக்ஷகை: |
த்ரி த்ரவ்யைர் யோஜயேத் சக்ரம் பஞ்ச த்ரவ்யேன வா மதம் ||

இக்கூற்றின்படி ரதாங்கம், அல்லது ரதசரணம் அதாவது தேர்க்கால் எனப்படுகின்ற தேரின் சக்ரங்களை சிறப்புடனே வலிமைமிக்கதாக இருந்திடும் பொருட்டாக ஒரேமரத்தால் இன்றி, பலவகையான மரங்களால் செய்யப்படவேண்டும். (அதிகவலுவான மரமாகில் ஒரே மரத்தாலும் செய்யலாம் என்பர் சிலர்). இதில் உள்சாரம்மிக்க மரவகையில் மூன்றுவகையான மரக்கட்டைகளாலோ அல்லது ஐந்துவகையான மரக்கட்டைகளுடனோ செய்விக்கப்பெற்று பெருந்தேரில் பொருத்திடவேண்டும் என்பது விதிமுறை.



தேரின் முப்பகுதி அமைப்பு

# தேர்சக்கர அளவும் அமைப்பும்
# (ரதசக்ர நிர்மாணவிதி)

தாரு கீலேந யுஞ்ஜீயாத் அயப் பட்டேந பந்தயேத் |
தாரு பட்டிகயா யுக்தம் யதா பல வசம் ததா. ||
த்ரி சதுப் பஞ்ச ஷட் ஸப்த வசு க்ரஹ விதஸ்தய: |
பாரவாஹ்ய விசாலஸ் ஸ்யாத் ததா (ஆ)யாமஸ்ச கத்யதே. ||

தேர்சக்கரத்தின் அச்சுப்பகுதி மரத்தினால் செய்யப்பட்டு அதன்விளிம்பு அடிவட்டம் கீழே இரும்புப்பட்டையால் கட்டப்படவும் வேண்டும். தேர்ச்சக்கரங்களை வலுவான மரச்சட்டங்களோடு இணைந்தவையாகவும், அதிகபலம் பொருந்திடுமாறு இறுக்கமாக வலிமைமிக்கதாகவும், மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, எழு, எட்டு, ஒன்பது என்ற அளவுகளில் ஏதேனும் ஒருவகையில், "விதஸ்தி" எனும் 12அங்குலமான கைசாண்அளவு, அல்லது "ஹஸ்தம்" எனும் கைமுழஅளவில் இருப்பதாயும், சக்கரத்தின் அகலமானது சக்கரத்தின் மேலுள்ள தொடியான பாரவாஹி எனும் மரத்திம்மையின், எடைதாங்கும்பலகையின் அகலமும், உயரமும் கொண்டதாக இருக்கவேண்டும் என்று இலக்கணநூலில் கூறப்படுகிறது.



தேரின் சக்கரஅமைப்புமுறை

# தருஸங்கிரஹம் (தேருக்கு மரம் கைக்கொள்வது)

பெருமைமிக்கப் பெருந்தேரை புதியதாக உருவாக்கவேண்டுமென்றால் அதற்குரிய மரதிம்மைகளை மரப்பலகைகளை மரச்சட்டங்களை தேடித் தேர்வுசெய்து, கொண்டுவந்து, தேவையானஅளவில் சேமித்து, சேர்ப்பிக்க வேண்டும். இதற்கு வழிநூல்கள் மரத்தைதேர்வு செய்து, ஏற்கும்செயலை "தருஸங்கிரஹம்" என்று கூறுகின்றன. தரு என்றால் மரம் என்றும், ஸங்கிரஹம் என்றால் கைப்பற்றுதல் என்றும் பொருள். இதற்கான மரவகைகளையும், தேவையான அளவு மரங்களையும் தேர்வுசெய்யவேண்டும். இதற்காக அதிகாரிகள், ஆசார்யர், ரதகாரகர், விச்வகர்ம மய ஸ்தபதியார் மரத்தச்சர்கள், மரம்வெட்டுபவர்கள் அனைவரும் ஒன்று கூடிச்சென்று, பெருந்தோப்பு அல்லது காடுகளில், சுமார் தொன்னூரு ஆண்டுகள் வளர்ந்த, வலிமைமிக்கவையான, இலுப்பைமரம், வேங்கை, தேக்கு, கோங்கு, பிள்ளைமருது, களிமருது, சந்தனம் கருங்காலி போன்றவைகளில் வைரம்பாய்ந்த மரங்களை மரத்தச்சர்கள் தேர்வுசெய்ய வேண்டும். பின்பு வெட்டுவதற்கு முன்பு, அம்மரங்களை அர்ச்சகர் வனஸ்பதி எனும் வனதேவகைகளின் உறைவிடமாகக்கருதி, முறையே பூஜைசெய்து அதில்வாழும் தெய்வாம்சத்தை வணங்கி வேண்டி வெளியேற்றிய பின்பு, மரம்வெட்டுபவர்களால் மரங்களை அரசாங்கம் மற்றும் வன இலாக்கா அதிகாரிகளின் அனுமதியுடன் வெட்டிஎடுத்து, அவற்றை துண்டுகளாக்கி, வண்டியிலேற்றி, பணிமனை என்னும் கர்மமண்டபத்திற்கு கொண்டுவந்து சேர்த்திட வேண்டும். இதுவே "தருஸங்கிருகம்" எனப்படுவதாகும்.

விஸ்தார மட்டம், தேவாசனம், சிம்மாசனம், அமைப்பு



தேவாசனம் அமைப்பு

அடிமரக்கட்டைகளால் தேர்க்காலாகிய சக்கரங்களைச்செய்ய வேண்டும். மேலும் இவைகள் அச்சுகள் மற்றும் பதிப்புக்கான உருவப் படிமங்கள் இவற்றைச் (தேர்சிலைகள்) செய்ய பயன்படுத்தப்படும். மேலும் மரப்பலகைகள் அலங்காரத் தட்டுகள் செய்யவும், மரச்சட்டங்கள், பலமணிச் சட்டங்களுக்கும் பயன்படுவதாகும்.



தேரின் மேல்தள பகுப்புமுறை

பெரும்பாலும் அரஜுன விருக்ஷமாகிய களிமருது, பிள்ளைமருது, இலுப்பை இம் மரங்களை அதிக அளவில் தேர்வுசெய்வர். இவற்றுள் இலுப்பைமரம் எளிதில் கிடைப்பதும், குபேரனது மரமும், விலைமலிவானதும் ஆகும்., அதில் சுரந்துநிற்கும் ஒருவித பால்தன்மை அம்மரத்தை நீண்டகாலம் கெடாமல் பாதுகாக்கிறது. ஆகவே அதில் செதுக்கப்படும் சிலை வடிவங்கள் பளபளப்புத் தன்மையுடன் நீண்டகாலம் நல்லஒளிபொருந்தியதாகவும் இருக்கும் என்பதாலும் இலுப்பை ஏற்கப்படுகிறது. தேக்குமரமும் மிருதுவானதாக இருக்கும், .இதுவும் எண்ணெய்ப்பசையுடன் இருப்பதால் நளினமான சிற்பங்களை செதுக்குவதில் இம்மரம் அற்புதமாகத் திகழ்கிறது. ஆனால் சந்தனமரம்போல் விலை அதிகமாக இருக்கும். இது நீண்டகாலத்திற்கு நின்றுநிலைத்து பயன்தரக் கூடியது. எனவே மிகமுக்கியமான சிற்பங்களுக்கு தேக்குமரத்தையே பயன்படுத்தவேண்டும் என்று ஸ்தபதிகள் கூறுவர். இவ்வளவு பெருமுயற்சிசெய்து நிலைத்துநிற்கும் ஆலயத்தையே, அதாவது அக்கோயிலின் உருவத்தையே ஊருக்குள் விஜயம் செய்யவைப்பதே மகாரதத்தின் உயர்ந்த நோக்கமாகும்.

ஆலய மஹோற்சவத்தில் ரத உற்சவம் மிகவும் பெருமைவாய்ந்த்து சிற்பசாத்திரங்கள் ஆதிகாலம்முதல் எக்காலத்திலும் தேர்கள் வாகனங்கள், பல்லக்குகள் இவற்றைப் படைத்துத்தருவதன் மூலம் சிற்பத்துறையின் மரபுகளைக் காப்பாற்றி கலைஞானக் கருவூலங்களாக விளங்கிவருகின்றன. ஆலயங்களில் திவ்ய திருத்தேரானது சிற்பசாஸ்திரமுறைப்படியே மரபுக்கலைஞர்களால் தயாரித்து அளிக்கப்பட்டுள்ளன. இவை இத்தேசத்தின் கலைப்பொக்கிஷங்களாகும்.



ஸ்ரீவில்லிப்புத்தூர் பழமைமிக்க பெருந்தேர்

## தேரின் அளவுமுறைகள் (பொதுவானவை)

திருத்தேரின் உயரம் என்பது மிகமிகமுக்கியமானது ஆகும். தேரின் உயரத்தை வைத்துதான் அது என்னவகையான ரதம் என்பதை நிச்சயிக்க இயலும். இதில் மகாரதம் எனப்படுவது, சிறப்பாக பெரிய பெரிய மரத்தேரினையே குறிப்பதாகும். ஸ்ரீரதம் அதாவது திருத்தேர் எனப்படுவது, அனைத்து வகையான தேர்களையும் குறிப்பதாகும். ரதகாரக சிற்பவல்லுநர்கள், தேரின் உயர அளவைக் கொள்ளும்முறையே ஏழுவகையில்கூறி மத்யமத்ரயம்3, உத்தமத்ரயம் 3, அதிஉத்தமம்1 என தரப்படுத்தியுள்ளனர் அவை, முறையே 1.அர்தமத்யமம் 2. மத்யமம், 3.மகாமத்யமம் 4. அர்தஉத்தமம் 5. உத்தமம் 6. அதிஉத்தமம், 7. மஹா உத்தமம் என்று உயரஅளவின் அடிப்படையில் பகுத்துக் கூறுகின்றனர்

### 1. அர்தமத்யம உயர ரதம்

இவ்வகைத் திருத்தேர்களின் உயரம் 27அடி, அகலம், 10’8” அடி, இதன் தேர்ச்சக்கரவிட்டம் 04’06” அடி, கனம் 10 அங்குலம் இவ்வகை ரதங்கள் கால்பாகம் ஆகும். ஒரு திருத்தேரின் குறைந்தபட்ச அளவு இதுவே ஆகும். 27 அடி உயரத்தில் செய்யப்படும் இவ்வகை ரதங்களை வாமனரதவகை என்பர்.

### 2. மத்யம உயர ரதம்

இப்பிரிவுத் திருத்தேர்களின் உயரம் 36 அடி, அகலம் 14.04 அடி, சக்கரத்தின் விட்டம் (வட்டக்குறுக்களவு) 6 அடி, கனம் 12 அங்குலம் இவ்வகை ரதங்கள் பாதிபாக ரதங்கள் ஆகும் இது மத்யமரதம் ஆகும்.

### 3. மகாமத்யம உயர ரதம்

இப்பிரிவின் திருத்தேர்களின் உயரம்45அடி, அகலம்18அடி சக்கரத்தின் விட்டம் ஏழரைஅடி. கனம்18அங்குலம் . இதனை மானுடரத வகை என்பர்

### 4. அர்தஉத்தம உயர ரதம் (உத்தமஅளவில் கடைநிலை)

இப்பிரிவுத் தேர்களின் உயரம்54அடி அகலம் 21’06” அடி, சக்கரத்தின் விட்டம் ஒன்பதுஅடி. கனம் 20 அங்குலம், இவ்வகை ரதங்கள் முக்கால்பங்குள்ள தேராகும். இது மகாரதவகைப்படும்.

5. உத்தம உயர ரதம் (உத்தம அளவில் இடைநிலை)

இப்பிரிவுத்தேர்களின் உயரம்63அடி அகலம் 25'02" அடி, சக்கரத்தின் விட்டம் பத்தரை அடி,(10'06") கனம் 22 அங்குலம். இது முழுபங்குதேராகும்.

6. அதிஉத்தம உயர ரதம் (உத்தம அளவில் மேல்நிலை)

,இப்பிரிவு திருத்தேர்களின் உயரம் 72 அடி, அகலம் 28;08" அடி, சக்கரத்தின் விட்டம்12அடி, கனம்24அங்குலம், (ஒரு முழம் பருமன்) இது மஹாரதம் என போற்றப்படுவதாகும்.

7. மஹா உத்தம உயர ரதம் (உத்தமஅளவில் உச்சநிலை)

இப்பிரிவுமஹாரத்த்தின் உயரம் 90'தொன்னூறு அடி, அகலம்36அடி சக்கரத்தின் விட்டம் அதாவது உயரம் 15அடி, கனம்26அங்குலம், உயரத்தில் 75அடிக்கும் மேல்உள்ள அனைத்து ரதங்களும் முழுபாகரதமாகும். இந்த 90 அடி உயரம்36அடி அகலமுள்ளரதத்தை தெய்வீகரத வகை என்பர். இத்தகைய தேர், ஆரூரில் ஆழித்தேர் என்பதாக விளங்குகிறது. 90அடிஉயர மகாரதத்தில் அதன் சிகரத்தின் மேலே கலசத்தை ஒட்டியபடி கோயில்திருக்குடையை இணைத்துக் கட்டிஅமைத்திடுவர்.. அப்பொழுது அத்திருக்குடையுடன் அந்த மகாரதம் 96 அடி, அல்லது 100அடி உயரம் பெற்று, சம்பூர்ணரதம் எனப் போற்றப்படுவதாகும். இவ்வாறாக



நெல்லையப்பர்கோயில் பத்ர மஹாரதம் திருநெல்வேலி.

இந்த சிறப்பானஅளவுகள் இக்கணங்களைப் பின்பற்றியே உருவாக்கப்பட்ட ரதங்கள் திருக்கோயில்களில் உள்ளன. இனிமேல் செய்யப்பட இருக்கிற திருக்தேர்களும் இதே அளவுகளில் இலக்கணப்படிதான் உருவாக்கப் படவேண்டும். இவற்றையே "மங்களம் தரும் மகாரதங்கள்" எனப் போற்றிப்புகழ்வர் சான்றோர்கள்.



## ரதாக்ருதிபேதம் (தேர்வடிவமரபு)

நம் பாரததேசத்தில் ஆன்மீகமும் இறைபக்தியும் அனைத்து சமயங்களிலும் இருப்பினும், சிறப்பாக இந்துசமயத்தில் காணாபத்யம், கௌமாரம், சௌரம், சாக்தம், சைவம், வைஷ்ணவம் என்ற அறுசமய உட்பிரிவுகளில் தழைத்துத் திகழ்கின்றன. இந்துசமயக் கோயில்களையும் சிற்பசாஸ்திரம் மூன்று பெரும் மரபுகளாக வகுத்துள்ளது. அவ்வாறே? மகாரதங்களும் நடமாடும் கோயில்கள் அல்லவா, எனவே அந்த மூன்றுவகை பெரும்மரபுகளும் மஹாரதங்களுக்கும் பொருந்தும் அவை 1.நாகரம் 2.திராவிடம் 3.வேஸரம் எனப்படுபவை ஆகும்

### 1. நாகரம் மரபுத்தேர்

நாகரகம் என்பது பீடம்முதல் உச்சி சிகரம்வரை சமசதுரவடிவிலேயே அமைந்திருக்கும் தேராகும். இந்த தேர் அமைப்பை நாம் வடஇந்தியாவில் பரவலாக, கண்கூடாகக் காணலாம். இந்த நாகரவடிவத்தேர் விநாயகருக்கு உரியது என்பர்சிலர்

### 2. திராவிடம் மரபுத்தேர்

திராவிடரதம் என்பது கண்டம் முதல் உச்சிவரை அனைத்தும் எட்டுகோணமாக உருவமுடைய தேராகும்.. இவ்வகைத் தேர்களைத் தென்னிந்தியாவில் அதிகமாகக் காணலாம். இவ்வகைரதம் உமையம்மைக்கும், மஹாவிஷ்ணுவிற்கும் மகேச்வரருக்கும் கந்தகுருவிற்க்கும் உரியது ஆகும்.

### 3. வேஸரம் மரபுத்தேர்

கண்டம் முதல் உச்சிவரை வட்டவடிவமாகவே திகழும் ரதமாகும். இவ்வகைத்தேர் மத்தியப்ரதேச இந்தியாவில் காணமுடிகிறது. இதற்கு உடுப்பி ஸ்ரீகிருஷ்ணரின் ரதத்தை எடுத்துக்காட்டாகக்

கொள்ளலாம்.. ஒரிசாவில் பூரிஜகந்நாதர் ஆலயத்தில், இன்றும் பெருந்தொர்த்திருவிழாவில் பெரியகட்டுமானத்தேரை அமைத்து கொண்டாடுகின்றனர்.

## எண்வகைத் தேர்களின் விளக்கம்

திருக்கோயில் தேர்கள் சக்கரங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் எட்டுவகையாக வடிவமைக்கப்படும். அவை முறையே,

### 1. விஜயரதம் (வெற்றித் தேர்)

இத்தேர் ஒரே மரக்கட்டையிலான சட்டத்தையும், மூன்று சக்கரங்களையும் கொண்டது. இதில் மூன்று சக்கரங்களும் வரிசையாக ஒரே அச்சில் அமைந்திருப்பது சிறப்பாகும். இத்தேரை பெரும்பாலும் போர் பயிற்சிக்கு பயன் படுத்துவர்.

### 2. கண்டாரதம் (மணித்தேர்)

இத்தேர் நான்கு சக்கரங்களை உடையதும், சமசதுர வடிவிலான பீடத்தை உடையதும், இரண்டுஅச்சுகளைக் கொண்டதும், ஒரேஅடுக்கு சட்டத்தை உடையதுமாகும்.

### 3. சக்ரரதம் (சர்க்கராரதம்) (வட்டத்தேர்)

இத்தேர் ஐந்து சக்கரங்களை உடையதும், நடுவில் ஒன்றும் நான்கு மூலைகளில் நான்கு சக்கரங்களை கொண்டுள்ளதாகும். பொதுவாக முன்னோக்கித்தள்ளிய நிலையில் ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு அடுக்குச்சட்டங்களைக் கொண்டதாகும்.

### 4. விசாலரதம் (அகன்றத்தேர்)

இத்தேர் இதன்பெயருக்கு ஏற்றார் போல் அகலமானதும், ஆறுசக்கரங்களை உடையதும், அவற்றை, நடுவில் ஒருஅச்சில் இண்டையும், இருபக்க நீள இருஅச்சுகளில் நான்கையுமாக ஆறு சக்கரங்களைக் கொண்டதும், மூன்று அடுக்குகளில் செதுக்கப் பட்ட சிற்பங்களையும், முறையே முன்னோக்கித் தள்ளிய நிலையில் அடுக்குச்சட்டங்களையும் கொண்டதாகும்.



தேவீ சக்ரராஜ ரதம்

**5. நிபந்தரதம் (கட்டுத்தேர்)**

இத்தேர் நன்குவலிமையாகக் கட்டப்பட்டதும், ஏழுசக்கரங்களை உடையதும், நடுவிலும் முன்னும் பின்னுமாக மூன்று பெரும் அச்சுகளை உடையதும், அவற்றில் நடுவே மூன்றும் மற்றதில் இரண்டுமாக ஏழு சக்கரம் கொண்டதும், சிற்பங்களை மூன்று அடுக்குச் சட்டங்களில் கோர்வையாகக் கொண்டுள்ளதுமாகும்.

**6. ஸ்ரீவிசாலரதம் (அணிஅகலத்தேர்)**

இத்தேர் எட்டு சக்கரங்களை உடையதும், நான்குபெரும் மர அச்சுகளில் இரண்டுசக்கரங்களுடன் அமைக்கப்பட்டதும்,மரசிற்பங்களோடு கூடிய பலஅடுக்கு நான்கு அல்லது ஐந்து அடுக்குச் சட்டக்கோர்வைகளைக் கொண்டதுமாகும்.

**7. பத்ரரதம் (எட்டுபட்டைத்தேர்)**

இத்தேர் ஒன்பது சக்கரங்களை உடையதும், ஐந்து அல்லது ஆறு அடுக்குகளில் மரச்சிற்பங்களை உடைய சட்டக்கோப்புகளைக் கொண்ட தேவையான அகலம் உயரம் கொண்ட பெருந்தேர் ஆகும். இதுமேலே தேவாசனதளத்தை முகபத்திரவடிவில் உடையதாகும்.

**8. பத்ரவிசாலரதம் (20 பட்டையுள்ள முகபத்திரத்தேர்)**

இத்தேர் அடியில் அகல முள்ளதாய், அடியிலிருந்து பலமுனைகளுடன் முகபத்திரவடிவுடையதும், ஐந்து அச்சுகளில் உள்வரிசையிலும் வெளிவரிசையிலுமாக பத்து சக்கரங் களைக் கொண்டதும், ஏழு அல்லது ஒன்பது அடுக்குகளில் செதுக்கிய மரச்சிற்பங்களை சட்டக்கோர்வை முறையில் கொண்டுள்ளதும், தெய்வாம்ச மான புராணசிற்பங்கள் நிறைந்ததும், அகலத்தின் இரண்டரைமடங்கு உயரமுள்ளதாய் வடிவமைக்கப்பட்ட பெருந்தேர் எனப்படுவதாகும்.



ஸ்ரீரங்கம் பங்குனிவிழா கோரதம்

இவைகளில் அனைத்து சக்கரங் களையும் மரத்திம்மைகளை ஒன்று சேர்த்து நீண்ட இரும்புத்திருகு ஆணி களை செலுத்தி திருகுமரைகளால்



சென்னை காளிகாம்பாள் கோயில் கிண்ணி ரதம்

வலிமையாக இணைக்கப்பட்டு, சக்கரத்தின் மையமான குடம் என்னும் பகுதியில் இரும்பினால் அச்சு அமைக்கப்படவேண்டும். சக்கரத்தின் விளிம்பில்இரும்பால்உருவானவட்டை (வட்டம்) அமைக்கப்பட்டிருக்கும். இரும்பு அச்சுகளின் நீளம் சக்கரத்தின் விட்ட அளவைவிட இருமடங்கு அகலத்தில்இருந்துதேரின் அகலத்தை நிர்ணயிக்கிறது. இவ்வாறாக பெருமுயற்சியுடன் சக்கரங்கள், நான்கு குதிரைகள், முக்கிய மூர்த்திகள், பூத்தளவரிசைகள், தெய்வசிற்பங்கள், தூண்கள், சிம்மவரிசைகள், அலங்காரத்தட்டுகள், கர்ணகுடம், கலசம் முதலிய பலஅம்சங்களையும் சிற்பஇலக்கணப்படி செய்து, முறைப்படிசேர்த்து, அழகும் வலிமையும் பெற்றதாக, முழுமையாக பெருந்தேரை அமைத்திட வேண்டும். முதலில் தேர்செய்வோரை மதித்து மகிழ்வுரச் செய்தல் வேண்டும். விச்வகர்மாவின் சமூகத்தினருக்கு பொன், பொருள், புத்தாடைகள், வெகுமதிகள், தந்து, போற்றிப்புகழ்ந்து தேரைப் பொற்றிடுவது விதிமுறையாகும்.

## தேரமைப்பில் சிறப்புவிதி

ஒரு ரத்த்தின் அகலம் 18 அடி எனில் அதன் உயரம் இரண்டரை பாகம் அதாவது 45 அடிஇருக்கவேண்டும். அத்தேரின் சக்கரம் ஏழரைஅடி உயரம் அதன் கணம் பதினெட்டு அங்குலம் ஒன்றரைஅடி இருக்க வேண்டும். தூண்கள் பத்துஅடி உயரம் உடையதாயிருத்தல்முறை. தூண்களின் மேலே அலங்காரத்தட்டுகள் ஐந்துஅடுக்குகளாகவும், அதன்மேல் (குலைவட்டகிசரம் எனும்) கர்ண குடம் அமைத்து, அதன் மேல் ஸ்தூபிகலசம் அமைக்கப்படவேண்டும். தேரின் நடுவே தெய்வம்உறையும்பகுதி நாபிக்கமலமாகும். திருக்கோயில், அதைச் சுற்றியுள்ள பெரும் ராஜரதவீதி, அங்குள்ள மக்கள் தொகை இவற்றைக் கொண்டே ஏற்றதான உயரத்தில் தேரை வடிவமைப்பதும் உருவாக்குவதும் சாஸ்திர விதிமுறையாகும்.

## பல்லக்கு மரவகை (சிபிகா வ்ருக்ஷபேதம்)
## (தேரில் தெய்வத்தை ஏற்றவும் இறக்கவும் உதவும் வாகனம்)

**பாதைர் மஞ்ஜைஸ் ச மௌண்டீ சேத் மண்டபாகார சோபிதா |**
**சூதக் காலஸ் ச திமிரப் பநஸோ நிம்பகா (அ)ர்ஜுநௌ. ||**
**மதூகக் கதிரோ யே (அ)ன்யே ஸாரவ்ருக்ஷாஸ் ஸமீரிதா: |**
**வ்ருக்ஷை ரேதைப் ப்ரகர்த்தவ்யா சிபிகா லக்ஷணாந்விதா ||**

ரதத்தில் தெய்வத்தை ஏற்றவும், அதிலிருந்து இறக்கி ஆலயத்திற்கு அழைத்துச் செல்லவும், பக்தர்கள் தோளில் சுமந்து, எடுத்துச்செல்லக் கூடிய எடுப்புப்பல்லக்கு எனப்படுவது. குறிப்பிட்டவலிமையான மரங்களாலேயே செய்யத்தக்கது. அப் பல்லக்கு பலகால்களோடும், மஞ் சத்தோடும், (நடுவே அமரும் தொட்டிக்கட்டில்) மண்டபவடிவத்தோடும் எழிலுடன் விளங்குவதாக அமைக்கப்படவேண்டும். பல்லக்கு, மஞ் சத்தோடும் மண்டபத்தோடும் உள்ளது மௌண்டீ எனப்பெயருடைய தாகும். பல்லக்கினை அந்தஸ்ஸாரம் எனப்படுகிற உள்வலிமைபொருந்திய மரவகைகளால், குறிப்பாக பெருவாகை, கருமைநிறமுள்ள கோங்குமரம், தமாலமரம், பலாமரம், வேம்புமரம், அர்ஜுனம் எனப்படும் மருதமரம், மதூகம் என்னும் இலுப்பைமரம், கருங்காலிமரம் மற்றும் சந்தனம், தேக்கு முதலிய மரங்களால், உரிய பாலுள்ள மாமரம் அத்திமரம் முதலானவைகளால் இலக்கணத்துடன் பல்லக்கு செய்யத்தக்கதாகக் கூறப்படுகிறது.



தேர் ஏற்ற தேர் இறக்கத்திற்கான சிறு பல்லக்கு

# தங்கரதம் (ஸ்யந்தனம்) (சிறுதேர்)


தங்கரதம் (சிறுதேர் மாதிரிப்படம்)

நான்கு சக்கரங்களின்மேலே சமசதுரமான வடிவிலோ, எட்டுபட்டை வடிவிலோ கனமான மரப்பலகைகளை சமமாகமேல் தளமாக முறையே அமைக்கப் பட்ட பட்டரைகளின் மீது, நிலைப்பான பல கால்களையும், அக்கால்களின் மேல் குறுக்குச் சட்டங்களைப் பொருத்திப் பரப்பி தளம்அமைத்து சிலஅடுக்குகளாக எழுந்து உயர்ந்து உச்சியில் சிறுத்து ஒருகலசத்துடன் நிற்கும் கூரைப்பகுதியுடன் கூடிய ஊர்தி ரதம் எனப்படுவது ஆகும். இதன் முன்புறத்தில் நுகத்தடியைப் பொருத்தி அமைத்து அதில் குதிரையை பூட்டி, தேரோட்டிமூலமாகச் செலுத்துவர். தெய்வங்கள் ஊர்ந்துவரும் பெருவடிவ இவ்வூர்திகள் பலவாறு வடிவமைக்கப் படுவதுண்டு. பண்டையகாலத்தில் பயணத்திற்கு இதையே சிறிய அளவில் அமைத்து, அதன் முன்புறத்தே குதிரையை பூட்டி மனிதர்களும்


தேவீ தங்கரதம் (சிங்கத்தேர்)


உடுப்பி உலோகரதம்

விரைவுவாகனமாகச் செலுத்திப் பயன்கண்டுள்ளனர். இது கோயிலுக்கு உள்ளேயும் வெளியேயும் செலுத்தத்தக்க வகையில் சிறியஅளவில் உலோகத்தகடு போர்த்தி, தங்கரதம் வெள்ளிரதம் என்று பக்தர்கள் கைகளால் தள்ளியும், இழுத்தும், இறைவனை பவனிவரச்செய்வதுண்டு. இந்த ரதம் அனைத்து தெய்வங்களுக்கும் ஏற்றது. இதனை சிறிய அளவில் பெருந்தேரின் உருவத்திலோ அல்லது பூமி பாரதளத்தின் மீது மலர்ந்து உயர்ந்த பத்மஉருவத்துடனோ அமைத்து அடிக்கடி ஒருநாள் விழாவிற்கு ஏற்பது மரபு.

## தேர் (மஹாரதம் / பெருந்தேர்)

மஹாரதம் எனப்படுகிற பெருந்தேர் என்பது வலிமைமிக்க மரமான தேக்கு, கருங்காலி, இலுப்பை, முதலிய மரங்களைக் கொண்டு, எட்டுபட்டை அல்லது சதுர வட்டச் சுற்று ஆகியவடிவில் அடிப்புறம் சிறுத்து, (சமசதுரமாக ஆதாரபீடம் இருக்குமாறு சக்கரங்களில் மேலே, விளங்கிட கீழிருந்து மேலாக சிறிதுசிறிதாகப் படிப்படியாக பருத்து, மரச்சட்டக் கோப்பு சிற்பவேலைப்பாடுகள் நிரம்பிய வெளிப்பரப்பினையும், கீழே வலிமைமிக்கதான நான்கு அல்லது (நடுவில் இரண்டுடன்) ஆறு உருளைச் சக்கரங்களையும் கொண்டது. மூன்று அல்லது ஐந்து அடுக்கு மரத்தட்டுச் சட்டங்கள் நாடிக்கோப்புமுறையில் வலிவுறப் பொருத்தப்பட்டிருக்கும்.

இதன் மேல்தளத்தின் மீது அதிக எண்ணிக்கையில் காடிக்கால் கோப்புமுறையில் சுற்றுப்பகுதியுடன் மண்டபவிதிமுறைப்படி மரக்கால்களை வலுவாக நிறுத்தி, விமானவடிவில் சட்டங்களை அமைத்து அதன் மேலே சித்திரவேலைப்பாடமைந்த வண்ணவண்ணச் சீலைகள் போர்த்தப்பட்டு உச்சியில் ஒரு கலசத்துடன் ஒரு குடையுடன் விளங்குவது ரதம் ஆகும். இதில் யாளிக்கால்கள் நால்புறமும் கட்டப்பட்டு, துணித்தொம்பைகள் தொங்கிவிடப்பட்டு, வேதவடிவமான நான்கு தாவும்குதிரைகளையும், சாரதியாக பிரம்மன் முதலான தேரையும் சிற்பங்களாகப் பொருத்திட, தேரடியில் தேவரைச்சுற்றி அமைந்த வளையத்துள்ளே நுழைத்துப் பிணித்து கனரகமான வடக்கயிற்றினால் தேரைச் சுற்றிப்பிணித்து இருபுறமாகத் தேரின் முன்னே திரளானமக்கள் நின்று இழுத்து தேரை நகர்த்திச் செல்வர். ஆங்காங்கே தேரை நிறத்துதற்கு முட்டுக்கட்டைகளையும், தேரைக் கிளப்புவதற்கு சரக்கட்டைகளையும் பயன்படுத்துவது உண்டு. பெருந்தேர் பலவகையில்




தேரின் உறுப்பு விளக்கப்படம்

பலவடிவில் கலைநயத்துடன் ஒப்பனை செய்யப்படுவதும், அந்தந்த ஊர்மரபுப்படி ரதயாத்திரை பின்பற்றப்படுவதும் நடைமுறை. தேர்மீது தெய்வங்களை இணைப்புப்பலகை போடப்பட்ட தேரேற்று மண்டப தளத்திலிருந்து ஏற்றியும், அவ்வாறே தேரிலிருந்து ரதாரோஹண மண்டபத்தில் சமஉயரதளத்தில் இறக்கி, படிக்கட்டு மூலம் தரைஇறக்கி ஆலயத்தை அடைவிப்பதும் தேர்த்திருவிழா மரபு ஆகும்.

## ரதார்ப்பண பலன் (தேர்செய்தளிப்பதன் பயன்)

**ஏவம் ரதம் ஸமாபாத்ய யக் குர்யாத் ப்ரோக்ஷணம் நர:**
**இஹைவ தனவான் ச்ரீமான் வாஞ்சிதம் பலம் ஆப்னுயாத்.**

இவ்வாறாக இலக்கண அளவு விதிமுறைப்படி முழுமையாகத் தேரைத் தயாரித்து, இவ்வுலகில் எவரொருவர் தேவாலயத்திற்கு கொடையாக அளித்து அதற்குரிய ரதப்ரதிஷ்டை என்னும் தேரின் ஸம்புரோக்ஷணம், என்னும் கும்பாபிஷேகவைபவத்தைச் செய்கின்றாரோ, அம்மனிதர், இறையருளால் இவ்வுலகிலேயே சிறந்த செல்வந்தராகவும் தனவந்தராகவும் வாழ்ந்து, தாம்விரும்பிய பயனை அடைவார் என்று ஆகமநூல்கள் பயனைக்கூறுகின்றன.

## தேரின் பலவகை அமைப்பு முறைகள்

- சிவபெருமானின் திரிபுரசம்ஹாரத்திற்காக **மகாரதம்** ஏற்பட்டதாக புராணவரலாறு கூறுகிறது.
- மகாரதம் என்பது ஸம்ஸ்க்ருத மொழியிலும், **திருத்தேர்** என்பது தமிழிலும் கூறுவது வழக்கத்தில் உள்ளது.
- இரண்டு சக்கரம் உள்ள ஓடக்கூடியவாஹனத்தை **சகடம்** அல்லது **சகடை, ரதம்** என்று கூறுவார்கள்.
- ரதம் என்ற சொல்லுக்கு கேசவன் ஆனந்தன் என்றும் ஒருபொருள் உண்டு.
- "உள்ளம் பெருங்கோயில், ஊன் உடம்பு ஆலயம்" என்ற திருமூலர் சொல்லுக்கு இணங்க ஒருஆலயத்தின் அமைப்பு போல் **மஹாரதம்** ஒரு அசையும் கோவிலாகும்.
- எம்பெருமான் பரமேஸ்வரன் நின்றகோலத்தில் காட்சிஅளிக்கும் நிலைக்குஒப்பாக மஹாரதத்தைக் கூறுவார்கள், எப்படி ஒரு மனிதன் நின்றால் கால்கள் பூமியில் ஸ்பரிசம் செய்துகொண்டு



இருக்குமோ, அது போல் மஹாரதத்தில் நடுவிலுள்ள இரு சக்ரங்களை இறைவனின் திருவடி என்று சிற்பசாஸ்திரம் கூறுகிறது. அடி முதல் உச்சிகலசம்வரை தெய்வத்தின் ஸ்தூலதேஹ ரூபமாகும்.

- தேரானது பைட, கேசரீ, மண்ட (மௌண்டி) என்று மூன்று வகைப்படும். சக்ரம் முதல் விஸ்தார மட்டம் வரைஉள்ளதும், ஆகமம் மற்றும் சிற்பசாஸ்த்ரங்களில் கூறியபடி சிகரம் இல்லாமலும் இருக்கும்தேர் பைட என்றும், சிகரத்துடன் கூடிய தேர் கேசரீ என்றும், மஞ்சங்கள் போன்ற மற்றும் மண்டபாகாரமுள்ள தேரை மௌண்டி என்றும் கூறுவார்கள். இவ்விதம்உருவ அமைப்பால் தேர்மூன்றுவகைபடும்.

- தேரின்சக்கரமானது மூன்றுசக்கரம் முதல் ஒன்பது சக்கரங்கள் வரை பலவகை எண்ணிக்கையில் அமைக்கக்கூடியது என்று உத்தரகாமிகாகமம் கூறுகிறது, ஸூர்யனுடைய தேரானது ஒரே சக்கிரத்துடனும் ஏழுகுதிரைகள் பூட்டியது என்றும் வேதாகமபுராணங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. மேலும் பலசக்கரமுள்ள கட்டுத்தேரை பூரிஜகன்நாதர் முதலிய பலதலத்தில் அன்றும் காணலாம்.

- மஹாரதம் என்பதை இருபத்திஏழுஅடி உயரம்முதல் அறுபதடிவரை உயரமுள்ளதாக அமைக்கலாம். அல்லது ஊருக்கு தகுந்தார்போலவும், வீதிகளுக்கு தகுந்தார்போலவும் தேவைக்கேற்பவும் அமைக்கலாம். என்று ஆகமமும், சில்பசாஸ்த்திரமும் கூறுகின்றன.

- தேரின் சக்ரங்களை இணைக்கும் அச்சுக்கு "பூதபார்" என்று சிற்பசாஸ்திரத்திலும், "மாயாதண்டம்" என்றும் பாரவாஹீ ஆகமத்திலும் பெயர் கூறப்பட்டுள்ளது.
- மேலும் இங்கு மாயா என்றசொல் பஞ்சபூதங்களைக் குறிக்கும் என்று கூறுவதுண்டு. ஸூக்ஷ்மதேஹத்திற்கான முப்பதுதத்துவ உற்பத்திக்கு மூலகாரணமாக மாயாதத்துவமே ஆதாரமாக உள்ளதால் இங்கு இதற்கு இப்பெயரால் முக்யத்வம் அளிக்கப்படுகிறது.
- சிற்பசாஸ்திரத்தில் தேரின் நான்குசக்ரங்கள் நான்கு யுகத்திற்கு ஒப்பாக யுகங்களாக கூறப்பட்டுள்ளன, ஸூர்யசந்திரர்களின் சுழற்சியே காலம், காலத்தின் சுழற்சியே யுகங்களாகும். ஆதலால் ரதப்ரதிஷ்டையில் சக்கரங்களில் ஸூர்யன் சந்திரன் இவர்களை பூஜை செய்யவேண்டும் என்று சைவஆகமங்களில் கூறப்பட்டுள்ளது இங்கு உற்றுநோக்கி உணரத்தக்கது.
- பூதபார் என்னும் பகுதிமுதல் உபபீடம், பத்ரபீடம், உபபத்ரபீடம் ஆகிய விஸ்தாரமட்டப்பகுதிவரை, ஆகமத்தில் கூறியுள்ளவாறு அளவுகளைக்கூட்டியும், குறைத்தும் வலிமையுடன் அழகுமிக்கதாய் வண்ணக் வேலைப்பாடுகளுடன் அமைக்கப்படவேண்டும்.
- உபபீடம் மற்றும் மஹாரதத்தின் கண்டப்பகுதிகளில் நாடககோலம், நடனமங்கை, மிருகம், பக்ஷி போன்ற பலவகை உருவபொம்மைகளை அமைக்கலாம்.
- விஸ்தாரமட்டத்திற்குமேல், தேவர்கள் இருக்கும் இடமாகும், அதற்கு மேல் சிம்மாசனத்தை அமைக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.
- மகாரதத்தை ஏகதலம், தவிதலம், த்ரிதலம் உடயதாக பலஅடுக்குகளுடன் பலவகையில் அமைக்கலாம்.







- திருவாரூர் திருத்தலத்தின் தியாகேசர்கோயில் திருத்தேரைப் போல பலதலங்கள் (நிலைகள்) இருந்தால், அதில் ஏறுவதற்கு உள்ளேயே படிகட்டுகளை அமைக்கலாம் என்கிறது ஆகமசிற்பசாஸ்திரங்கள்.
- விஸ்தாரமட்டத்தில் கோயிலினுடைய வரலாற்றுப்படி பலவகையான சிற்பங்களை அமைக்கலாம்.
- விஸ்தாரமட்டத்தின் அருகில் சிம்மம் போல் நீள வாக்கில் பூவேலைப்பாடு பூரிமம் ஒன்று இருக்கும், அதற்கு ஸூக்ஷமம் என்று மரபுப்பெயர் கூறுவர்.
- ரதத்தை மூன்று நிலைகளுடனும், ப்ராகாரத்துடனும், முப்பத்தாறு அல்லது ஐம்பத்திரண்டு என்ற எண்ணிக்கையில் தூண்களுடனும் அமைப்பட வேண்டும் என்று நூல்களில் அமைப்புமுறை கூறப்படுகிறது.
- விஸ்தாரமானம் என்கின்ற தேரின்அகலத்தை, தேவாஸனம், சிம்மாசனம், நாபிக்கமலம் என்கிற அமைப்புகளின் விதிமுறைப்படி அமைக்கவேண்டும், விமானகர்ணகூடு பகுதி இறைவனின் முகமண்டலமாகவும், தேர் கலசம் கிரீடமாகவும் விளங்குகிறது என்று சிற்பசாஸ்திரத்திலும் ஆகமத்திலும் கூறப்பட்டுள்ளது.
- ரதத்தின் உயரத்திற்கு தகுந்தார்போல் மூன்று அடுக்குகள் அல்லது ஐந்துஅடுக்குகளுக்கும்மேலாக பலஎண்ணிக்கைகளில் கட்டுத்துணிகளை சுற்றி அலங்காரத் தட்டுப்பந்தலை அமைக்கலாம், அதற்கு மேல் கர்ணகூடும் (சிகரம்), அதற்குமேல் கலசமும், அதன் அருகில் குடையும் பொருத்தி அமைக்கப்படவேண்டும் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

- மஹாரதத்திற்கு தேரோட்டுகிற ஸாரதியாக நான்முகப் பிரம்மதேவரைத்தவிர நூல்கள், முருகன், நந்திகேஸ்வரர், விஷ்ணு, இந்திரன் இவர்களில் எவரேனும் ஒருவரை ஸாரதியாக அமைக்கலாம் என்கின்றன. பொதுவாக பிரம்மாவே சாரதியாக இருப்பது அநேகஇடங்களில் வழக்கத்தில் காணப்படுகிறது. ஸூர்யனின் சாரதிக்கு அருணன் என்று பெயர். இவர் தாமரைமலர்வடிவில் அதன்மீது கால்களின்றி இடுப்புவரை உள்ளவராக அமைக்கத்தக்கவர்.
- தேரின்மையப்பகுதி சிம்மாஸனத்தின் நடுவில் ஊஞ்சலை அமைத்து, அதில் எழுந்தருளச்செய்து, உலா வரச்செய்து, இறைவனை கண்குளிர தரிசனம் செய்வது சிறப்பு தருவதாகும். பல ஊர்களில் தேரினுள் நடுவே அசைந்தாடும் ஊஞ்சலில் இறைவனின் ஊர்வலம் செய்வதைக்காணலாம்
- தொண்டை மண்டலத்தில் மட்டும் தான் மஹாரதத்திற்கு நிரந்தரமாக மூன்று நிலை, ஐந்துநிலைகள் என்று அலங்காரப்பந்தல் அமைக்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது, மற்றஇடங்களில் தேரில் சிம்மாஸனம்வரை நிரந்தரமாக அமைத்து, திருவிழாவின் பொழுது மேல்விரிப்பு விதானம், மற்றும் பலஅடுக்கு நிலைகள் போன்றவைகளை தற்காலிகமாகக்கட்டி அமைப்பதும் ஒருவகை செய்முறை ஆகும். (அலங்கரிப்புமுறை)



- சிற்பசாஸ்த்திரத்தில் பத்ராசனம், கமலாசனம் என்று இரண்டு வகைத்தேர் கூறப்பட்டுள்ளது. இவை இரண்டும் முறையே நடுவே முகபத்ரபீடம், பத்மபீடம் உடைய அமைப்புகளாகும்.
- மேல்தலத்து நிலைகளின் சிகரவர்க்க அமைப்பானது, எட்டு, பதினாறு மற்றும் முப்பத்திஇரண்டு பட்டைகள் உள்ளதான, அமைப்புகளைக் கொண்டிருக்கும். பெரும்பாலும் மஹாவிஷ்ணுவின்தேர் எட்டுபட்டைகளை கொண்டதாக இருக்கும். சிவனாரின்தேர் சதுரம் அல்லது வட்டம் வடிவில் இருக்கும். இது நாகரம், திராவிடம், வேசரம் என்ற விமான வகையின் உருவங்களே என்றுஅறியலாம்.
- தேரினைப்போன்ற ஒருவகையான சகடை என்று கூறப்படுவதில் ஆறுகால், எட்டுகால், பதினாறு கால்களை நாட்டி அமைத்து மேல்நிலையை ஒருதலமாகவும், அதன்மேல் கர்ணகூடும் அமைந்திருக்கும் எடுத்துகாட்டாக தங்கரதம், வெள்ளிரதம் போன்றவை இவ்வகையில் அமைந்தவைகளாம். சிறுஉலோகத்தேர் ஸ்யந்தனம் என்று பெயர்பெறும். இவ்வாறு இந்து ஆலயங்களில் காணப்படும் விழாக்காலத்தேர்களையும், அதன் வடிவமைப்பின் முறைகளையும் அறிந்து, விதிமுறை வழுவாமல் தொடர்ந்து பின்பற்றி தேர்திருவிழாவை செய்தும், தேரின் தளவாடப்பொருள்களை பாதுகாத்தும், கட்டுமான அலங்கரிப்பு பணிகளைக்கற்றறிந்து செய்தும், சமயத்தொண்டாற்றி இறைவனின் அருளைப்பெற்று இன்புற்று வாழ்வோமாக.



# தேரின் தெய்வாம்சமும் கிரியைகளும்



மரத்தேரில் சிற்பஅமைப்பு முறை

## உத்ஸவ யானக்ரமம் (விழாவில் சுவாமி புறப்பாட்டு முறை)

திருவிழாவில் சுவாமிபுறப்படுதல் என்பது மிகமுக்கியமான செயலாகும். இதற்கென மஞ்சம், ரங்கம், கேடகம், பல்லக்கு, வாஹனவகைகள், பெருந்தேர் முதலானவற்றை, முன்னதாகவே சரிசெய்து மேம்படுத்தி, தயார்நிலையில்உரிய இலக்கணத்துடனும் வலுவுடனுமிருக்கச்செய்வது விதிமுறை. ஒவ்வொரு விழாநாளிலும் ஒவ்வொரு விதமான வாஹனத்தை ஆகமங்கள் குறிப்பிட்டு புறப்பாட்டை முறைப்படுத்திக் கூறியுள்ளன. அவற்றினுள்

திவாகாலே ரதம் ஸப்தே ராத்ரௌ சேஷ மதாசரேத் என்று, காரணாகமம் பெருவிழாவில் ஏழாம்நாளில் தேரோட்டத்தினை விதிக்கிறது. வேறுசில சிவாகம உத்ஸவ விதிகளில்,

நவமே து ரதாரோஹம் தசமே து விமானகம் என்றும், சப்தமே ரத மாரோப்ய அஷ்டமே துரகம் பவேத் என்றும், ஆகமங்களில் கூறப்படுவதால் ஏழாவதுநாளில் அல்லது ஒன்பதாவதுநாளில் தேரோட்டம் விதிக்கப்பட்டுள்ளதை நாம் அறியலாம். பெரும்பாலும் பெருவிழாவில் தேரோட்டம் முக்கியத்வம்பெற்று விளங்குவதும், மறுநாள் விழாவானது நிறைவுபெறுவதும் அதிகமாக வழக்கில்உள்ள நடைமுறையாகும். எனவே கடைசிநாளைக்கு முந்தியதினம் ரதோற்சவம் செய்யத்தக்கது. யானக்ரமத்தில் ரதயாத்ரா தனிச்சிறப்புடையதாகும்.

# ரதயாத்ரா க்ரம பூஜாவிதி
# (தேரேற்றத்திற்குறிய சடங்குமுறைகள்)

மகோத்ஸவத்தின் இடையில் அதிவாச பூஜையுடனோ அல்லது அக்கால பூஜையுடனோ தவறாமல் ரதபிரதிஷ்டையை செய்தபிறகே தேரில் தேவதையின் ஏற்றத்தை ஆரோஹனத்தைச் செய்யவேண்டும். தேரேற்றம் செய்யஉள்ள தினத்திற்கு முதல்நாள் இரவில் உரியதேவதையின் மூர்த்திசிலைக்கு காப்புகட்டி, நீராட்டுதல் முதலானவற்றைச் செய்து, சிறப்புடன்பூஜித்து, இறைவனிடம் தேரேறிவந்து அருள்புரியுமாறு, வேண்டிவிண்ணப்பித்து தேர்த்திருவிழாவைச் செய்வது ஆகமமுறை.

**ரதாரோஹண பூர்வே து ராத்ரௌ கௌதுக பந்தனம்.**
**தேவேசம் ப்ரார்த்தயேத் பூஜ்ய ரதஸ்ய ஆரோஹணம் ப்ரதி.**

## ரதாங்க தத்வரூபம் (தேரின் உறுப்பு தெய்வாம்சம்)

**மகாரதம்** என்பது முற்றிலும் பலதெய்வங்களையும் தனது உறுப்புகளாகக்கொண்ட தெய்வாம்சமுள்ள **திவ்யவாஹனமாகும்**. மூலக் கோயில்கள் அசையாது ஒரேஇடத்தில் நிலைத்துநின்று அருள்தருவன. திருத்தேர்கள் அதேபோன்று அசையும்நிலையில் இருந்து அருள்பவை. **சல ஹர்ம்யம் ரதம் ஸ்ம்ருதம்** என்ற ஆகமவசனப்படி, ஆலயதேர்கள் அசையும் கோயில்களே ஆகும். அதில்இருந்தபடி வீதியில்வந்து அருளுவதால் தேரில்வணங்குவது யாருக்கும் சிறந்த பயனை அளிப்பதாகிறது. வேதாகமங்கள் நமது உடலை இறைவனின் தேராகவே கூறுகின்றன. மானஸபூசையில் நமது உடலில்உள்ள அனைத்தும்வழிபாட்டிற்கான வையாகவும், உடலே தேராகவும் கருதி த்யானிக்கப்படுவதுஇங்கு உற்றுநோக்கி உணரத்தக்கது. பல உபநிஷதங்கள் நமது உடலை தேராககூறும்.


தேரில் திரிபுராந்தகர் கற்சிற்பம்

**தேஹோ தேவாலய: ப்ரோக்தோ ஜீவோ தேவஸ் ஸதாசிவ:** என்றும், **அஹங்காரோ கஜத்வென க்ளுப்தோ தேஹோ ரதாத்மனா** என்றும் கூறப் படுவதால் இதனை அறியலாம். கோயிலுக்கு

கும்பாபிஷேகம் செய்தபின்பு அதனுள் இறைவனை இருத்தி வணங்குதல் போலவே, தேருக்கு முதலில் விமானப்பிரதிஷ்டையின் விதிமுறையைப் பின்பற்றி, ரதப்ரதிஷ்டையை ஆகமப்படி செய்துமுடித்து, பரிசோதித்தபின்பு முறைப்படி தேரை பூஜித்து, தேரை அலங்கரித்தபின்பே, தெய்வப்புறப்பாடு செய்யத்தக்கதாகிறது, எனவே அந்த தேரின்அனைத்து உறுப்புகளும் மந்திரநியாஸ கிரியைகளாலும், அதன் உறுப்புதெய்வங்களின் பூஜைகளாலும், அத்தேர் தெய்வாம்சம் உடையதாகி, அதன் மரத்தன்மை விலகி, அருள் தருகிற திவ்யரததரூப தேஹமாகிறது. எனவேதான் இத்தகைய தேரில் நகர்வலம் வருகிற இறைவனை மக்கள் வணங்குவதால், தாம் விரும்பியபயனை விரைவில் எய்துவார்கள் என்று, ரதோத்சவ சேவையின் அறியபயனை ஆகமங்கள் கூறுகின்றன

ரதஸ்தம் சங்கரம் த்ருஷ்ட்வா புனர்ஜன்ம ந வித்யதே என்று ஆகமம் கூறி, தேரில் உள்ள இறைவனை தரிசிப்பவர்கள் மீண்டும் பிறவாத நிலையை எய்துவார்கள் என்கிறது.



திரிபுராந்தகர் சிற்பம் திருவதிகை வீரட்டேஸ்வரர் கோயில்



## ரதாங்கதேவதாரூபம் (தேர்த்திருவுருவம்)
## (தேர்வடிவில் இருந்தருளும் தெய்வம்)

தேரின் ஸகல அவயவங்களும் ஒருமனிதனின் திருமேனியை போன்றது. நடந்து அசைந்துவரும், தெய்வத்திருமேனியே திருத்தேர் ஆகும். இதனை மஹாரதரூப தியான சுலோகத்தால் நன்கு அறியமுடிகிறது. தேர்இலக்கண உருவச்சான்று, சுலோகம்

பாதௌ து பாதசக்ரம் து ஜானுதேசம் து கீலகம்.
ஊரூ சைவ தலம் ப்ரோக்தம் த்விதலம் கடிதேசகம்.
த்ரிதலம் நாபிதேசம் து சதுர்தந் து உரஸ் ததா.
பஞ்சமம் ஹ்ருதய ஸ்தானம் ஸ்தம்பானி து கராணி ச.
லோஹ ஸ்தானம் புஜம் சைவ கர்ணதேசம் து கந்தரம்.
சிகரம் முக மித் யுக்தம் மகுடம் மௌளி ருச்யதே.

உஷ்ணீஷாந்தம் சிகா சைவ மஹாநாஸா து கரோத்ரகம்.
மண்டலம் நேத்ரயோ ஸ்தானம் க்ஷூத்ரம் நாசிஸ் ததைவ ச.
இத் யேதைர் லக்ஷணைர் யுக்தம் மஹாரத ஸ்வரூபகம்.
(ஆகம பூஜாபத்ததி)

## ரதாரூட தேவதைகள் (தேரேரிய தெய்வங்கள்)

தேரை தெய்வத்தின் ஸ்தூலதேஹமாகக் கருதி பூஜித்தல் ஆகமமுறை. மேலும் தேரின் ஒவ்வொரு உறுப்புகளிலும் பூஜிக்கப்படவேண்டிய தெய்வங்களை சிவாகமங்கள் குறிப்பிடுகின்றன. இதில் பலதெய்வங்கள் தேர்மீது உள்ளவர்களாக கூறப்படுகின்றனர். பலகோயில்களில் மூலக்கருவறையின் மேலே அமைந்துள்ள விமானம் தேர்உருவிலேயே விளங்குவதை திருவதிகை முதலிய தலங்களில் இன்றும் காணலாம். வேதத்தில் ஸ்ரீருத்ரத்தில் முதலில் சிவனார் வில் அம்பு ஏந்திய ரதாரூடராகவே, சுவாமி த்ரிபுராந்தகராக முப்புரம்எரித்த முக்கண்ணராகவே, போற்றப்படுகிறார். அவ்விதமே பொதுவாக, தேரில் பூஜிக்கப்படுகிற தெய்வங்கள், அவ்வப்பகுதியில் அருவநிலையிலேயே இருந்து அருளுவார்கள். தேவர்கள் கொடிமரத் திலிருந்தபடி விழாவில் அருளுவதைப் போலவே, தேரிலும்இருந்து வீதியில் வரும்போது அருள்வார்கள். எனவே அத்தேரை கட்டியவடம்பிடித்து இழுத்து அழைத்துச்சென்றும், அத்துடன்சென்று வலம்வந்தும், அன்பர்கள் நீண்டஆயுளையும் இஷ்டசித்தியையும் பெறுவர். பெருசாந்திதெய்வங்களான உக்ரரதர், பீமரதர், விஜயரதர் போன்ற ருத்ரமூர்திகளும், ராஜராஜேஸ்வரியும், ராமர், கிருஷ்ணர் முதலானோர்களும் சுரதர், தசரதர், ஜயத்ரதர் என்ற அரசர்களும் தேரேறிக்காத்ததாக புராணங்களும் ரதயாத்ராழகிமையைக் கூறுகின்றன. அரசனின் படையிலும், உபசார இலக்கணத்திலும் தேர் முதலிடத்தில் விளங்குகிறது.

## ரதப்ரதிஷ்டா மூர்த்திகள் (தேரில் இருந்து அருள்பவர்கள் (தேரில் உறுப்புகளில் பூஜிக்கப்படுவோர்)

தேரின் அனைத்து உறுப்புகளில் பூஜிக்கப்படுவோரை இனி அறிவோம். தேரின் முக்கிய அடிப்பகுதியாகிய உருத்தடியில் 1) கோபதியான வ்ருஷபதேவரையும், 2) தேர்சக்கரத்தின் இருபக்கங்களில் சூரியர் சந்திரர்களும், 3) அனைத்தையும் தாங்குகின்ற மேல்ஆதாரதண்டத்தில் ஆதாரசக்தியும் (பூமாதேவி) 4) நடுப்பகுதியான தண்டத்தில் விஷ்ணுவும், அனந்தமஹாநாகமும், 5) தேரின்



திருவீதியில் தேர்பவனி வருதல்

முக்கியஅடுக்கடுக்கான சட்டங்களாகிய பட்டிகைகளில் நூறு ருத்ரர்களும், 6) திசையின் எட்டு பட்டிகைகளில் அனந்தன் முதலான எட்டு மஹாநாகங்களும்,7) த்வாரபாலகஸ்தானத்தில் (ஜயன், விஜயன்) அல்லது தண்டி, முண்டி முதலியோரும், 8) தேரின் மையமேடை சிம்மாசனத்தில் தர்மாதி பீடதேவதைகளும், 9) தேர்க்கால்களில் அதன் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு 12ஆதித்யர்கள், 8 மருத்துகள், 8க்ஷேத்ரபாலகர்கள், 8வசுக்கள் ஆகியோரும் 10) தேரின் தூண்களின் இடைவெளிகளில் 10வகையான வாயுக்களும் 11) சுற்றிலும் மேலும்கீழுமாக தசலோகபாலர்களும், நவசக்திகளும், 12) தேரின் தலைப்பகுதியான சிகரத்தில் சதாசிவரும், ஐந்துமுகமுள்ளசிவனாரும் 13) தேரின் நான்கு திசைகளில், சிகரவர்கத்தில் முறையே கிழக்கில் கந்தசாமியும், தெற்கில் தட்சிணாமூர்த்தியும், மேற்கில் விஷ்ணுவும், வடக்கில் பிரம்மாவும் அந்தந்த ஆலயத்தின் விமானத்தில் திசாமூர்தங்களாக அமைந்து உள்ளவர்களும்,14) பிரதானதேர்த்வாரபாலகர்களின் பதுமைகளில் டிண்டி, முண்டி இருவரும், 15) தேரோட்டிடும் சாரதியாக நான்முகனாகிய பிரம்மதேவரும், 16) தேர்குதிரைகளில் ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்கிற வேதமூர்த்திகள் நால்வரும், 17) தேரின்மையத்து மேல்விரிப்பு விதானதுணிக்கமலத்தில் பஞ்சகலாசக்திகளும் 18) தேர்க்குடையில் கட்டுகளில் வாஸுகீ என்கிற மகாநாகதேவரும், 19) தேர்க்குடையில் ராஜலக்ஷ்மியாகிய ராஜ்யஸ்ரீயும், 20) கொடியில் தர்மதேவதையும், 21) தேர்கலசத்தில் சிவசக்திகளும், பூஜிக்கப்படவேண்டும். இவ்வாறு அனைத்து உறுப்புகளிலும் உரியதெய்வங்களை ஆகமபத்ததிகள் கூறியுள்ள விதிமுறையைப் பின்பற்றி சாந்தம் அல்லது உக்ரம் என்னும் இருவகை தேவதைக்குஏற்ப தோற்றத்துடனும் ஆயுதத்துடனும் கூடியுள்ளவாறு தெய்வங்களைக்கருதி பூஜித்திடவேண்டும். இதுவே ரதாங்கதேவதார்ச்சனம் எனப்படுவதாகும். இதனை ஆகமங்களில் ரதோத்ஸவவிதி, ரதப்ரதிஷ்டாவிதி இவைகளில் விரிவாகக்காணலாம்.

## ரதப்ரதிஷ்டா க்ரியாக்ரமம்

## (தேர்தெய்வப் பட்டாபிஷேக ஏற்புமுறை)

ரதப்ரதிஷ்டைக்குறிய செயல்முறைகள் ஆலயத்தின் விமானகும்பாபிஷேகத்தைப் போன்றவையாகும். தேரேற்றத்திற்கு முன்தினம் மாலை ஒருகுண்டம் ஒருவேதிகையுடன் கூடிய ஒரு வேள்விச்சாலையை அல்லது பூஜாமண்டபஸ்தானத்தை அமைத்து, அதன்நடுவே சதுரமேடையில் பத்துகலசத்தில் உரியதெய்வங்களை கும்பத்தில் நன்கு பூஜைசெய்து, அதற்கு எதிரில், அருகிலேயே ஹோமகுண்டம் அல்லது மணல் ஸ்தண்டிலத்தில் சிவாக்னியை கற்பித்து, உரியதெய்வங்களுக்கு முறைப்படி நூறு, நூறு ஆஹுதிகளைக்கொடுத்து, அப்பொழுது தேருக்குரிய குடை, மகுடகலசம், கொடி, கயிறு முதலிய தளவாடப்பொருட்களையும்வைத்து, சோதித்து, புண்யாஹம் பஞ்சகவ்யத்தால் சுத்திகரித்து, பின்பு பூஜித்து அதிவாஸபூசையை இவ்வாறு முடித்து, மீண்டும் மறுநாள் காலையும் இவ்வாறே புனர்பூஜை, ஹோமம், இவற்றைச் செய்துமுடித்து, கும்பம் மற்றும் பொருட்களை புறப்பாடுசெய்து தேரில் ஒன்றுசேர்த்து, புனிதமான பூஜித்த கும்பதீர்த்தத்தால் நடுவில் சிம்மாசனத்திலோ, அல்லது வடகிழக்குமூலைத் தூணிலோ, ஆவாஹித்து, ஒன்றிணைத்து அனைத்துதெய்வங்களையும் ஆங்காங்குபூஜித்து, ஆவாஹித்து பஞ்சோபசாரங்களைச்செய்து, நிவேதனம் செய்து திக்தேவதைகளுக்கான அன்னபலிகளைத் தந்து பிறகு ரதயாத்ராகாலத்திற்கான உரிய விசேஷ யாத்ராதான வகைகளையும் வீட்டுஉபயோக பொருட்களையும் தானம்செய்தும், விஸ்வகர்மாவின் ப்ரீதிக்காக ரதகாரகர்களான மரத்தச்சர்களை வெகுமதிகள் அளித்து கௌரவித்தப்பிறகு, அந்த தேரின் புறப்பாட்டைத் நீராஜனத்துடன் துவங்கி வாஹனவல்லுனர்களுடன் தடையற்றதாய் தேரோட்டத்தை ரதவீதிவலத்தை முறைப்படி செய்துமுடித்து, தேரைஉரிய நிலையில் ரதமண்டபத்தருகே நிலைபெறச் செய்வது முறையாகும். தேர்நிலை மண்டபம் ரதாரோஹண மண்டபாகும்.



யாளி, குதிரை முதலியவற்றால் தேர்அலங்கரிப்பு வழிமுறை

## ரதாரோஹண விதி (இறைவனை தேரில் ஏற்றும் முறை)

காலையில் தேவனிடத்தில் "தேரில்ஏறி வலம்வந்து அருளவேண்டும்" என்றுகூறி ஆசாரியார் விண்ணப்பித்து, ரதாரோஹணத்திற்கான துதிப்பிரார்த்தனையை முறையே செய்து ராஜஉபசாரத்துடன் சுவாமியை அழைத்துவந்து, தேரடியில் ரதஆரோஹண மண்டபத்தில் வைத்துப்பூஜித்து, பின்பு, முறையே சுபமுஹூர்த்தத்தில் தேரில்ஏற்றி, புறப்பாட்டை செய்து, ரதவீதிகளில் எட்டு திசைகளிலும் உள்ள திக்பாலகமண்டபத்தின் அருகில், (மண்டகபடிபூஜை) சிறப்புபூஜையையும் மற்றும் வினோத காட்சிதரிசனங்களையும் செய்துமுடித்து, மீண்டும் உரிய தேரடிமண்டபத்தில் அழைத்து அமர்த்தி, இளைப்பாறச் செய்தபின்பு, மண்டபத்தில் இருந்து பல்லக்கின் மூலமாக சுவாமியை, மீண்டும் ஆலயத்தின் யதாஸ்தானத்திற்கு எடுத்துவந்து, மாலை பிராயச்சித்தமாக சிறப்பு அபிஷேகங்களைச் செய்து சிறப்பாக, அன்னம் பக்ஷயம் பழங்களை நிவேதித்து உபசரித்தலே ரதோத்ஸவ விதிமுறை ஆகும். பகலில் தேரோட்டத்தை செய்யத்துவங்கி, மாலையில் தேரிறக்கத்தைச் செய்து, உடன் இறைவனுக்கு மஹாஸ்னபனகலச அபிஷேகத்தை யாத்ராகாலத்து களைப்பு, மற்றும் அசுத்தம் அகன்றிட நீராட்டுதலைச் செய்து, விழாவை முடித்தல் விதிமுறை ஆகும்.



மதுரை சுந்தரேஸ்வரர் தேர்பவனி

# ரதோத்ஸவாந்த ப்ராயச்சித்த ஸ்நபனம்.

## (தேரிறக்கக்கால திருமஞ்ஜனம்)

மஹோத்ஸவத்தில் ஊர்வலத்தின் முடிவில் உற்சவமூர்த்திக்கு யாத்ராந்த ஸ்நபனம் என்பதாக அபிஷேகிப்பது அவசியம். சுவாமி ஆலயத்தை அடைந்தபின்பு, ப்ராயச்சித்தத்திற்காகவும், ஏற்படும் ஸகலதிருஷ்டிதோஷங்கள். தொடப்பட்டதால் ஏற்படும் ஸ்பர்சதோஷம் இவை நீங்குவதன்பொருட்டும், சிறப்புநீராட்டல் செய்யப்பட வேண்டும். இதில் விசேஷமாக பகலில் தேர்மீது பவனிவந்து, தேர்நிலையிலிருந்து மாலை அவரோஹணத்தை, அதாவது சுவாமி இறங்கிவருதலைச் செய்து, ஆலயத்திற்குள் சுவாமி வந்த பிறகு, ஒவ்வொருமூர்த்திக்கும் (பஞ்ச மூர்த்திகளுக்கும்) தனித்தனியாக ஒன்பதுகலசங்கள் வைத்து ஸ்னபனபூஜையை செய்து உபசரித்து முடித்து, சாந்திமந்திரங்களால் மந்திரித்து, பிறகு விசேஷமான அபிஷேகதிரவியங்களான அபிஷேகப் பொடிவகைகள், பஞ்சகவ்யம், பஞ்சாமிருதம், பால், தயிர், நெய், தேன், கரும்புசாரு,



வெள்ளிரதம் திவ்யஸ்யந்தனம் சிறுதேர்

பழவகைகளின் சாரு, இளநீர், சந்தனம் முதலியவற்றாலும், பத்ரம், புஷ்பம், சங்கு, கொம்பு, ஸஹஸ்ரதாரா முதலானவற்றாலும் மந்த்ரோதகங்களாலும் நன்கு நீராட்டி, முடிவில் பூஜித்துவைத்த அத்தெய்வத்தின் ஒன்பதுகலசப் புனிதநீரால் திருமஞ்சனத்தை செய்துமுடித்து, அலங்கரித்தபின், அமுதமான அன்னவகைகளால் பெரும்படையலை நிவேதனம் செய்து, பிழைகளைப் பொருத்தருளவேண்டி, வணங்குதல் ஆகம முறையாகும்.

ரதாவரோஹணா தூர்த்வம் ப்ராயஸ்சித்தாதி ஹேதவே.
ஸ்நபனம் காரயேத் தீமான் ப்ரத்யேகம் பேர ஸங்க்யயா.

இத்தகைய ஸ்நபனாபிஷேக க்ரமத்தைக் கூறும் சைவஆகமசான்று இதுவே.

பரிக்ரம்ய ஆலயம் பஸ்சாத் பிம்பாக்ரே ஸ்தண்டிலே ந்யஸேத்.
சோமாஸ்கந்தாதி தேவானாம் மஹா விபவ விஸ்தரம்.
விசேஷ த்ரவ்ய ஸஹிதம் சுத்த கர்பூர ஸம்யுதம்.
அபிஷேகம் ப்ரகுர்வீத கந்தாத்யை பரிபூஜ்ய ச.
அபிஷிச்ய யதா ந்யாயம் அலங்க்ருத்யா ம்பராதிபி:.
ஸம்பூஜ்ய கந்தபுஷ்பாத்யை: நைவேத்யம் தாபயேத் தத:.
(சைவாகமம்)

இவ்விதமாக பரிஹாரஅபிஷேகத்தைச்செய்து பூஜிப்பதால் தேரோட்டதினத்தின் இரவில் பெரும்பாலும் அதே சுவாமியின் புறப்பாடு கூறப்படவில்லை. மாற்றாக நடேசர்புறப்பாடு நிகழும். மஹோத்சவத்தில் தேரோட்டமே பெருவிழாவாகும் எனலாம்.

## ரதோத்ஸவகால பிராயச்சித்தம்
## (விழாக்கால குற்றங்குறைகளுக்கான பரிஹாரம்)

1. திருவிழாவில் சுவாமிக்கு தேர்ஏற்றம் செய்யப்படாமல் விடுபட்டுப்போனால் பெருந்தோஷம். இதனால் மக்களுக்கும் மன்னனுக்கும் இழிவு நிலையும், தீங்கும் நேரிடும். எனவே இதற்கு பரிஹாரமாய் சாந்திஹோமத்தைச் செய்து, பின்பு முறைப்படி தேரில் ஊர்வலம் செய்யப்படவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

2. தேரில் ஊர்வலம் வருகையில் பயணத்தில் தடை ஏற்பட்டாலும் சாந்தி ஹோமத்தை செய்த பின்னரே தொடர வேண்டும்.

3. ஊர்வலத்தின்போது தேர் உடைந்தாலோ, முறிந்தாலோ, பழுதடைந்தாலோ, பிளவு, பள்ளம், பதிவு ஏற்பட்டு, தடைநேர்ந்தாலோ

தோஷம். இதனை சரிசெய்ய முடியுமானால் உடனே சரிசெய்து பின்பு ஊர்வலத்தை தொடர்ந்து செய்துமுடித்து ஆலயத்துள் வந்தபிறகு சாந்திஹோமத்தை செய்யவேண்டும். இதற்குசான்று,

யானகாலே ரதாதீனாம் பங்கே பங்கோ புவோ பவேத்.
சந்தான யோக்யம் சந்தானம் க்ருத்வா சாந்திம் ஸமாசரேத்.
தத் தேசே தாம்னி வா குர்யாத் யானாதௌ தோஷ சாந்தயே.

ஸ்ரீமத்காமிகாகமத்தின் பிராயச்சித்தவிதிபடலச் சான்று.

4. மேலும், தேரின்ஊர்வலம் தடைபட்டால் உடனே, வேறு தேரிலோ, அதுஇல்லாவிடில் பல்லக்கிலோ, விமானத்திலோ, சுவாமியை மாற்றி இருத்தி, அந்த ஊர்வலத்தை முழுமையாக செய்துமுடித்தபின்பு இதற்காக அகோராஸ்த்ர மந்திரத்தால் ஆயிரம்முறை ஜபம்செய்து சாந்திஹோமத்தை செய்து ஸமர்பித்தல் வேண்டும். இம்முறைக்கான ஆகமச்சான்று இதுவே,

ஸந்தான கர்ம அயோக்யஸ் சேத் ரதாந்தர மதாநயேத்.
ஆனீய சிபிகாத்யம் வா தத்ரா ரோப்ய மஹேச்வரம்.
பூர்வவத் தேவ தேவேசம் ஸ்வாலயே வி நிவேசயேத்.
சாந்திஹோமம் ததா குர்யாத் அகோரஸ்ய அயுதம் ஜபேத்.

## ரதாரோஹணம் (தேவன் தேரேறுதல்)

உயர்ந்ததான திருத்தெரேற்றுக் கூடங்களுக்கு (தேரடிமண்டபங் களுக்கு) பலபடிகள் வழியாக ஈசனின் திருமேனியை தூக்கிச்சென்று, அங்கிருந்து மண்டபதரைக்கும் தேரின்மேல்தளத்துக்கும் இடையே, நீண்ட கனமான அகலமான மரப்பலகைகளைப் போட்டு, இணைப்பை ஏற்படுத்திக்கொண்டு,, தேரின் தளத்திலுள்ள மையதேவபீடமான தெய்வமேடைக்குக் கொண்டுசென்று, அங்கு, அலங்கரித்து, ஈசனை அங்கு உள்ளம் உள்கி மந்திரத்தால் அழைத்து எழுந்தருளச்செய்வர். பின்பு முறையான வழபாடுகள் தேரில் அங்கு நிகழ்வுறும். மங்களவாத்தியங்கள் அத்தளத்திலேயே இசைக்கப்பெறும். பலமொழி களில் துதிப்பாடல்களும் ஓதப்படும். இதுவே தேரேற்றமாகும். "ரதயாத்ரா" என்னும் தேர்பவனிவருதல் பேரழகான காட்சியாகும்.

சிவாலயங்களில் பஞ்சமூர்த்திகளின் தேர்கள் என்பதாக ஐந்துதேர்கள் பவனிவருவது சைவமரபு. தேர்திருவிழாக்களின்போது விநாயகர், முருகன், உமைஅம்மன், சண்டிகேசுவரர் ஆகியோரது

தேர்களை பரமேசனின் தேர்ஏற்று நாளுக்கு முன்னதாகவே பவனிவரச் செய்து, பின்பே சிவனது பெரியதேர் இழுக்கப்படும் முறையும் உண்டு.. வீதிகளில் தேர் பவனி வருவதை சிற்பநூல்களும் ஆகமங்களும் "ரதாரோஹணம்" என்று கூறுகின்றன. இது ஈசனின் பஞ்ச கிருத்தியங்களில் சம்ஹார கிருத்தியத்தைக் குறிக்கும் நிகழ்ச்சி ஆகும். அதாவது சேவிப்போருக்கு இனிபிறவாதநிலை பரமபதஒடுக்க மான பேரின்பநிலை இறையருளால் ஏற்படும் என்று அறியவேண்டும்.



சைவாலாய சிவன் மஹாரதம்

## தேர் பவனியை செய்யும்முறை (தேரைச்செலுத்துமுறை)

ஆயிரமாயிரம் அடியவர்கள் வடம்பிடித்திழுக்க விண்ணதிர அதிர்வேட்டுக்கள் முழங்க, தாரை, தப்பட்டை, கொம்பு, எக்காளங்கள் போன்ற இசைக்கருவிகள் பேரொலிகளை எழுப்ப, பின்சக்கரங்கள் இரண்டிலும் உலுக்குமரத்தைப் போட்டு உலுக்க, தேர் அதிர்ந்து குலுங்கி, உருண்டோடத் துவங்கும். வேகத்தைக் கட்டுப்படுத்த முட்டுக்கட்டைகளைத் தேர்காலின் அதாவது சக்கரங்களின் விளிம்புகளில் முட்டுக்கொடுப்பார்கள் இதனால் வேகம் குறையும்.

எட்டு அல்லது பத்து சக்கரங்கள் (தேர்க்கால்கள்) உள்ளமையால் வீதிகளில் தேர் திரும்புவது எளிதன்று, எனவே அதற்கெனவே தேர்க்கால்களில் பிரத்யேக அமைப்பாக ஓரங்கள் மழுக்கப்பட்டிருக்கும். தேர் வலப்புறம் திரும்பவேண்டுமாயின், இடப்புறம் மட்டுமே பின்கால்களில் உலுக்குமரம் (ஏணிபோன்று செதுக்கிய பல படிக்கட்டுகள்உள்ள பெரும் பலகைமரம்) போடப்படும். வலப்புறம் கால்களில் மட்டுமே முட்டுக்கட்டைகைளை கொடுப்பார்கள். வீதிகளில் தேர்க்கால்கள் பதியாமல் இருக்க எண்ணெய்தடவப் பெற்ற சாரடிக்கட்டைகளைப் பரப்பி அதன்மேல் தேர்க்கால்கள் (சக்கரங்களை) உருளும்படிச் செய்வார்கள்..

அதிர்வேட்டுக்களும், தாரை தப்பட்டை, முரசு போன்ற அடிவாத்தியங்களும் கொம்பு, எக்காளங்கள் போன்ற ஊதுகருவிகள்



திருவாரூர் தியாகராஜா தேரழகு

எழுப்பும் ஓசையும் தேரை இழுப்போருக்கும், பொருப்பேற்று செலுத்துவோருக்கும், ஒரு உத்வேகமாக அமைய, ஒருக்காலில் மட்டும் போடப்பெறும். முட்டுக்கட்டைகள் எண்ணெய் தடவிய சாரடிக்கட்டைகளின் மேல் வழுக்கியநிலையில் கால்கள் உருள, முன்புறம், பாயும்நிலையில்உள்ள தேர்க்குதிரைகளின் இருபுற அசைவுகள் ஒரு பக்கமாக செல்லுங்கால் அவற்றின் எடைமுழுவதும் தேரை அப்பக்கமாக இழுக்க, தேர் குலுங்கி குலுங்கி, வலதுபுறமாகவே திரும்பும். இவ்விதம் திரும்பும் குதிரைகள் மறுவினாடியே பழைய நிலைக்கு வந்துவிடும். இவ்வாறு திருப்பங்களில் திரும்பியும் தெருக்களில் ஓடியும் ரதயாத்ரா நிகழ்வுறும்.

தேரினை சீராக வடிவமைத்த தச்சர்கள், கொல்லர்கள், மற்றும் பிரம்மா, குதிரைகள் இவற்றைச் செய்யும் ஸ்தபதிகள், தேர்க்கூரையை அமைக்கும் கொத்தர்கள் ஆகியவர்களுடைய கூட்டுமுயற்சியும் அவர்கள் கணிதஆற்றலோடு படைக்கும் ஒவ்வொரு அங்கங்களின் வடிவமைப்பு, எடை, இயக்கங்கள் போன்றவையே ரதாரோஹணத்திற்கு இன்றியமையாதவையாக அமைகின்றன. பலமாதங்கள் இவர்கள் திட்ட மிட்டு, உழைக்கும் உழைப்பே அணிநெடுவீதியில் தேர் பவனியை சிறப்புறச் செய்யும் என்பதில் ஐயம் இல்லை. இவர்களது படைப்பாற்றல் பூதாகார மான தேரைவிட பன்மடங்குபெரியது என்பதில் கடுகளவும் ஐயமில்லை. நம்மவர்களின் அற்புதஆற்றலை நாம் இமயமென நினைப்போம். இக்கலை அழியாமல், அவர்கள் வாழ்வு மங்காமல் காப்பது ஆஸ்திகர்களின், ஆலயஅறங்காவலர்களின், தேவைமிக்க கடமை ஆகும்.

## ரதார்ச்சன விதி (தேர் மந்திரிப்பு முறை)

அழகுடன் அசைந்துவந்து அருளும் ஆலயமான ரதத்திற்கு உரிய மந்திரநாத மூர்த்திகளைப் பதிவுசெய்து வழிபடுவது "ரதப்ரதிஷ்டை எனப்படுவதாகும். இதனைக் கூறும்சான்று,

மூர்த்தி மூர்த்தீஸ்வரோ பேதம் சக்ரேஷ் விந்து திவாகரௌ. |
தக்ஷி ணோத்தர ஸம்ஸ்த்தேஷு க்ரமசப் பரி கல்பயேத் ||

ஹரிம் அக்ஷேஷு பாரேஷு யஜேத் ஆதார ஸம்ஞிகாம்|
உபபீடே வ்ருஷம் யஷ்ட்வா (ஆ)தாரே (அ)னந்தம் ப்ர பூஜயேத் ||

இவ்வாக்கின்படி அஷ்டமூர்த்திகள், அஷ்டமூர்த்தீச்வரர்கள் எனப்படுகிற, பஞ்சபூதங்கள்5, சூரியன்6, சந்திரன்7, 6வேள்விசெய்வோர் எனும் எட்டுவடிவங்களில் இருந்தளுகின்ற பவர், சர்வர், முதலான எண்மரையும், தேரின் எட்டுதிசையிலும் கூடி இருப்பவர்களாகக் கருதியும், வலது இடது பக்கங்களில் உள்ள தேரடிகளான சக்கரங்களிரண்டிலும் சூரியர், சந்திரர் ஆகிய இருவரையும், சக்கரஅச்சுகளில் அச்யுதனான விஷ்ணுவையும், பாரவாஹியான சுமைதாங்கும் பெரும்மரப்பலகையில் ஆதாரதேவி எனும் பூமிதேவியையும் வர்கவேலையிலுள்ள உபபீடத்தில் விருஷபதேவரையும், அதன் அடியில் பாம்பரசனான அனந்தரையும் (ஆதிசேஷரையும்) விதிமுறைப்படி நன்கு பூசித்திடவேண்டும். என்கிறது ஆகமம்.



பெருந்தேர் வீதிஉலா காட்சி

## விழாக்கால வேள்விச்சிறப்பு

ஆலயதெய்வவிழாவிற்கு வேதாகமவிதிமுறைப்படி வேள்வியைச் செய்திடுவர். அதில் அனைத்து தேவர்களுக்கும் ஆகுதிகள் அளிக்கப்பட்டு மகிழ்ந்திடுமாறு செய்யப்படுவது சிறப்பாகும். வேள்விச்சிறப்பினையும் அவசியத்தேவையையும் . அறநூல்கள் விக்குவதாவது. என்றும் பரம்பொருள் வேள்வியில் இருந்து அருள்வது.

ஸஹ யக்ஞைர் ப்ரஜாஸ் ச்ருஷ்டா: புரோவாச ப்ரஜாபதி:
அனேன ப்ரஸவிஷ்யத்வம் ஏவ வோ(அ)ஸ்த் விஷ்டகாம துக்
தேவான் பாவயதானேந தே தேவா பாவயந்து வ:
பரஸ்பரம் பாவயந்தஸ் ச்ரேயப் பரம் அவாப்ஸ்யத
இஷ்டான் போகான் ஹி வோ தேவா தாஸ்யந்தே யக்ஞபாவிதா:
தைர் தத் தான ப்ரதாயைப்யோ யோ புங்க்தே தேன ஏவ ஸ:
யக்ஞ சிஷ்டா சிநஸ் ஸந்தோ முச்யந்தே ஸர்வ கில்பிஷை:
புஞ்ஜதே தே த்வதம் பாபா யே பசந்த் யாத்ம காரணாத்
அன்னாத் பவந்தி பூதாநி ப்ரஜன்யாத் அன்ன ஸம்பவ:
யக்ஞாத் பவதி பர்ஜன்ய: யக்ஞக் கர்ம ஸமுத்பவ:
கர்ம ப்ரம்மோத்பவம் வித்தி ப்ரம்ம அக்ஷர ஸமுத்பவம்
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரம்ம நித்யம் யக்ஞே ப்ரதிஷ்டிதம்

இதன்பொருள்=வேள்விகளால் மக்கள் படைக்கப்பட்டனர் என்று ப்ரஜாபதி கூறினார். இதனால் வேள்வியே உங்களுக்கு விரும்பியதை அளிப்பதாகும். வேள்விகளால் தேவர்கள் மகிழ்விக்கப் படுபவர்களாகி தேவர்கள் மக்களை மகிழ்விக்கின்றனர். இவ்வாறாக ஒருவருக்கோருவர் தமது செல்வங்களை மாற்றிஅளித்து மகிழ்கின்றனர் என்பது அறியத்தக்கது.

எவ்வாறெனில் தெய்வங்களுக்கு விருப்பமான நெல், பயிறு, அன்னம், நெய், கனிவகைகள், மூலிகை வகைகள் இவற்றை விழாக்கால வேள்விகளில் நாம் ஹோமத்து ஆகுதிகளாகத் தியாகம்



நவகுண்டபக்ஷ சிவயாகசாலை

செய்து தேவர்களை மகிழ்விக்கிறோம். இதனால் தெய்வங்கள் வெள்விப்பகுதியில் வளத்தையும், வளம்தரும் வான்மழையையும், ஆரோக்கியமான இன்பவாழ்க்கையையும், வழங்குகின்றனர். அன்பானதியாகமே யாகம் எனப்படுவாதாகிறது. நம். பழங்கால பண்டமாற்றுமுறையால் மண்ணுலகமும் விண்ணுலகமும் மகிழ்ச்சியுறுகின்றன. இவ்விதமாக இவ்வுலகிற்கு வேள்விச்செயல் மேன்மைதருகிறது. யாகத்தாலேயே தேவர்கள் நமக்கு விரும்புவதைத் தருவர் தேவர்கள் நமக்கு எப்போதும் அளிப்பதில் சிறிதளவேனும் நாம் வேள்விமூலமாக அவர்களுக்கு அன்போடு அளித்திடவேண்டும் என்பதே அறநெறிவிதியாகும். இவ்வாறு நாம் தேவர்கடனை அளிக்காமல் தாமே அனுபவிப்பவர்கள் இவ்வுலகில் பாவிகள் ஆவர். வேள்விக்கு அளித்தது போக மீதமுள்ளவற்றை அனுபவிப்போர் ஸகலபாவத்திலிருந்தும் விடுபடுவர். வேள்வியே மழைக்குகாரணம். அதுவே பரம்பொருள் அந்த வேள்வியே சிறந்த அறச்செயல். வெள்வியால் மழையையும், மழையால் பயிர்வளமும் அதனால் உணவும் உணவால் உயிரினத்தின் வாழ்க்கையும், இவ்வுலகில் அமைகின்றன என்பதையே வேதாகமங்கள் கூறுகின்றன. யாகம் நம்முயற்சியால் தோன்றும்செயல் யாகச்செயலே உயர்ந்த அறச்செயலான கர்மபிரம்மம் என்று அறியயவும். பிரம்மம் என்பது அழிவற்றதாகும். அதனால் அது எங்கும் என்றும் வேள்வியில் நிலைபெற்று இருப்பதாகும். பரம்பொருள் வேள்வி மூலம் மகிழ்விக்கப்படுகிறது, என்று அறியத்தக்கது.

இவ்விதமாக ஆலய திருவிழாக்காலத்தில் எண்ணற்ற தெய்வங்கள் அழைக்கப்பட்டு உபசரிக்கப்படுகின்றனர், இதில் விழாநாட்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சிறப்புதெய்வம் கொடிமரத்தடியில் சிறப்புப்பொருட் தியாகமாகிய பலிதருவதால் மகிழ்விக்கப்படும் அனைத்து தேவலோகக் குழமத்தினரும் வேள்வியில் ஹவிர்பாகம் மூலமாக மகிழ்விக்கப்படுகின்றனர். மேலும் சிறப்பாகத் தேரில்இடம்பெறும் தேவர்கள் யாவரும் தேர்சாரந்த பொருள்களை வைத்து புனிதத்திற்கு செய்யப்படும் அதிவாஸயாகத்தில் போற்றப்படுகிறார்கள். எனவே தேரில் தெய்வதரிசனம் நமக்கு விருப்பப்பயன்களைப் பெற்றிட உதவும். நமது எண்ணங்கள் ஈடேறும். இவ்விதம் பிறவிப்பேற்றைப் பெற உதவுகின்ற பெரும்ஸாதனம் பெருந்தேர் திருவிழாவாகும் என்பதை ஆஸ்தீகப்பெருமக்கள் அறிந்து பயன்பெறவும்.

# ரதயாத்ராவிதி (தேர்பவனி முறை)

ஆலயதெய்வப் பெருந்தேரில் ஸகலதெய்வங்களும் காணும் நிலையிலும் காணாத நிலையிலும் இருப்பார்கள் என்றபோதிலும், தேரின் சில முக்கிய உறுப்புப் பகுதிகளில் உரிய தெய்வங்களை மனதால் கருதி வழிபடுவது முறையாகும்.

**ரதம் ஏவம் சு ஸம்ஸ்கிருத்ய ரத யாத்ராம் ஸமாசரேத்.**
**பைடீ சேகரீ மண்டீ த்ரிவிதா ஸா ப்ரகீர்த்திதா**

இவ்வாறாக ரதத்தை சிற்பஇலக்கணப்படி நிர்மாணம் செய்து, அதற்குரிய ஸம்ஸ்காரம் எனப்படுகிற கண்திறத்தல் முதலான பல சடங்குகளால் புனிதப் படுத்தியபின்பு, ரதாயாத்திரையை அதாவது தேரோட்டத்தை முறையே செய்திடவேண்டும். தேர்பவனி என்பது, கட்டுமான வடிவமைப்பு முறையால் பைடீ என்றும் சேகரீ என்றும், மண்டீ என்றும் யாத்திரை மூன்றுவகையாக கூறப்பட்டது. சகடையில் சப்பர பீடத்தில் செய்வது, மேலே மண்டப உருவத்தை அமைத்து வீதிவலம் செய்விப்பது. பல அடுக்குகளுடன் சிகரம் ஸ்தூபி குடை இவற்றுடன் ரதயாத்திரையை செய்விப்பது போன்றவையாகும். பூசிக்கப்பட்ட அந்தந்த மூர்த்தியின் கும்பதீர்த்தத்தால் அந்தந்த மூர்த்தியின் இடங்களுக்கு அபிஷேகத்தைச் செய்யவேண்டும். இந்த கும்பாபிஷேக செய்முறையில் கூறப்படாதவற்றை விரோதமில்லாதவகையில் பிற ஆகமநூல்களில் உள்ளதைப் பின்பற்றி ரதப்ரதிஷ்டையை செய்க என்கிறது. பூஜித்த ரததேவதையின் முக்கிய கும்பத்தை ஆசாரியர் தன்தலையாலே தாங்கியபடி வலமாக கொணர்ந்து தேரில் நடுவே தேவாஸனத்தில் அல்லது அதன் ஐசான்யபாதத்தில் தூணில் அபிஷேகத்தை செய்திடவேண்டும். இதில் தேரின் உச்சியில் நீராட்டுமாறு கூறப்படவில்லை. இங்கு கூறப்படாதவற்றை குற்றமற்றவைகளை மட்டுமே கைக்கொள்வது முறையாகும்.



புத்தூர் மஹாலிங்கேஸ்வரர் தேர்
(வட்டவடிவ வேஸரரதம்)

## ரதஅலங்காரவிதி (தேர் ஒப்பனைமுறை)

**குளிகா பாதபாத்யைஸ் ச பத்மைர் வ்யாள வாஜிபி:**
**ஸிம்ஹ பூத கஜைர் பாதைர் வர்கைஸ் ஸர்வத்ர பூஷயேத்**

இதன்படி தெய்வத்தேரில், தெய்வப்பதுமைகள், குண்டுகள் சிற்பங்கள், குஞ்சங்கள், மணிகள், மரங்கள், செடிகொடிகள் இலைமலர்வகைகள், தாமரைமலர்கள் பூமொட்டுகள், பெரும்பாம்புகள், யாளிகள், குதிரைகள், சிங்கங்கள், பூதகணங்கள், யானைகள், சித்திரவேலைத்தூண்கள், சட்டவர்கவேலைகள் போன்றவற்றால் ரதகாரகரான சிற்பியானவர் “ரதம்முழுவதையும்” எழில்மிக்கதாக நன்கு அலங்கரிக்கவேண்டும் என்பதுவிதிமுறை.



தேரில் யாளி, துவாரபாலகர் முதலிய சிற்பம்இணைத்தல்

# (தேர் கும்பாபிஷேகம்) ரத ப்ரதிஷ்டா விதி.
## (தேரின் புனித நீராட்டல்)

ஆயாதி சுப வர்க்காட்யம் ஸர்வாலங்கார ஸம்யுதம் |
தாரு வர்க்கேஷு ஸர்வத்ர குர்யாத் பிம்ப விசோதனம். ||

ஸம்ப்ராப்த தக்ஷிணோ மூர்த்தி தார தைவக்ஞ சில்பிபி: |
முகூர்த்தே ஸமனு ப்ராப்தே மந்த்ர ந்யாஸம் ஸமாசரேத். ||

தத் தத் கும்பஸ்த பானீயைஸ் தத்தத் அக்ரே ஸு ஸேசயேத். |
அனுக்த மத்ர ஸாமான்ய ஸ்தாபனோக்த வத் ஆசரேத். ||

கும்பான் உத்ருத்ய சிரஸா பூரயேத் து யதா க்ரமம் |
அனுக்தம் அன்யதோ க்ராஹ்யம் அச்சித்ரம் நைவ தோஷபாக்

இவ்வசனப்படி ரதகாரக தச்சரானவர், ஆயாதி அளவுக்கணக்கை சுத்திசெய்து, சுபம்தரும்அளவுகளைக் கைக்கொண்டு, அனைத்துவகையான ஒப்பனைகளாலும் அலங்கரிக்கப்பட்டதாக, வரிவர்க்கங்களில் இறைவனின் பல திருமூர்த்தங்களையும், திருவிளையாடல்களையும் செதுக்கிப் பதித்து உரிய சடங்குகளைச் செய்யவேண்டும். பிறகு பெறப்பட்டவெகுமதியை உடையவரான சில்பிகளோடுகூடியும், தைவக்ஞர்களான ஜோதிடர்களோடு கூடியவராகவும் ஆசாரியர் அந்தந்த தெய்வவடிவினராகி, நல்ல முகூர்த்தநேரம் வந்தபொழுதில், தேரில் தெய்வங்களுக்கு உரிய மந்திரநியாஸங்களைச் செய்யவேண்டும் என்பது சாஸ்திர செயல்முறையகும். இதில் கூறப்படாத செய்திகளை பிற ஆகம நூலிலிருந்து எடுத்துக்கொள்ளத்தக்கது. முரண்படாதவை இதில் குற்றமாகாதவை ஆகும்

## திருத்தேர்பவனி (ரதோத்ஸவம்)

ஆலயதிருவிழாவில் இறைவன்தேர்மீது எழுந்தருளி வீதிவலம் வருவது மிகச்சிறந்த வழிபாட்டிற்கு உரியதாகும். இறைவன்தேரில் வருவது துஷ்டர்களை மாய்த்து, சிஷ்டர்களைக் காக்கும் ஸம்ஹார, அனுக்ரஹ செயல்களை உணர்த்தும் திருக்காட்சியாகும். தேரின் வடிவமைப்பு அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் சமானமாகும். விசுவவிரா ட்சொரூபமே தேரின் எட்டு அடுக்குகளாகும். அவை மேலிருந்து முறையே கலசம் சிவசக்தி, கும்பம் (சிகரம்) ஷோடசாந்த ஸ்தானம் அடுத்தகீழ் அடுக்கு துவாதசாத்தம், அடுத்து மஸ்தகஅதிஷ்டானம் அடுத்து புருவமத்தியஸ்தானம், நடுவில் தாங்கிடும் குத்துக்கால்கள்



திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் மஹாரதத்தில் பவனிவருதல்

தத்துவமாகும் தூண்கள். முன் மூன்றுதுறைகள் மூன்றுகண்கள், பின்னவை சிகையும், இடவலக்காதுகள் என்பவையாம், இறைவன் அமர்ந்துள்ள கேடயபீடம் முப்பாழ்மண்டலங்கள், சூரியசந்திரகலைகள், சாரதி அக்னிக்கலை இவை நாசியாகும் அடுத்தஅடுக்கு கண்டஸ்தானம், அதைஅடுத்த அடுக்கு இருதயஸ்தானம் அதைஅடுத்த அடுக்கு நாபி, அதற்கு அடுத்தஅடுக்கு குண்டலிஸ்தானம். பத்துசக்கரங்களும் பத்துவகை வாயுக்கள். இவைக்கு கர்த்தா இறைவன். இவ்வாறு அமைந்தபிண்டத்வ சரீரமாகிய தேரில் தசவாயுக்களாகிய சக்கரங்களை நிறுத்தி, அசைவற்றமனதை உந்தி, குண்டலியிலிருந்து நாபிக்கும், அகிலிருந்து கழுத்திற்கும், அதிலிருந்து வாய்க்கும், ஏற்றி இலயப்படுத்தி முறையே இரதக் குதிரையாம் நாசிக்கும், அங்கிருந்து கண்வழியாகுவும், நடுவழியாக மேல்நோக்கிஆறாம் அடுக்காகிய புருவநடுவிற்கு (ஆக்ஞைசக்ரம்) ஏற்றி லயப்பட்டு, சும்மா இருந்தபடி இருக்கும் நித்தியசுகியாய் இருந்திடல் வேண்டும் என்ற இத்தகைய இலயக்கிரமத்தைக் காட்டுவதே திருத்தேர்விழாவாம். மேலும் மும்மலமான முப்புராசுரர்களை சிரித்தெரித்து சிவன் ஆன்மகோடிகளைக் காப்பாற்றிய பாதுகாப்புத்தொழிலை உணர்த்துவதே தேரோட்டமாம். ஆன்மலயத்தால் சிவபோகம் எய்த விழைவதே தேரோட்டவிழாவாகும். ,தனை ஞானசம்பந்தர் மூவார்புறங்கள் எரித்த அன்று மூவர்க்கருள்செய்தார் என்றும், தொடுத்தார் புரம் மூன்று எரிய சிலைமேல் ஏரிஒன்பகழியார். என்றும், நாவுக்கரசர் திரிபுரங்கள் தூயெழத்தின் சிலைகைக்கொண்ட போரான்" என்றும், அருணகிரிநாதர் "முப்பரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்"

என்றும் கூறுவர். ரதோத்ஸவம் சிவத்தன்மைஎனும் எட்டுகுணங்கள் ஆன்மாவிற்கு விளங்குதற்பொருட்டு நடத்தப்படுவதாம். அவை, 1.சர்வக்ஞத்வம், 2.நித்யதிருப்தி, 3.அநாதிபோதம், 4.சுதந்திரத்வம், 5.அலுப்தசக்தி, 6.அனந்தசக்தி, 7.நிராமயான்மா, 8.விசுத்ததேகம் என்பன இறையருளால் விளைவிக்கப்படும் அருட்பேறு குணங்களாகும். இதனை தேர் உணர்த்துகிறது.



## தேரேறிய சங்கரர் துதி

போ ழொத்த வெண்மதியம் சூடிப் பொலிந் திலங்க
வேழத்து உரிபோர்த்தான் வெள்வளையாள் தான்வெருவ
ஊழித்தீ அன்னானை ஓங்கொலி மாப் பூண்டதோர்
ஆழித்தேர் வித்தகனை நான் கண்டது ஆரூரே

(திருநாவுக்கரசர் தேவாரம்)

ஆரார் வந்தார் அமரர் குழாத்தின் அணியுடை ஆதிரைநாள்
நாராயண னொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேர்ஆர் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே

(சேந்தனார்திருப்பல்லாண்டு)

மன்னிய கலாதி யேழு மாணவ மலமு மாயத்
தன்னியல் வேட்டை யாடுந் தன்மையுட் கொண்டு நாதன்
சின்மயக் குடிலை வில்லுஞ் சிற்பரை யம்புஞ் சேர்த்திப்
பன்னெடுங் கருவி தோற்றப் பகையற வுலாவ லுற்றார்.

எனும் சமயநெறி உற்சவ்விளக்கப்பாடலாலும் அறியலாம்.



## தேர்த்திருவிழாவின் அவசியத்தேவை

மண்ணுலகில் கோயில் தெய்வங்களுக்கு திருவிழாவில் தேரேற்றம் செய்யப்படாவிடில் அங்குவாழும் மக்கள் தாழ்ந்த நிலையை அடைவார்கள் என்றும், அவ்வாறான தேரோட்டவிழாவை செய்ய முடியாதபொழுதில் அக்குறையைப் போக்கிக் கொள்ள அப்பொழுது சாந்திஹோமத்தைப் பரிகாரமாகச் செய்துவிட்டு முன்புபோலவே முறைப்படியான தேரேற்றத் திருவிழாவைச் செய்திடவேண்டும் என்றும், காமிகாகமப் பிராயச்சித்தவிதி படலத்தில் கூறப்பட்டு ள்ளதால், கோயில் விழாக்களில் புறப்பாட்டுக்கான யானக்ரமத்தில் **ரதேவா சிபிகாயாம் வா** என்பதாக தலையாய ஊர்தியான, தேரில் திருவிழாவைச் செய்வது அவசியமாம்.

**ரதாரோஹோ விஹீநச் சேத் நீசா ஸ்யுர் மனுஜா புவி**
**சாந்திஹோமம் ததா க்ருத்வா ரதாரோஹணம் ஆசரேத்.**
**(உத்தரகாமிகாகம படலம் 3ல் சு830)**

## தேரோட்டம் தடைப்படின் பரிஹாரம் (பழுதுநீக்கும்முறை)

தெய்வத் திருவிழாக்களில் தேர்முதலான ஊர்திவகைகளுக்கு குறை ஏற்பட்டால், முறிந்துபோதல், உடைதல், செயலிழத்தல், தரை வெடித்தல், பிளந்திடுதல், தரையில் விழுதல், முதலியவற்றால் ஊர்வலம் எனப்படும் சுவாமி புறப்பாடு, தடைபடுமேயானால் அப்பொழுதே இணைப்பு செய்து சரிசெய்ய இயலு மாயின் சரிசெய்தபிறகு அங்கேயே பயணத்தைத் தொடர்ந்து செய்து முடித்து ஆலயத்தை வலமாக சென்று அடைவித்தல் முறையாகும். இணைத்து சரிசெய்து உடன் ஊர்வலத்தைத் தொடர முடியாத பொழுது வேறு தேரிலோ பல்லக்கிலோ தெய்வத்தை மாற்றி எழுந்தருளச் செய்து வீதிஉலாவை நிறைவு செய்து முன்புபோல ஆலயம் சென்று ஆலயத்தில் முறையே சாந்திஹோமத் தைச் செய்திட வேண்டும். சாந்தி ஹோமம் அல்லது **சம்ஹிதா ஹோமம்** அல்லது திசாஹோமம்,



அகோராஸ்த்ர மந்திர லக்ஷமுறைஜபம் செய்தல் இவை ஆகமங்களில் சாந்தியின் பொருட்டு பரிகாரச் செயலாக விதிக்கப்பட்டுள்ளன. இப்பரிகாரக்ரியைகளை விதிக்கும் சைவாகமச்சான்று இதுவே.

யாநகாலே ரதாதீனாம் பங்கே பங்கோ புவோ பவேத்.
ஸந்தானயோக்யம் ஸந்தானம் க்ருத்வா சாந்திம் ஸமாசரேத்
தத்தேசே தாம்னி வா குர்யாத் யாநாதௌ தோஷசாந்தயே.
ஸந்தானகர்ம யோக்யஸ் சேத் ரதாந்தர மதாநயேத்.
ஆநீய சிபிகாத்யம் வா தத்ரா ரோப்ய மஹேச்வரம்
பூர்வவத் தேவதேவேசம் ஸ்வாலயே விநிவேசயேத்.
(உத்தரகாமிகப்ராயச்சித்தவிதிபடலம்30)

## வீதியில் தேர்பவனி தடைக்கான ப்ராயச்சித்தம்

தேர்த்திருவிழாவில் தெருவின் நடுவில் தேரில், தண்டம், தூண்கால்கள், சட்டங்கள், சக்ரம் இவை முறிவுற்று பயனற்றதாகி பயணத்தடை ஏற்பட்டபொழுதில் அரசன் அதிகாரிகள் தாழ்வைதோல்வியைப்பெறுவர். ஆதலால் பயனற்றதாகி இத்தோஷத்தை தவிர்த்திட உடன் சாந்திஹோமம் செய்து மீண்டும் இணைத்து சரிசெய்ய வேண்டும். காற்று மழைகளால் தொடர முடியாவிடினும் மஞ்சம் அல்லது பல்லக்கில் தேவனை அக்கணமே எழுந்தருளச் செய்து ஊரைவலமாகவே வந்து ஆலயத்தில் உட்புகவேண்டும். பெருமழையால் தடைஏற்படின் ஸம்ஹிதாஹோமத்தைச் செய்யவேண்டும் என்று உத்தர காரணாகமம் படலம் 90ல் 39–42ல் கூறியுள்ளது.

வக்ஷ்யே ஹம் ச்ருணு ஷட்வக்த்ர ரதம் வீத்யந்தரே ஸதி.
தண்டசக்ர விஹீநே து ராஜா துர்ஜயம் ஆப்நுயாத்.
சாந்திஹோமம் தத: க்ருத்வா புனஸ் ஸந்தானம் ஆசரேத்.
அதவா ஹீந மேவாபி விட்வரே வ்ருஷ்டி பீடனே.
மஞ்ஜே வா சிபிகே வாபி தேவ மாரோப்ய தத்க்ஷணே.
ப்ராதக்ஷிண்ய க்ரமேணைவ மந்திரம் வேசயேத் தத: .
ரதே வ்ருஷ்டிபயே ப்ராப்தே ஸம்ஹிதா ஹோம மிஷ்யதே.
(உத்தரகாரணாகம ரதபிரதிஷ்டாவிதி 96ல்)

ரதவீதியான நான்கு ராஜவீதியில் எங்கு தடை ஏற்பட்டாலும் மாற்று ஏற்பாட்டைச்செய்து ஊர்வலப்புறப்பாட்டை குறுக்காகவோ அப்ரதக்ஷிணமாகவோ நேராகவே தொடராமல் ஊரை வலம்வந்தவாறே ஆலயத்தை அடைவிக்கவேண்டியது அவசியம். பரிகாரச்செயலை முன்போ பின்போ அவ்விடத்திலோ ஆலயத்திலோ கூடியவிரைவில் செய்வது முறை.

# தேர்பயணத் திருமஞ்ஜனவிதி
# (ரதயாத்ரார்த்த ஸ்நபனவிதி)

ஸ்ரீமத் காமிகாகமம் முதலான சைவாகமங்கள் யாவும் ஆலயத் தெய்வத்திருமேனிகளுக்கு தேர்த்திருவிழாவின் முடிவில் ஆலயத்தை மாலையில் வந்தடைந்த உடன் சிறப்பான நீராட்டு தலை விதிக்கின்றன. கொடி ஏற்றம் முதலாக கொடியிறக்கம் வரையிலாக செய்யப்படுவதே உத்ஸவம் என்பதனைக் காமிகாகமம் த்வஜாரோஹாவரோஹாந்தாக்ரியா உத்ஸவ உச்யதே என்று கூறுகிறது. அதில் சுவாமி புறப்பாடு எந்த ஊர்தியில் நடைபெற்றாலும் வீதிவலம் முடித்து ஆலயம் திரும்பியவுடன் நீராட்டுதலைத் தவறாமல் தினமும் செய்திடவேண்டும் என்றும் கூறுகின்றன. தேரோட்ட முடிவிலும், வேட்டைத் திருவிழா முடிவிலும் சிறப்பானதாம். மிகமிகப் புனிதமான தெய்வபேரத்திற்கு, பல அடியார்களும், பணியாளர்களும் பணியாற்றி பங்குபற்றி ஊர்வலம் செய்யப்படுவதால் புனிதக் குறைவு ஏற்படுமாதலால் அக்குறையை நீக்கிடசெய்திடவிதிக்கிறது. மிக அவசியமான இந்த ப்ராயச்சித்தஅபிஷேகம் எனப்படும் நீராட்டுதலை பலகலசபூஜையுடன் சாந்திஹோமத்துடன் செய்யவேண்டும், இயலாதபொழுது ஹோமமின்றி கலசபூஜைகலசநீராட்டுதலை மட்டுமாவது செய்திடுமாறு விதிக்கிறது.



**தத்வா பாத்யாதிகம் நித்யம் ஸ்நபனம் சாந்திஹோமயுக்.**
**கார்யம் தக்ஷாதி ஸம்ஸ்ப்ருஷ்ட ரதாதி ஸ்பர்ச சாந்தயே.**

**சண்டாள பாண த்ருக்தோஷ நிவ்ருத்யர்த்தம் விசேஷத.**
**ஆவச்யக மிதம் ஞேயம் ப்ரதியாநம் குரூத்தமா**
**சாந்திஹோமம் விநா வாத அசக்தௌ ஸ்நபனம் நயேத்.**
**பஞ்ச ப்ராகார பாஹ்யே து மம யானே ப்ரகல்பிதே.**

ஊர்வலத்தின் முடிவில் ஆலயத்தில் நீராட்டிய பின்பு எளிய அலங்காரத்துடன் பால்பழங்கள், தயிர்சாதம், நிவேதனம் செய்து மங்கள நீராஜனம் செய்து முடித்து, கோயிலின் மூலவரான உரிய பிரதான மூர்த்தியிடம் அந்த விழா முடிவு பற்றியசெய்தியை பக்தியோடு விண்ணப்பம் செய்து துதித்து வணங்கிட வேண்டும்.

## தேர் செப்பனிடுதல் (பழுதகற்றல்) (ரதஜீர்ணோத்தாரம்)

மாபெரும் கலைக்கோயிலாகும் பெருந்தேர் நன்கு பாதுகாக்கப்பட வேண்டும். காலப்போக்கில் சிலபகுதி வலுவிழந்து, உடைந்து பழுதுறும்பொழுதில் அதில் உடனேயே பழுதுநீக்குதலைத் திறம்மிக்க மரத்தச்சுக்கலைஞர்களால் விதிமுறைப்படி முன்போலவே செய்து முடித்திடவேண்டும். தேரின் எந்த உறுப்பு பழுதடைந்ததோ, அதைமட்டும் புதிதாக அதே மூலப்பொருளால் அதேவலுவுள்ளதாக சீர்திருத்தத்தைச் செய்திடவேண்டும். உருவம் அளவு வலிமை மூன்றும் மாறாமலும் குன்றாமலும் திருப்பணிகளை முடித்திடவேண்டும். தேர் செப்பணிடச் சான்று.

யஸ்மின் அங்கே து பங்க ஸ்யாத் தத் அங்கம் பரிவர்ஜயேத்.
பூர்வவத் த்ரவ்ய மாநேந தக்ஷகேன சுதீமதா.
காரயேத் சுத்ருடம் ஸம்யக் ததங்கம் பரிகல்பயேத்.
தண்டசக்ராதி ஸர்வாணி ரதாங்காணி புனர் நவம்.



# தேர்பவனிப் பெருமையும் தரிசனப்பயனும்



## ரதஸ்வரூப மஹிமா (தேரின் பெருமைகள்)
## (தேரின் உருவ இலக்கண மகிமைகள்)

தேர் என்பது பொன், வெள்ளி, தாமிரம், முதலான உலோகத்தினாலோ சந்தனம், இலுப்பை, கருங்காலி முதலிய வலிமைமிக்க மரவகையினாலோ மூலக்கோயிலைப் போன்ற ஆறங்கத்தோற்றத்தில், நான்கு சக்கரத்தின் மேல் அமைக்கப்படுவதாகும். சில்பசாஸ்திரம் அறிந்த தக்ஷகரான வல்லுனர்களே ரதகாரர்கள் எனப்படுவார்கள். வேதத்தில் ஸ்ரீருத்ரத்தில் இறைவன் தேர் உருவாகவும், தேரைச் செய்பவர்களாகாவும் உள்ளதாக போற்றப்படுகிறார். நமோ ரதேப்யோ ரதபதிப்யச்ச வோ நம:, என்றும் ரதகாரேப்யச்ச வோ நம: என்று வேதமும், லலிதாம்பிகையை கிரிசக்ர ரதாரூடதண்டநாதாபுரஸ்கிருதா என்றும் பிரம்மாண்டபுராணமும் தேரில்உள்ளவளாய் புகழ்ந்துரைக்கின்றது, வேதத்தில் ஸ்ரீஸூக்தமானது அச்வபூர்வாம் ரத மத்யாம் என்று கூறி தேரின்நடுவில் லக்ஷ்மீஇருப்பதாகக் கூறுகிறது. சூரியபகவான் ஒரு சக்கரம் உள்ள ஏழுகுதிரை பூட்டிய தேரில்உள்ளதாக வேதம் கூறுகிறது. இவருடைய ஸாரதியின் பெயர் அருணன் என்பதாகும். தேவதைகளுக்கான கோயில்தேர்கள் யாவும்



தேர்நிலையில் தேர்

ஆதாரமான அறநூல்களான நால்வகை வேதங்களையும், சைவாகம நெறிகளையுமே நான்கு சக்கரங்களாக கொண்டிருப்பவை. அச்சக்கர தண்ட மூலாதாரத்தின் மீது 1) அதிஷ்டானம் 2) பாதம் 3) ப்ரஸ்தரம் 4) கண்டம் 5) சிகரம் 6) ஸ்தூபி எனப்படுகிற ஆறுவகையான ஆலய உறுப்புகளையும் கொண்டுள்ளவாறு உருவமுடையதே தேர் ஆகும். இதுவும் கோயிலின் மூல விமானத்தைப்போன்றே ஒரு அடுக்குடன் முதல் பலஅடுக்கு பூதல நிலைகளுடன் அமையும். இதன் சிகரமானது வட்டம், சதுரம், எட்டுபட்டைகள் வடிவங்களில் விளங்கும். அதிஷ்டானம் என்னும் பீடமானது, அடிசிறுத்து, மேலே பலநிலைகள் சதுரமாக அகன்று மூன்று அல்லது ஐந்து அடுக்குகளுடன் இருக்கும். இவற்றில் தெய்வங்களின் மாஹாத்மிய லீலாமூர்த்தங்கள் சிலைகளாகவும், பதினெட்டுவகை கணதெய்வங்களும் இடம்பெற்று இருக்கும். இரண்டாவதான பாதவர்க்கமானது உள்ளும் புறமுமாக இரு சுற்று வரிசைப்பகுதிகளை உடையதாக, வரிசையாக நேருக்கு நேராகஉள்ள, தூண்கள்பலவற்றை உடையதாகும். ஆறு உறுப்புப்பகுதிகளும் முறையே புவனம், தத்துவம், பதம், வர்ணம், மந்த்ரம், கலை ஆகிய 6ரூபமான ஷடத்வாக்களைக் கொண்டதாகும். இதன்முடியில் உச்சியில் மணிமகுடம், கொடி, குடை முதலியவை வைக்கப்பட்டும், இத்துடன் தேரோட்டியாக ப்ரம்மாவையும் நான்கு வேதக் குதிரைகளையும், வாஸுகீ என்கிற மஹாநாகரூபமான கயிறுகளையும் இணைக்க வேண்டும். சிவனாருக்கு சாரதியாக காமிகத்தில் விஷ்ணு, முருகன் முதலானோரும் கூறப்பட்டுள்ளனர்.

# பிரணவவடிவே பெருந்தேர்

வேதம் என்பதற்கு விக்ஞானம் என்பது பொருள். நால்வேதப்பொருளாக விளங்குவது ஓம் என்னும் பிரணவமாகும். அதுவே உள்ளிருந்து அசைந்து பிரண்டு எழும்பி நாத நாதாந்தப்ரம்மமாக ஓதப்படும் மந்திரமாகும். ஓம் தத் ப்ரம்ம என்கிறது வேதம். ஆதி மத்யம் அந்தம் யாவும் பிரணவமே. அந்த பிரவணத்துள்ளே யாவும் இருப்பதாகிறது. அவ்விதம் அனைத்தையும் அனைத்து தெய்வாம்சங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது தேர் ஆகும். தேர் ஞானவடிவானது. ஞானமே ப்ரம்மம். ஞானமே ப்ரணவம். வேதங்களும் இந்த ப்ரணவத்தையே வணங்குகின்றன. எனவே ஞானம்பெற பிரணவத்தை ஜபித்து நாம் பயிற்சிசெய்யவேண்டும். பிரம்மத்தை அடைய உதவும் ஸாதனமே தேராகும். ப்ரணவமெனும் தேரில் அமர்ந்து நம் மனதைத் தேரோட்டியாக்கி, ப்ரம்மலோகபதத்தை பரம்பொருளின் இருப்பிடத்தை அடைகிறான். இதனை அத்ரிமகரிஷி தெரிவித்துள்ள அத்ரிஸம்ஹிதையின் சான்று உணர்த்துகிறது.

இதனாலேயே பெருவிழாவில் உன்னதத்து நிலையில் தேர் விளங்குகிறது.

பெரும்பாலும் பலநாட்கள் நடைபெறும் பெருவிழாவில் தேர்பவனி ஏழாவது நாளிலோ ஒன்பதாவது நாளிலோ இடம்பெறுவது இறைவன் ஏழு அண்டத்திற்கு அப்பாலுள்ளவன், நவமூர்த்தி வடிவாக விளங்குபவன் என்பதை உணர்த்துவதாகும். மனமகிழ்ச்சியைத் தருவதே தேராகும். நம் எண்ணம் ஈடேறுதலை **மனோரதம்** என்று கூறுவர். பூசையின் முடிவில் வரத்தை வேண்டுகையில் **மனோரத** முத்திரை காண்பிக்கப்படும். உள்ளமே தேராகும். உடலே தேராகும். ஈரேழு உலகமும் தேராகும். இறைவனின் திருவடித்தலமே தேராகும். எனவேதான் உபநிஷதங்கள் நமது உடலையே தேராக விளக்குகின்றன. இறையருளைப்பெற உதவிடும் உன்னத வாஹனமாய் தேர் ஒப்பற்று விளங்குவது. தேரில் எழுந்தருளும் சிவனைத் தரிசிப்போர் இவ்வுலகில் அனைத்துவகை சுகபோகங்களையும் பெற்று இனிது வாழ்ந்து, மறுமையில் சிவஸாயுஜ்யம் பெறுவர் என்கிறது ஆகமம்.

**வ்ருஷஸ்தம் சங்கரம் த்ருஷ்ட்வா ரதஸ்தம் வா சிவம் ததா**
**பக்த்வைவ ஸகலான் போகான் அந்தே ஸாயுஜ்ய மாப்னுயாத்**
**(ஸகலாகம ஸாரஸங்கிரஹம்)**



## தேரின் ஓங்கார ஞானரூபம்
## (தேரின் தத்துவ வடிவம்)

ஓமித் யேகாக்ஷரம் ப்ரம்மம் ப்ரதமம் பரிபட்யதே
வேதாஸ் ஸம்ப்ரணமந்த் யேநம் தஸ்மாத் ப்ரணவ மப்யஸேத்
ஓங்காரம் ரதம் ஆருஹ்ய மனக் க்ருத்வா து ஸாரதிம்
ப்ரம்மலோக பதான்வேஷீ யாதி விஷ்ணோப் பரம் பதம்
ஏவம் ப்ரணவ பூதஸ்ய ஞானம் திவ்ய மிதம் விது:

(வைகானஸ அத்ரிஸம்ஹிதை)

இச்சான்றின்படி தேர் ஞானவடிவானது. ஞானமே ப்ரம்மம். ஞானமே ப்ரணவம். நால்வேதங்களும் இந்த ப்ரணவத்தையே முதலில் வணங்குகின்றன. அதனால் ப்ரணவத்தை ஜபித்துப் பயிற்சிசெய்ய வேண்டும் என்றும், பிரணவஞானத்தால் பிரம்மத்தை அடையஉதவும் ஸாதனமே "தேர்". என்றும், பிரணவத்தேரில் அமர்ந்து, மனதைத் தேராட்டியாக்கி, பிரம்மலோகபதத்தை அதாவது மேலான

பரம்பொருளின் இருப்பிடத்தை ஆன்மா அடைகிறான் என்றும், அதுவே திருவிழாவில் பொருந்தேர்பவனியில் எழுந்தருளும் இறைவனைக் கண்டு வணங்குவதால் பேரருளைப் பெறுகிறான் என்றும் ஆகமம் விளக்குகிறது.

பெருவிழாவில் வாகனபுறப்பாட்டு வரிசையில் அதாவது யானக்ரமத்தில் ஏழாம்நாளில் தேர் பவனிவரும். இது ஏழண்டத்துக்கு அப்பாலாயுள்ள இறைவனை நாம் அடைந்திடவே உன்னதநிலையில் ரதாரோஹணசேவை ஏழாம்நாளில் அமைந்துள்ளது. ஒன்பது வியூஹமூர்த்திகளின் ஸாமீப்யநிலையை உணர்த்திடவே ஒன்பதாம் நாளில் தேர்பவனி நடைபெறுகிறது என்பதை உணரமுடிகிறது.

நமது எண்ணம் ஈடேறுதலை உணர்த்துவதே "மனோரதமுத்திரை". எனப்படுவது. இதுபூஜையின்முடிவில் காட்டப்படுவது. இதன் பெயரில் ரதம் என்று உள்ளது. விழாவிலும் முடிவில் மனநிறைவை இறைக்கு மனமகிழ்ச்சியைத் தருவதாகவே தேரோட்டம். இடம்பெறுகிறது. இதனாலேயே ரதோத்ஸவம் விழாமுடிவில் அமையும். நம் உள்ளமே தேர். இறைவனின் திருவடித்தலமே அடையவேண்டிய இடம். உபநிடதங்கள் நமது உடனேயே தேராகவி எக்குகின்றன. இறைவனடியில் சேர நாம் உதவிடும் வழிபாட்டுஸாதனமான தேரேற்றசேவை ஒன்றே, பிறவிப்பயனளிப்பதாயும், இனி பிறவாதபேரின்பநிலையைத் தரவல்லதாயுமுள்ள, ஒப்பற்ற, உன்னத தரிசனமாகும். தேரில் எழுந்தருளியுள்ள இறைவனைக்கண்டு வணங்குதலும், அத்தேரை இழுத்தலும், அத்தேரைப் பின்தொடர்ந்து அன்புன் செல்லுதலும் மிகச்சிறந்த பயனைத் தரவல்லதாகக் கூறப்படுகின்றன.

## பெருந்தேர் உணர்த்தும் பிரம்மஞானம்.

நம் வேதத்தின் கடோபநிஷதம் என்னும் தலையாயபகுதி மனிதஉடலையே தேர் என்பதாகக்கூறியும் நம் மனதை ஒருநிலைப்படுத்தி இறைவனைப் பற்றுபவனே ஞானி என்பதாகக் கூறியும் விளக்குகிறது. அதற்கான சான்று இதுவே.

**ஆத்மானம் ரதினம் வித்தி சரீரம் ரதம் ஏவ து**
**புத்திம் து ஸாரதிம் வித்தி மனப் ப்ரக்ரஹ மேவ ச**
**இந்த்ரியாணி ஹயான் யாஹுர் விஷயாம் ஸ்தேஷு கோசரம்**
**ஆத்மேந்த்ரிய மனோ யுத்தம் போக்தேத் யாஹுர் மனீஷிண:**

**யஸ்த் வவிக்ஞானவான் பவத் யயுக்தேந மனஸா ஸதா**
**தஸ்யேந்த்ரியாண் யவச்யாநி துஷ்டாச்வா இவ ஸாரதே:**
**யஸ்து விக்ஞானவான் பவதி யுக்தேந மனஸா ஸதா**
**தஸ்யே ந்த்ரியாணி வச்யாநி ஸதச்வா: இவ ஸாரதே:**
**யஸ்த்வ விக்ஞானவான் பவத் யமனஸ்கஸ் ஸதா (அ)சுசி:**
**ந ஸ தத் பத மாப்னோதி ஸம்ஸாரம் சா(அ)திகச்சதி**
**(கடோபநிஷதம்)**

இதன்பொருளாவது: ஆத்மாவே! உயிரே! தன்னை நீ தேரோட்டியாக அறிந்திடு. உனது உடலே தேர் என்பதாகும். உனது புத்தியே தேரோட்டியான சாரதி, உன் மனமே கடிவாளம் என்பதை உணர்வாயாக. இங்கு ஐந்து அறிவுப்புலன்களே குதிரைகள். இவற்றின் கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம் ஆகிய விஷயங்களே இலக்ஷியப்பார்வைகள். ஆத்மா, புலன்கள், மனம் ஆகிய இவைமூன்றும் கூடியவனே போக்தா எனப்படுகிற, சுகத்தை அனுபவிக்கின்ற உயிர் எனப்படுபவனாகிறான்.

இந்நிலையில் எவன் விக்ஞானியாக இல்லாமல், தன் மனதோடு கூடியவனாக எப்போதும் உள்ளானோ, அவனுக்கு முரட்டுக்குதிரையைப் போல அவன் புலன்கள் வசப்படாதவையாகும்.

எவன் விக்ஞானியாக இருப்பவனாக தனது மனதை ஒருமுகப்படுத்தியுள்ளவனாகிறானோ, அவனுக்கு அவனுடைய புலன்கள் (தேருக்கு) நல்லகுதிரைகளைப் போல, வசப்பட்டு அடங்கி உதவுவனவாகும். இவ்விதமாய் தேர் என்பது பேரின்ப நிலையை அடைவிக்கும் கருவியாகிறது.

இதிலிருந்து தேர் உணர்த்தும் தத்துவ க்ஞானம் யாதெனில் எவன் அவிக்ஞானியாக அமனஸ்கநாக எப்போதும் மாசு உடையவனாக உள்ளானோ அவன் பிரம்மபதத்தை அடையமாட்டான். அவன் மீண்டும் உலக வாழ்க்கையை அடைவான்.

எவன் பதிபக்தி ஞானத்தை உடையவனாக, உள்ளம் உள்கி உகந்து, மனமொன்றி ஸர்வதேவமயமான, பிரணவஞானவடிவான, திருத்தேரில், தெய்வத்தைக் கண்டு தரிசிக்கின்றானோ, அவன் மறுபிறவி அற்றவனாகி, பேரருளால் பேரின்பநிலையை அடைவான், என்பதையே, இவ்வாறாக வேதோபநிடதஆகமாதி அறநூல்கள் தேர்பவனிதரிசனத்தை சிறப்புற விளக்குகின்றன.



ரதவீதியில் பெருந்தேர்கள் பவனிவருதல்

## தொண்மைமிகு தேரோட்டம்

தமிழகத்தொன்மைமிக்க ஆலயங்களில் சமயக்குரவர்கள் நால்வரின் பாடல்பெற்ற தலங்களில், பண்டுதொட்டு தமிழகத்தில் நிகழ்ந்துவரும் தேர்திருவிழாக்கள் மிகவும் புகழ்பெற்றவை. குறிப்பாக பழம்பெரும்பதியான திருவாரூர் தியாகராஜசுவாமி திருக்கோயிலின் தலைசிறந்த "ஆரூர் ஆழித்தேர்" பவனிவருவது மிகவும் சிறப்புபெற்றதாகும். இதுவே 96 அடி உயரமுள்ள பெருந்தேராகும். "திருவாரூர்த் தேரழகு" என்பது நாடறிந்த முதுமொழி.

இறைவனைத் தேரில் எழுந்தருளச்செய்து, வீதிகளில் வலம் கொண்டு அழைத்து வருவது, அடியார்கள் கண்டு பங்குற்று மகிழும் நிகழ்ச்சியாக தொன்றுதொட்டு தமிழகத்தின் பெருங்கோயில்களில் இருந்துவருகிறது. இத்தகைய தேரோட்டம் பலநூற்றாண்டுகளாக நடைபெற்றுவருவதை நமது சமயஇலக்கியங்களும், வரலாற்று ஏடுகளும், சிறப்பாகப் பேசுகின்றன. தேர் வீதிகளில் பவனிவருவது கண்கொள்ளாக் காட்சியாக இருப்பதில் வியப்பேது?

**ஊழித்தீயன்னானை ஒங்கொலிமாப் பூண்டதோர்**
**ஆழித்தேர் வித்தகனை நான் கண்டது ஆரூரே "**

என்கிறார் திருநாவுக்கரசர். திருவாரூரில் தியாகேசரின் திருத் தேர்பவனி வைபவத்தை திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் தாமே

முன்னிற்று நிகழ்த்தியிருப்பதையும், சுந்தரமூர்த்திசுவாமிகளும் இத் திருத்தேர் வைபவத்தைப் பலகாலும் கண்டு, பரவசப் பட்டிருப்பதையும். அவர்களுடைய வரலாறுகள்வயிலாக நாம் அறிகிறோம். ஏழிசையாய் இசைப்பயனாய் விளங்கும் ஈசனைப் பாடிப்பரவிய **சேந்தனார்** அவர்கள் தில்லையில் ஓடாதுநின்ற தேரை ஓடச்செய்யவே தெய்வீகத் தீந்தமிழில் திருப்பல்லாண்டுப் பதிகம் பாடி ஓடச்செய்ழீதாக வரலாறு உள்ளது.

**"திருத்தேரின் வடம் பிடித்தால் கயிலாயத்திலும் வைகுந்தத்திலும் இடம் பிடிக்கலாம்"** என்பது நமது சமயநம்பிக்கைகளில் தலையாய ஒன்று. ஊர்கூடித் தேர்இழுப்பதால். மக்களிடம் சமயப்பற்றும் நல்லொழுக்கமும் மேலோங்குவதோடு. மக்களிடம் வேற்றுமை எண்ணங்கள் மறைந்து, **"யாதும் ஊரே யாவரும் கேளீர்"** என்ற ஒற்றுமைஉணர்வும் உண்டாகிறது. இறைவன் உலாவரும் திருவீதிகளில் வேதஓசையும், வீணையின் ஓசையும், சோதிவானவர் தோத்திரஓசையுடன் கீதஓசையும் பல்இசைக்கருவிகளின் ஓசையும், செல்வவீதிச் செழுமணி ஓசையும், எல்லையின்றி விண்ணதிர எழுவது மரபு. திருவாரூரில் மேலும் கல்தேர் மற்றும் தேரூர்ந்தகல்வெட்டுகள் பஞ்சமுகவாத்யம், பாரிநாதஸ்வரம் போன்றவையும் தனிச்சிறப்புகளாணீ; விளங்குவனவாகும்.

## தேரேறி திரிபுரம் எரித்த மாதேவனின் திறம்.

தேரேறி திரிபுரம்எரித்த திரிபுராந்தகர் என்னும் சிவபெருமான் பரமபதி வேதாகமங்களில் எனப்புகழப்படும் சிவமூர்த்தியாம். ஸ்ரீருத்ரம் இந்த மாகேசமூர்த்தியைப் புகழ்கிறது. திருமுறைப்பதிகங்கள், பாடல்கள் பலவும் திரிபுராந்தகர் புகழுரைப்பனவாம். சுந்தரமூர்த்தி சுவாமிகளோ முப்புரமெரித்த அந்த ஆரூர் இறைவனைக் கூறுகையில்



**வன்னாகம் நாண் வரைவில் அங்கிகணை அரிபகழி**
**தன் ஆகம் உறவாங்கிப் புரம் எரித்த தன்மையானை**
**முன்னாக நீனையாத மூர்க்கனேன் ஆக்கை சுமந்து**
**என்னாகப் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே**

என்று போற்றிப் பரவுகிறார். ஆணவமலம் ஒழிந்த அந்த மூன்று அசுரர்களும், தம் தலைமேல் சிவலிங்கம் சுமந்து, கையிலையெம்பெருமான் திருவடிகளைப் பணிந்து போற்றினர். அடியவர்களை ஆட்கொள்ளும் எம்மான், உடனே அவர்களை தனது கணங்களாக ஏற்றுக்கொண்டார். ஸம்ஹாரம் என்பதற்கு அடக்குதல்

ஒடுக்குதல், திருத்துதல் என்பதே பொருள் ஆகும். அழித்தல் என்பது பொருளாகாது. தாரகாட்சனையும் வித்யுன்மாலியையும் தமது கோயிலில் வாயிற்காவலர்களாயும், வாரணாசுரனை தாம் ஆடுகின்ற ஆடலுக்கு மணிமுழவம் முழக்கும் இசைக்கலைஞனாகவும், ஏற்றுக்கொண்டார். இதனை தம்பிரான்தோழரான சுந்தரர் தனது திருப்புன்கூர் தேவாரத்தில் மூவர்க்கருள்செய்த வகையினைக் கூறியுள்ளார். அப்பாடல்


திரிபுராந்தகர் கதைச் சிற்பம்

மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின் திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர் என் றேவிய பின்னை
ஒருவ நீ கரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணி முழா முழக்க அருள் செய்த
தேவ தேவ நின் திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே.
(சுந்தரர்)

என்று தம் திருவாக்கால் உரைக்கின்றார். தவவலிமையின் செருக்கால் உதித்த ஆணவமும், தேவர்களின் மனதில் உதித்த ஆணவமும், ஆரூரனின் பரமேச்வரனின் அரும்பும் புன்னகையால் அழிந்தொழிந்தது. இப் புராணஅடிப்படையே தேர்த்திருவிழாவாகும். இது திரிபுராந்தகரான அப்பரமனுக்கு எடுக்கும் திருவிழாவாகும். ஈசனை தேரில் அமரச்செய்து, திருவீதிகளில் பவனிவரச்செய்வதே "நமது ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலமும் சிவன் முன் எரிந்து சாம்பலாகும்" என்ற சித்தாந்தக் கருத்தை உணர்த்தும் விழா. திருமந்திரத்தில் "பதியை சென்றனுகாப் பசுபாசம் பதியணுகில் நில்லாவே" என்கிறார் திருமூலர். மேலும் இதனைத் திருமூலநாயனார் தமது திருமந்திரத்தில்.

முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார றிவாரே — என்று கூறியுள்ளார்.

## கோயிலின் தேர்பெருமை

திருக்கொயிலில் மூலக்கோயிலே "விமானம்" எனப்படுவதாகும். இங்கு அசையாமல் ஓரிடத்தில் நிற்கும் அமைப்பைக் கருவறை என்றும், அதன் உத்தரதளத்தின்மேல் கட்டப்படுகின்ற கண்டம் (தளங்கள்) சிகரம், ஸ்தூபிகலசம் ஆகிய இம்மூன்று பகுதியைமட்டும் விமானம் என்பர்.

பரம்பொருள் நகர்ந்து சென்று பக்தர்களுக்கு அருள்செய்யும் வடிவமே பெருந்தேர் என்பதாகும். இதனை திருமந்திரம் நூலில்காணலாம். அப்பாடல்

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க் கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே (திருமூலத்தேவர்)

தேவலோகத்தில் உள்ள விராட்விச்வபிரம்ம மூர்த்தியின் வழித்தோன்றலான விச்வகர்மா, என்பவர் வாஸ்துவிற்கும், மயன் என்பவர் கட்டுமானக்கலைக்கும் தேவராக விளங்குகிறார்கள். துவஷ்டா என்பவர் உருவமளிக்கவல்ல ஓவியக்கலைத் தேவருமாவார், வேதத்தில் புருஷசூக்தம் என்னும் பகுதி "விச்வகர்மணஸ் ஸமவர்ததாதி தஸ்ய த்வஷ்டா வித்தத் ரூபமேதி" என்று இவர்களைக் குறிப்பிடுகிறது. புராணங்களில் நகரம், அரண்மனை, தேர், சிம்மாசனம் முதலிவற்றை மயன் தயாரித்து அளித்தாக அறிய முடிகிறது. திருமுறையில் திருவருட்பாநூலில்

"அயனும் மாலும் தேடித் தெடி அலைந்து போயி னார்
அந்தோ இவன் முன் செய்த தவம் யா தென்ப
மயனும் கருத மாட்டாத் தவள மாடத் துச்சியே ." (திருவருட்பா)

இதனால் தேவாசுரர்களின் சிற்பியான மயன் நிர்மாணவிதிகளைப் "பன்னிருநூற்சாரம்" என்று வெளியிட்டுள்ளார். இதில் தேரின்அமைப்பானது பரம்பொருளின் வடிவமே என்று விளக்கிப்படுகிறது. சிவபெருமான் பொன், வெள்ளி இரும்பினால் நிர்மாணிக்கப்பட்ட மூன்று புரங்களை ஆண்ட தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி ஆகியோருடன் போர்செய்திட ஸகல தேவாம்சமான "மஹாரதம்" ஒன்றை ஏறிப் பயணித்தார். இதனை 'முப்புர மெரிசெய்த அச்சிவனுறை ரதம்" என்று அருணகிரிநாதர் சிவனாரின் தேரைப்போற்றுகின்றார்.





திரிபுராந்தகர்களை சம்காரம் செய்ய பினாகபாணியாக தம் சக்தியுடன் திருத்தேரில் ஆரோகணித்துச் செல்வது.

# மஹாரத தெய்வீக மஹிமை

சிவமஹாபுராணத்தில் திரிபுராந்தகர் ஏறிய திருத்தேர் விளக்கப் படுகிறது. அத் தேருக்கு மந்தரமலையும் கேஸரிமலையும் இரு பக்க அச்சுகளாயும், சூரியர், சந்திரர் இருவரும் இருசக்கரங்கள் என்னும் இருதேர்க்கால்களாயும். ஆறு ருதுக்களான ஆறு பருவகாலங்கள் இணைப்புகளாயும், 7கீழுலகம் 7மேலுலகம் என்னும் ஈரேழு பதினான்கு உலகங்களும் தேரின் பதினான்குத் தட்டுகளாயும், உதயகிரி, அஸ்தமனகிரி என்னும் இருமலைகள், வண்ணச்சீலைகள், கொடிகுச்சிகள், பலபுனித நதிகளும், நதங்களும் நாட்டப்பெறும் கொடிகளாயும், 27 நட்சத்திரங்கள் யாவும்" அழகிய மேல்விரிப்பாகிய விதானமாயும், மோக்ஷலோகம் மேல்விரிப்பாகவும், மேகக்கூட்டங்கள் இணைத்த சட்டங்களாகவும், நாள் முதலியன எண்ணற்ற ஊன்றும், இடுக்குமரமாகவும், எட்டுதிசைகளின் மலைகளான அஷ்டபர்வதங்கள் எண்திசைத் தூண்களாகவும், விளங்கிட. எட்டுதிசை அதிபர்களின் 8பட்டணத்து 8 பட்டணத்து யானைகளான அஷ்ட திக்கஜங்கள்குழு இடையில் தாங்கிய. ஏழுகடல்கள் திரைச்சீலையா யின. 5ஞானேந்த்ரியங்கள், 5கன்மேந்த்ரியங்கள் என்னும் 10புலன்கள் யாவும், அணிகலன்களாவும், புராணம், வேதம், சாத்திரம், மனுக்கள் ஆகிய இவைகள் ஒலிக்கும் மணிகளாகவும், காற்றுதெய்வங்களான அஷ்டமருத்துக்கள் படிகளாகவும், இவ்வாறு முழுஉருப்பெற்று, ஸர்வதேவாம்சங்களும் பொருந்தியதாக விளங்கிட அமைந்த தேர் சிவனார் ஆரோஹணிக்கத் தயாராகி விட்டபின்பு நான்குவேதங்களும்

அந்த தேரின் குதிரைகளாகப் பூட்டப்பட்டன. பிரணவமந்திரத்தை பரியைச் செலுத்தஉதவும் சாட்டையாக்கி, அதனைத் தம்கையில் ஏந்தியவாராக நான்முகனாரான பிரம்மதேவர் சாரதியானார். (தேரோட்டி) கங்கைமாதாவும், தேவர்களின்தாயான அதிதிதேவி முதலிய தேவமாதர்கள் நாலாபக்கங்களிலும் சாமரம் வீசுபவர்களா யினர். நாரதரின் வீணை இசைக்கேற்றபடி ரம்பை முதலிய அப்ஸரஸ்தி ரீகள் என்ற தேவலோக நடனமாதர்கள் நடனமாடினர். தேவர்கள் சிவபெருமான் கையில் ஏந்துவதற்கு ஏற்றவில்லாக மேருமலையை உருவாக்கித் தந்தார்கள். பாம்பரசனான ஆதிசேஷன் அந்தவில்லினுடைய நாண்கயிறாக ஆனான். பையரவு துயிலும் பத்மநாபப் பெருமானே தைத்யாரியான திருமாலே சிவனது வில்லில் அம்பாக விளங்கினார். வாணீ அந்தவில்லில்கட்டிய மணியாக ஆனாள். அக்னிதேவன் அம்பின் முனைகூர்வாயாகவும், வாயுதேவன் அம்பிற்கட்டிய இறகாகவும் ஆயினர். இவ்வளவு மஹத்துவமும் பொருந்திய ஸர்வதேவாம்சமான மஹாரதத்தில் மஹாதேவன் தன்மலரடிவைத்து ஏறிச்சென்றார் என்றும், ஆயினும் பிறர்துணை ஏதுமின்றியே அனைவரின் அகந்தையையும் அழித்திட எண்ணி, தனது புன்சிரிப்பால் முப்புரங்களையுமெரித்தார் முதல்வனான முக்கண்ணரான பரமேச்வரன். இவ்வாறு பெருந்தேர் ஸகலதேவாம்சப் பெருமையுடையது. என்று அறியலாம்.



## ஸ்ரீ சூரியபகவான் ரதம் (ஆதவன் தேர்)

நமது பாரததேசத்தில் கோனார்க் என்னும் இடத்தில் மிகப்பழமைவாய்ந்த சூரியன்கோயில் கருங்கல் தேர்உருவத்தில் இருந்து, காலப்போக்கில் சிதைவுற்று உள்ளது. இது மிகவும் பிரசித்திபெற்றதாய் சிற்பக்கலைத்துறைக்கும் தேர்கலைக்கும் முதலிடம்பெற்று விளங்குவதாய் உள்ள கோயிலாகும். இதில் உள்ள கல்தேர் வடிவமும், அதன் அழகிய சக்கரமும் மிகவும் இன்றளவும் போற்றப்படுவனவாகும்.

உலகின் கண்ணாக உலகை ஒளிதந்து காக்கும் தேவராய் கண்கண்டதெய்வமாய் விளங்கும் பகலவனான, கதிரவனான, ஆதவனை தேரில் பயணிப்பவராக வேதங்களும் ஆகமங்களும் விளக்குகின்றன. இதில் காலமே ஒரேசக்கரமாய் விளங்க, பூலோகம், புவர்லோகம், சுவர்கலோகம் மஹர்லோகம், ஜனல்லோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்னும் ஏழுலகங்களான ஏழுவியாகிருதிகளே ஏழுகுதிரைகளாக விளங்க, வினதாசுதனான அருணன் சாரதியாக, ஸப்தஸ்வரங்களான ஏழு கடிவாளங்களைப் பிடித்து, தர்மம் என்ற சாட்டையை ஏந்தி பிரணவமாகிற பேரொளிமண்டலத்துடன், பரம்பொருளின் மறுஉருவமாய், சூரியதேவர், உதயகிரி முதல் அஸ்தங்கிரியைநோக்கிப் பயனிக்கிறார். மேருமலை என்னும்



கோனார்க் சூரியன்கற்கோயில்



சூரியன் ரதபவனி காட்சி

தங்கமலையின் உச்சியை வலம்வந்து, காலதெய்வமாய் காமசாக்ஷியாகி, நமக்கு அருள்கிறார் என்கிறது அறநூல்.

காசினி யிருளை நீக்குங் கதிரொளி யாகி யெங்கும்
பூசனை யுலகோர் போற்றப் புசிப்போடு சுகத்தை நல்கும்
வாசி யே ழுடைய தேர்மேல் மகாகிரி வலமாய் வந்த
தேசிகா வெனை ரட்சிப்பாய் செங்கதி ரவனே போற்றி.

சீலமாய் வாழச் சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சுந்தரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்.

ஆன்மாவைப் பாவங்களினின்று நீக்கிப் பண்படுத்துவது பண்டிகை.

இறைவன் திருவருளைப் பெறுவதற்காக மனத்தினால் எண்ணி தியானத்தினால் போற்றி, தலையால் வணங்கி வழிபடும் விழாநாள் இல்லாத மாதமே அவனியில் இல்லை. பன்னிரண்டு மாதங்கள் பிறக்கும் காலமும் புண்ணியகாலங்கள் ஆகும். சிறப்பாக உத்தராயண புண்ணியகாலமாக தைப்பொங்கல் பண்டிகையும், தக்ஷிணாயன புண்ணியகாலமாக ஆடிமாதப்பிறப்பும் சூரியவழிபாட்டிற்குரிய காலமாகும். தினமும் வானவீதியில் தேரில் பவனிவரும் கதிரவனை கண்டு வழிபடுவதால் ஆரோக்கியமான சுகவாழ்வு கிடைக்கும்.

இதிகாசத்தில் இராமாயணத்தில் இராமர் போரில் வெற்றிபெற அகத்தியர் வாயிலாக ஆதித்யரின் இருதயம் எனும் துதிமந்திரத்தால் ராமர் சூரியபகவானை திவ்யரதத்தில் இருப்பவராக எண்ணி வழிபட்டு வெற்றிபெற்றதை புராணம் கூறுகிறது. உலகை ஆண்ட சக்ரவர்த்திகளான பதினான்கு மனுக்களும் தசரதன் முதலானோர்களும் தேரேறி பத்துதிசைகளிலும் பயணித்து, உலகைக், காத்ததையும் நாம் புராணங்களால் அறிந்து, ரதயாத்ரா பெருமையை நன்கு உணரலாம்.


சூரியன் ரதபவனி காட்சி

# விநாயக ரதம்

சைவாலய பெருவிழாக்களில் தனித்தேரில் பஞ்சமூர்த்திகளில் முதல் மூர்த்தியாக விநாயகர் சிறுதேரில் எழுந்தருள்வார். அல்லது சிவன்தேரிலேயே இடம்பெறுவார். விநாயகருக்குரிய விஷேசதளங்களிலும் தனிக்கோயில்களிலும் தனிப்பெரும்தேரில் பவனிவருவார். குறிப்பாக பிள்ளையார்பட்டியில் விநாயகர்சதுர்த்திவிழா தேர்பவனி காணத்தக்கது. திருச்சங்காட்டங்குடி, திருநாரையூர், திருச்சி முதலிய விநாயகர் சிறப்புத்தலங்களில் பெருந்தேர் திருவிழாவை காணலாம்.

முன்னவனே யானை முகத்தவனே முக்கதி நலம்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே – மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின் தாள் சரண். (திருஅருட்பா)

பிள்ளையார்பட்டி தேர்பவனி

திருத்தேரில் பவனிவரும் விநாயகனை வழிபட்டால் அறுவினைகள் அகன்று அருள்கிட்டும், காரியங்களில் வெற்றி கைகூடும்.



பிள்ளையார்பட்டி தேர்பவனி

## பரமேஸ்வர ரதம்


சைவாலய சிவனார் தேர்பவனிகாட்சி

சிவாலயதிருவிழாவில் சிவனுக்கு தனியாக மஹாரதம் உரியதாகும். குறிப்பாக பஞ்சபூததலங்களில் திருவாரூர், திருச்சி, தஞ்சை, திருநெல்வேலி, சிதம்பரம், முதலிய தலங்களில் தேர்பவனியை காணலாம்.

ஸ்ரீமத் காமிகாகமம் உத்தரபாகம் 71வது ரதாதிஸ்தாபனவிதி படலத்தில் சிறப்பாக "ரதலக்ஷணம்" கூறப்படுகிறது. இதில், பத்ரரதம், உபபத்ரரதம் கூறப்பட்டுள்ளது. சிவரதம் சிவனுடையதேருக்கு சாரதி களாக ஐவரைக் குறிப்பிட்டுள்ளது. 1.ஷண்முகர், 2.நந்தீச்வரர், 3.பிரம்மா, 4.விஷ்ணு, 5. இந்திரன் இவர்களில் ஒருவர் தேரோட்டிகளாக அமைக்கத்தக்கவர் என்கிறது. மேல்தளத்தில் பத்ரத்தின் முனையில் விரும்பும் அளவால் பிரம்மாஸனத்தை செய்திடக்கூறுகிறது. பிரம்மாவிற்கு தனித்த ஆஸனமின்றியும் அமைக்கலாம் என்கிறது.


லால்குடி ஸ்ரீசப்தரிஷீஸ்வரர் திருத்தேர்


மதுரை திருத்தேர்பவனி காட்சி

கேவலம் பத்ரம் இஷ்டம் வா பத்ராக்ரேஷ் விஷ்டமானத:
ப்ரம்மாஸனம் விதேயம் வா ரஹிதம் வா ஸமாச்ரேத்
(உத்தரகாமிகம் 71ல்16)

ஸாரதிஸ் ஷண்முகோ வா ஸ்யாத் அத நந்தீச்வரோ(அ)தவா
ப்ரம்மா ரதங்கபாணிர் வா சக்ரோ வா முனிபுங்கவா:
(உ.காமிகம் 71ல்30)

## தேரில் திரிபுராந்தகர் துதி

அம்புடன் வில்லு மேந்தி
ஆங்குமேல் மழுமான் தாங்கி
அம்பிகை திரிபங்கத்தோடு
அமர்ந்திட வலத்தே தேர்மேல்
துங்கமே மண்டியிட்டுத்
துலங்கு போர்க் கோலங்கொண்ட
சங்கரா திரிபுராந்த
தகனனே போற்றி போற்றி.
(சிற்பிமரபுத்துதி).



திரிபுராரி சிவன் உறைரதம்

மயிலை கபாலீஸ்வரர்கோயில் பங்குனித் திருத்தேர் வீதிஉலாகாட்சி

# தேவீ லலிதாம்பிகா ரதம்


மாங்காடு காமாட்சி திருதேர்பவனிஉலா

ஸ்ரீலலிதாஸஹஸ்ர நாமாக்களில் ஒன்று லலிதாம்பிகையை சக்ரராஜரதாரூடா என்கிறது. ஸ்ரீசக்ரத்தின் நவாவரண தெய்வாம்சங்களை தேவதைகளை ஒன்பது அடுக்குகளில் இடமாகக் கொண்டது. தேர்களில் அடுக்குகள் கீழ்இருந்து மேல்வரை பலபர்வாக்களாக கூறப்படும். லலிதாதேவியின் தேர் ஒன்பது பர்வங்களை உடையது. இத்தேர் சக்ரராஜ ரதம் எனப்பெயருடையதாகும். இது பற்றிய விவரங்களை லலிதாஉபாக்யானம் என்னும், அகத்தியர் ஹயக்ரீவர் உரையாடலாக அமைந்துள்ள நூலின் பதினோராவது அத்யாயத்தில் கண்டு அறியலாம். இங்கு பண்டாசுரனை ஸம்ஹாரம் செய்வதற்காக சக்திகளின் அளவற்ற படையுடன் (சியாமளாவின்) மந்த்ரிணியின் ஏழுஅடுக்குள்ள கேயசக்ர ரதத்துடனும், (வாராஹியின்) தண்டினியின் ஏழுஅடுக்கு கிரிசக்ர ரதத்துடனும், தேவீபோர் புரிவது விளக்கப்படுகிறது. இந்த மூன்று வகைதெய்வத்தேர்களையும் உரிய சாரதிகளுடனும், இலக்கணங்களுடனும் கூறுகிறது. லலிதாம்பாளின் சக்ரராஜ ரதத்திற்கு 1.இராதேவி, 2.திரிபுரபைரவீ, 3.சம்ஹாரபைரவர்,


தேவீ சக்ரராஜ ரதம்

4.வட்டயோகினிவல்லபர், 5.சாரசர், 6.சாமுண்டா, என்பவர்கள் ஆறுதெய்வங்களில் ஒருவர் லலிதாம்பிகைக்கு சாரதிஆவர். இந்த தேர் பத்துயோசனை தொலைவு உயரமுள்ளது, பத்துயோசனை தொலைவு அகளமுடைய வெண்முத்தாலான ஒரேகுடையை உடையதும் ஆகும்.

மந்த்ரிண்யம்பாவின் கேயசக்ர ரதத்திற்கு தேவீ ஹஸந்திகா சாரதி ஆகிறாள். இத்தேர் ஏழுயோசனை உயமுடையதும், சாதாரண வெண்குடை உடையதும் ஆகும். இத்தேரில் ஏழுஅடுக்குகளில் சர்வதேவதைகளும், பைரவர்களும் இடம்பெறுவர். வாராஹி எனும் தண்டநாதாவின் கிரிசக்ர ரதத்திற்கு தேவீ ஸ்தம்பினீ சாரதி ஆகிறாள். விஜயா முதலிய நான்கு சக்திகள் நாற்புறமும் வெண்சாமரம் வீசுபவர்களா யிருப்பர். இத்தேர் ஆறுயோசனை தூரம் உயரமுடையதுஇ சாதாரண வெண்குடை உடையது. லலிதாம்பினைக வாாஹியின் தேர் முன்னே செல்வும் தனது தேரின் பின்னே மந்திரிணியின் தேர் உள்ளவாறு பத்துலக்ஷ்சம் அக்ஷெளஹிணி சக்திசேனையுடன் சூழப்பட்டவளாக பண்டாசுரனை வதைக்க தேரேறி போர்செய்தவளாய் மஹாராக்ஞீயாக விளங்குகிறாள்.

அத சக்ரராஜ ரதநாயிகா ச்ரிதா –
ஜ்வலி தாங்குச பணிஸமான பாசப்ருத்
கல நிக்வணத் வலய மைக்ஷவம் தனு:
தததீ ப்ரதீப்த குசுமேஷு பஞ்சகா.

(லலிதோபாக்யானம் அத்யாயம்11ல் 91)



## சுப்ரமண்யர் ரதம்

சுப்ரமண்ய சுவாமிக்கு விஷேசமாக அறுபடைவீடு எனும் முக்கியத்தலங்களிலும் மற்றைய தனிப்பெரும் கோயில்களிலும் பெருவிழாவில் தேர்பவனி நடைபெறும். குறிப்பாக திருசெந்தூர் சண்முகரதம், பழனி தங்கராதம் கண்டுகளிக்கத் தக்கனவாகும். இலங்கை முதலான வெளிநாடுகளிலும் முருகனுக்கு திருத்தேர்திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. முருகனை தேரில் தரிசிப்பதால் மகப்பேறு கிட்டும், செயலில் வெற்றி ஏற்படும் என்று கூறப்படுகிறது.



பழனியாண்டவர் தங்கத்தேர்பவனி



இலங்கை முருகன் திருத்தேர்பவனி



திருச்செந்தூர் முருகன் மாசித்தேர்திருவிழா திருக்காட்சி

# ஸ்ரீ மஹாவிஷ்ணு ரதம்

ஸ்ரீவைஷ்ணவ திவ்யதலஙங்களில் பிரம்மோற்சவத்தில் ரதோத்ஸவம் சிறப்பாக நடைபெறும். ராமர் கோயில் கிருஷ்ணர் கோயில் முதலான வற்றிலும் திருத்தேர்பவனி நடைபெறுகிறது. குறிப்பாக திருப்பதி வேங்கடாசலம், ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிப்புத்தூர், காஞ்சீபுரம் முதலான தலங்களில் எழுந்தருளும் பெருமாளின் பெருந்தேர்கள் போற்றத்தக்கவையாகும். திருப்பதியில் வைகானசஆகம முறைப்படியும், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் முதலான தலங்களில் பாஞ்சராத்ரஆகம முறைப்படியும் பிரமோற்சவம் நடைபெறுகின்றன.



காஞ்சீபுரம் வரதராஜபெருமாள் தேர்பவனிஉலா காட்சி

தசஅவதார மூர்த்தங்களாகவோ, ஐயக்கிரீவர், தாத்ரேயர் முதலான மற்றைய விஷ்ணு மூர்த்தங்களாக இருந்தாலும், நின்றகோலம், அமர்ந்தகோலம், கிடந்தகோலம், ஊர்திஏறிய வாகனாரூடகோலம் நடக்கும்நிலை யானகமூர்த்தி எதுவாயினும் திருவிழாக்களின்போது ஸ்ரீதேவீ, பூதேவீயுடன் தவறாமல் தேவியோடுகூடியவராக எழுந்தருள்வார். பெருமாளை தேரில் தரிசிப்பதால் செல்வப்பெருக்கும், சுகவாழ்வும், சௌபாக்கியமும் ஏற்படும். குறிப்பாக ராமர்கோயில்களில் ஸ்ரீராமநவமி மகோற்சவத்தில் சக்ரவர்த்தி திருமகனான கோதண்டராமர் திருத்தேரில் எழுந்தருளி அருள்புரிவார். ராமரை தேரில் தரிசிப்பதால் ஞானமும்,



திருப்பதி ஏழுமலையான் தங்கத்தேர்



ஸ்ரீரங்கம் அரங்கநாதர் திருத்தேர்

பக்தியும், அரசபதவியும் கிடைக்கும் என்று நூல்கள் கூறுகின்றன. பாரதம் முழுவதும் பரவலாக அதிகஅளவில் பெரிய தனித்த ராமர்கோ யிலகள் இன்றும் வழிபாட்டில் அருள்பாலிக்கின்றன.



கோதண்டராமர்சுவாமி கோயில் திருத்தேர், தேவக்கோட்டை

# ஸ்ரீகிருஷ்ணரின் கீதா மகாரதம்



மஹாபாரதத்தில் அர்ஜுனனிடம் கீதோபதேசம்செய்து, பெரும் போருக்கு கிருஷ்ணர் செலுத்திய தங்கரதமானது, நான்குசக்ரங்களையும், நான்கு வெண்நிறப் புரவிகளையும், அனுமனுறைக் கொடியையும், ஆறுதூண்களையும் உடைதாக அறியப்படுகிறது. இந்த ஞானரதமானது முறைப்படி தருமம், சத்தியம், அகிம்சை. சகோதரத்வம் இந்நான்கையும் நான்கு குதிரைகளாயும், அஞ்சாமை, அச்சமின்மை, கலங்காமை, துணிவுடைமை இவற்றை நான்கு சக்கரங்களாயும், தடிக்கம்பு நீதியும், கயிறு நேர்மையுமாய்க் கொண்ட சாட்டையை ஏந்திய பார்த்தசாரதியும், தைரியம் வீரம் இவை தேர்த்தட்டுகளாக, முக்குணங்கள் மேல்வி ரிப்பு விதானமாக, ஞானமே உச்சிக்கலசமாக, கடமை வீர்யம் இவை காண்டீபம் எனும் வில்லாக, பேராண்மையே அம்புராத்தூணியாகக்க கொண்டு, விளங்குவதாயும், நல்வினை தீவினைகளின் களமாக குருக்ஷேத்ரம் என்ற போர்களம்திகழ, சஞ்சலனும் பரமஞானியுமான அரஜுனனுன்கு ஞானகுருவாக ஸ்ரீகிருஷ்ணர் சாரதியாகி, தேரைச் செலுத்துகையில், மக்களின் காமம், குரோதம், லோபம், ஆணவம், பேராசை, அடங்காமை, அலட்சியம் முதலிய தீயபண்புகள் யாவும்



தேரெழுப்புகின்ற பறக்கும்புழுதிகளாக விளங்கும், அழியாத இறைபண்புகளால் உருவாக்கப்பட்ட ஞானரதமென்று மந்த்ராலய குருராஜ குருபக்தரத்னமான ஸ்ரீமான் சத்திநாதன் விளக்கியுள்ளார்.



பலசக்கரங்களைக் கொண்டு பலஅடுக்கில் அமைந்த மாபெரும் கட்டுத்தேர்

( இது வடஇந்திய தேர்கலைஞர்களின் தொழில்நுட்ப கலைஞானத்தை பறைசாற்றுவது. )

# துர்காதேவீ ரதம்

கிராமம்தோறும் கொற்றவை தேவியாக சங்க இலக்கிய காலம்தொட்டு இன்றுவரையில் துர்காதேவியின் தனித்த ஆலயங்கள் மக்கள் வழிபாட்டில் உள்ளன. எடுத்துக்காட்டாக திருவண்ணாமலை, எடுத்துனூர், கதிராமங்கலம் முதலான பலதலங்களில் தனித்த துர்க்கை ஆலயத்தில் திருவிழாக்களில் துர்க்கையின் அருளை பெருகின்றனர். சும்ப நிசும்ப அசுரர்களையும், மஹிஷாசுரனையும் மாய்த்திட சக்திசேனையுடன் தேரில் சென்று போரிட்டதை மார்கண்டேய புராணம் எடுத்துரைக்கிறது. துர்கா தேவியை தேரில்வழிபடுவதால் தரித்திரம் எனும் இல்லாமை, துயரம், பயம் எனும் அச்சம், பாவம் இவைகள் நீங்கி ஞானமும் வெற்றியும் கிட்டும் என அறநூல் கூறுகின்றன.





# காளீதேவீ ரதம்



தமிழகத்தின் மலையரசம்பட்டண மான மேல்மலையனூர் என்னும் திருத்தலபுராணம், ஒருகாலத்தில் சிவனுடையகையை விட்டுப்பிரியாத பிரம்மகபாலத்தை நீக்கிட வெகுண் டெழுந்து காளீ உதவியபோது, அவளது கோபத்தைத் தணிக்க எண்ணியதேவர்கள், பலதெய்வாம்சம் பொருந்திய மஹாரதத்தை உருவாக்கி, தேவிக்கு அளித்து மகிழ்வித்தாகத் தெரிவிக்கிறது. அதன்படியே இன்றும் ஸ்ரீஅங்காள பரமேச்வரீ பெருந்தேரில் பவனிவந்து அருள்கிறாள் என்பதையும் அறியமுடிகிறது.

இத்தேரில் சூரியன், சந்திரன், அக்னி, எரிசுடர் ஆகிய நால்வரும் நான்கு சக்கரங்களாயும், நால்வேதங்கள் வெண்புரவிகளாயும், இந்திரன், பைரவன், யமன், நிருருதி, வருணன், நந்தி, குபேரன், ஈசானன் ஆகிய எண்மரும் எண்திசைத் தூண்களாயும், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தசாஸ்திரம் ஆகிய உபவேதங்கள் சக்கரங்களை இணைக்கும் பூபாரஆதார பீடங்களாயின, அருணகிரியும் சூலகிரியும் தேரின்மேல் தட்டுகளாயின. பிரம்மசூத்திரம் சிம்மாசனமானது, சரஸ்வதியும் மகாலக்ஷ்மியும் தேவிக்கு இருபக்கத்திலும் வெண்சாமரம்



மேல்மலையனூர் காளீ மாசித் தேர்திருவிழா

வீசினர். பன்னிரு ஆதித்யர்களும். ஜோதிகளாய் ஒளிவீசினர். ஒன்பது மேகக்குழுவும் வெண்ணத்திசைச்சீலைகளாயின. 27 நட்சத்திரங்களும் மற்றய விண்மீன்களும் எட்டுதிசையின் 8 சிங்கங்களும் தேவியின் வாகன சிம்மேந்திரனும் ஆகிய 9ம் தேவியின் சிம்மாசனத்தைதாங்கின பிராம்மீ முதல் நாரசிம்ஹியுடன் கூடிய எட்டுலோக மாதாக்களும் நான்கு வெளிவாயில்களில் துவார பாலிகைகளாக விளங்கினர். ஒன்பது மஹாநாகங்களும். தேரின் உச்சியில் ஒருங்கிணைந்து குடையாக ஆயின. இத்தகு அற்புத ஆற்றல் மிக்க மஹாரதத்தில்மேல் மலையனூர் தேவீஸ்ரீ அங்காளபரமேச்வரீ ஆரோஹணம் செய்து அருளியதாகப் புராணம் தெரிவிக்கிறது. பாரதத்தில் ஒவ்வொரு கிராமங்களுக்கும் காவல்தெய்வமாக காளிதேவீ ஆங்காங்கு கோயில்கொண்டுள்ளாள். குறிப்பாக இமயம் முதல் குமரிவரை பரவலாக தொண்மையாக இருந்த வழிபாடு காளிவழிபாடு ஆகும். கிராமத்தின் வெளியே பெரும்பாலும் வடக்குநோக்கிய தனிக்கோயிலில் அல்லது பெரிய சைவாலயங்களில் சுற்றுப்புற தெய்வமாகவோ பத்ரகாளீ, சாமுண்டீ, அங்காளபரமேஸ்வரீ, பீடாஹாரீ (பிடாரீ), செல்லியம்மன், பொன்னியம்மன் போன்ற பெயர்களில் இருந்து திருவிழாக்களில் அருள்புரிகின்றாள். தமிழகத்தில் குறிப்பாக தனிப்பெரும் காளிகோயில்கள் பல இன்றும் விழாக்களைக் காண்கின்றன. இவ்விதம் மகாதேவீ காளீ திருவிழாவில் தேரேறி அருள்தருவதை நாம் கோயில்களில் காணமுடிகிறது. காளியை தேரில் வழிபடுவதால் தொல்லைகள் நீங்கி மங்கலம், ஞானம் ஏற்படும்.



வெக்காளியம்மன் தங்கத்தேர் திருக்காட்சி



ப்ரயங்கிராகாளீ சிம்மரதத்திருக்காட்சி

# மஹாசாஸ்தா ரதம்

அனைத்து கிராமங்களிலும் மாபெரும் காவல் தெய்வமாக ஹரிஹர புத்திரராக அவதரித்த ஸ்ரீ மஹாசாஸ்தா ஆலயம் அனைவராலும் கூடிவழிபடும் குலதெய்வமாக அருள்புரிகின்றார். இவரை ஆர்யன் என்றும் ஐயன் என்றும், சாஸ்தன் என்றும், பல பெயர்களில் போற்றிவணங்குவர். இவரது ஆலயத்தில் யானை, குதிரை, புலி, ஆடு, நாய், சேவல் முதலியவற்றோடு இணைந்திருந்து அருள்பவராக விளங்குகிறார். திருவிழாவில் மேற்கூரிய வாகனங்களோடு பூதவாகனத்திலும், கெஜவாகனத்திலும், திருத்தேரிலும் சாஸ்தாவை கண்டுவணங்குபவர்கள் அல்லல் நீங்கி அறம்வழுவாது வாழ்ந்து புத்திரப்பேறு, வம்சவிருத்தி அடைவார்கள் எனக்கூறப்படுகிறது.



துங்கை ஐயனாரப்பன் திருத்தேர்

## மஹா மாரியம்மன் ரதம்

கிராம தெய்வங்களில் பெரிதும் போற்றப்படுவளாக வசிப்பிடமான ஊர் எல்லையில் கோயில்கொண்டு அருள்தருபவள் தேவீ மஹாமாரீ ஆவாள். வெப்பநோய்களிலிலிருந்தும், கொடியஅசுரர்களிடமிருந்தும், பூதபிசாசங்களிடமிருந்தும் உயிர்களைக்காத்து ரக்ஷிக்கும் உன்னத கருணைக்கடலாக விளங்கும் மஹாமாரிக்கு ஆடிமாதம், தைமாதம் முதலிய இரு அயன துவக்க மாதங்களில் சிறப்பு வழிபாடுகளைச் செய்து தேர்திருவிழாவை செய்து மக்கள் அருள்பெறுகின்றனர். இவளை தேர்பவனியில் தரிசிப்பதால் வசூரிமுதலிய நோய்களிலிருந்து பாதுகாப்பையும், செல்வத்தையும் மக்கள் அடைவார்கள்.



சமயபுரம் மாரியம்மன் திருத்தேர்உலாக்காட்சி



திண்டுக்கல் கோட்டை மாரியம்மன் தங்கத்தேர்உலாக்காட்சி

## ரதம் கூறும் தத்துவம்

**ஆத்மானம் ரதினம் வித்தி சரீரம் ரதம் ஏவச**
**புத்திம் ச சாரதிம் வித்தி இந்திரியாணி ஹயானாஹு:**

இதன்பொருள் எவ்வாறு புலன்கள் புத்தியினால் கட்டுப்படுத்தப்படுகிறதோ அவ்வாறு சரீரம் என்று சொல்லக்கூடிய தேரை, ஆத்மா என்று சொல்லக்கூடிய ஜீவன் (உயிர்) என்ற தேரோட்டியானவன் புலன்கள்ஐந்துமான குதிரைகளை ஞானத்தால் அடக்கி, இறைவனை சென்று அடையுமாறு செலுத்துகிறான் என்பதை ரதம் நமக்கு உணர்த்துகிறது.

## ரதஸ்வரூப மஹிமை (தேரின் தெய்வீகப்பெருமை)

தேவாலயத்திற்கு அருகில் உள்ள அகன்ற பெரிய ராஜவீதியானது, ரதவீதி என்ற பெயரால் தேரோடும்தெரு அமைந்திருக்கும். தேரின் வடிவில் உள்ளவற்றைக்கருதும் முறையுடன் ஸ்ரீமத் அஜிதாகமம் ரதலக்ஷணத்தை 99வது படலத்தில் கூறியுள்ளது. அதாவது தேரானது ஏழுகோடி மஹாமந்திரகளின் வடிவங்களுடன் விளங்கிடும் தேரின் உறுப்புகளை மேலும்கீழுமாக கொண்டுமூடிஇருப்பதாயும், பிரம்மத்தின் இருக்கையுடனிருப்பதும், அனந்தாஸனம், யோகாஸனம், பத்மாஸனம், மந்திரஸிம்மாஸனம், புனிதமிகுதூய விமலாஸனம் அதன்நடுவே ஞானசக்தி ஆஸனம் இவற்றை நடுவே கொண்டுள்ளது. இதன் நடுவே சிவன் சோமாஸ்கந்தமூர்த்தியாகக் கொண்டு விளங்குவதும், மூலமந்திரபிராஸாதமே தங்கமலையான மேருமலைபோல் அமைந்துள்ளதும் தெய்வத்தின் திவ்யத்திருமேனியின் நடுவே நமது உடலின்நடுவே தஹராகாசத்தில் நம்இதயத்தாமரையில் உறைந்திருப்பதுபோல் தேரில் இறைவன் விளங்குகிறார். இவ்விதம் தத்துவ விளக்கத்தை விஷ்ணுவுக்குக்கூறப்பட்ட அஜிதாகமச் சான்று இதுவேயாம்.

**ஸப்தகோடி மஹாமந்த்ர மந்த்ர ராஜோப சோபித:**
**ரதாங்கம் ஏகவிஸ்தாரம் ஊர்த்வாதோ யோகஸம்புட:**
**ப்ரம்மாஸன ஸமாயுக்தோ ஹ்யனந்தாஸன ஸமன்வித:**
**யோகாஸன ஸமாயுக்தப் பத்மாஸன ஸமன்வித:**
**மந்தர ஸிம்ஹாஸநே மூர்த்திர் விமலாஸன ஸம்யுத:**
**சிச்சக்த்யாஸன ஸம்யுக்த: ஸோமாஸ்கந்தமயஸ் சிவ:**
**மந்த்ர ப்ராஸாத மேரோஸ்ச தேஹமத்யே மஹேஸ்ச்வர:**

**தஹராகார ஹ்ருதயே பூபுராகார மண்டலே**
**மேருசக்திமயே தேஹே சித்ரசக்த்யா ப்ரிஷ்க்ருத:**
**அஸ்த்ர ரஜ்ஜு ஸமாயுக்த வேத வாஜி ஸமன்வித:**
**ப்ரம்ம ஸாரதி ஸம்யுக்தோ வாத்ய தாள ஸமன்வித: (அஜிதாகமம்)**

இவ்விதமாக விமான வடிவத்தையே பயணிக்கும் வகையில் உடைய தேரானது மேருமலையைப்போலவும், (ஸ்ரீசக்ரமேரு) ஸர்வஞானக்ரியா சக்திவடிவாய் உள்ளதும், திவ்யஅஸ்த்ர மந்திரங்களையே தேர்வடமான கயிறாக கொண்டுள்ளதும், நான்குவேதங்களையே நான்கு குதிரைகளாக பெற்றுள்ளதும், பிரம்மதேவரையே ஸாரதியாக கொண்டுள்ளதும், பிரம்மதாளம் முதலிய பதினெட்டு வகையான அரியபல இசைக்கருவிகளின் இசைமுழக்கத்துடன் அருள்தந்து உய்விக்கும் இறைவன் ரதவீதியில் தேரில் பவனிவருவதுமுறை ஆகும்



## ரதோத்ஸவத்தின் நோக்கப்பயன்கள்.

மேலும் தேரோட்டவிழாவை ஆகமநூல்கள் விதிக்கின்ற பொழுதில் நோக்கப்பயன்களைக் கூறுகின்றன ஸகலபாவங்களை நீக்குவதும், அரசருக்கு வெற்றியைத் தருவதும், எல்லோரையும் பாதுகாப்பதும், தேரேற்றத்திருவிழாவாகும் என்கிறது. இவைகளை பெறச்செய்வதால் தேர்திருவிழா அவசியம் என்கிறது காரணாகமம்.

ஸர்வ பாபஹரம் புண்யம் ஸர்வ துக்க நிவாரணம்.
ஜயதம் பூபதேச் சைவ ஸர்வேஷாம் ரக்ஷணாத்மகம். (காரணாகமம்)

இவ்வாறு திருவிழாவில் சிவனை நேரில் கண்டு வணங்குவோருக்கு மறுபிறப்பில்லை என்று சிறப்புடன் கூறப்படுகின்றது,. இதற்கான ஆகம சான்று.

வருஷஸ்தம் வா ரதஸ்தம் வா சந்தனாலிப்த தாண்டவம்.
ஸகிருத் தர்சன மாத்ரேண புனர்ஜன்ம ந வித்யதே. (சைவாகமம்)

இவ்வசனப்படி தேர்த்திருவிழாவைச் செய்வோர் இவ்வுலகில் ஸகலசுகபோகங்களையும் அனுபவித்து, பிறகு முடிவில் தேவர்கள் சூழ்ந்து வந்து வரவேர்க்கப்படுபவராய் சிவனாரின் பரமபதத்தை அடைவார்கள் என்கிறது சிவாகமம். இதனைதெரிவிக்கும் சான்று,

இஹலோகே ஸுகம் ஸர்வம் ஸம்ப்ராப்யைவ ததப் பரம்.
தேவைப் பரிவ்ருதோ கச்சேத் சிவஸ்ய பரமம் பதம். (சைவாகமம்)

ஆதலால் மகோத்சவகாலத்தில் அனைவரும் தவராமல் தேர்திருவிழாவில் பங்கேற்று பரமனைப் பணிந்து தரிசித்து அருள்பெற்று உய்யவேண்டும் என்பதே அருள்நெறிமுறை. ஆகவே நாமும் தேரில் உலாவரும் சிவனாரை தரிசித்து பயன்பெறுவோமாக இங்கு இனி ரதத்தினை பற்றிய சில குறிப்புகளை காண்போம்.



# ரதோத்ஸவ ஸேவாபலன்
## (தேரில் தெய்வதரிசனப் பயன்)

சிவனாருக்கு ஒருகிராமத்தில் சிறப்பாக தேர்த்திருவிழாவை செய்வதால் அந்த ரதோத்சவத்தை செய்தவர், இவ்வுலகில் அனைத்துவிதமான சுகபோகங்களையும் சிவனருளால் பெற்று உய்வார். மேலும் அவர் மறுமையில் அவரது இருபத்தியோரு தலைமுறையினருடன் குலத்தோருடன் சிவலோகத்திலேயே பேரின்பவாழ்வில் வசிப்பார் என்கிறது ஆகமம். மேலும் இந்த தேர்த்திருவிழாவைக் கண்டுதரிசிக்கும் மக்கள், சகலவிதமான பாவங்களிலிருந்தும் விடுபடுவார்கள் என்கிறது சைவாகம பூர்வகாரணாகமச் சான்று இதுவே ஆகும்.

க்ராமாதிஷு விசேஷேண ரதயாத்ராம் சிவஸ்ய து.  
இஹ போகான் அவாப்நோதி தத் ப்ரஸாதாத் சிவஸ்ய து.  
ஏக விம்சதி குலோ பேதம் சிவ லோகே வஸேத் சிவம்.  
முச்யதே ஸர்வ பாபேப்யோ ரத ஸேவாபரோ பவேத்.



## தேர்தயாரித்தளிக்கும் திருப்பணிப்பயன்
## (ரதப்ரதிஷ்டாபலம்)

தேரைவிதிமுறைப்படி யாரொருவர் தயாரித்து தெய்வாம்சத்தை நிலைநிறுத்தி பிரதிஷ்டைசெய்து அதில் தெய்வத்திற்கு தேர்பவனியைச் செய்வாரோ அந்தமெய்யடியார் இவ்வுலகில் செல்வந்தராயும், தனிகராயும் பெறுவாழ்வு வாழ்ந்து தாம் விரும்பிய பயனை அடைவார் என்கிறது உத்தரகாமிகாகமம்.

ஏவம் ரதம் ஸமாபாத்ய யக் குர்யாத் ப்ரோக்ஷணம் நர: .
இஹைவ தனவான் ஸ்ரீமான் வாஞ்சிதம் பலம் ஆப்நுயாத்
ரதம் ஏவம் ஸுஸம்ஸ்க்ருத்ய ரதயாத்ராம் ஸமாசரேத்
(உத்தரகாமிகாகம ரதாதிஸ்தாபனவிதிபடலம் 71ல்)

ஆலயத்தேரையும் வாஹனம் முதலானவற்றையும் நன்கு பாதுகாத்தலும், திருவிழாக்காலங்களில் ஆலய அடியார்களையும் கலைஞர்களையும் அசர்ச்சகர்களையும் அவர்களின் ஆன்மீக ஸேவைகளையும் போற்றுவதும் தெய்வதரிசனம்செய்து இறையருளைப் பெற்று இன்புற்று வாழ்வதும் நமது கடமையாகும்.



## வாழ்த்து

வாழ்கவே வாழ்க! என்நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க! மல மறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்க! மெய்ஞானத்தவன்தாள்
வாழ்கவே வாழ்க! மலமிலாதான் பாதமே. (குருமூர்த்தி)

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதுஎல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே. (திருஞானசம்பந்தர்)

வான்முகில் வழாது பெய்க மவளம் சுறக்கமன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாதுயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க,
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.
(தெய்வச்சேக்கிழார்)

ஆறிரு தடந்தோள் வாழ்க, ஆறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க, செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானை தன்அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்க சீர் அடியா ரெல்லாம்.
(கச்சியப்ப சிவாசார்யர்)

மழை வழங்குக, மன்னவன் ஓங்குக,
பிழையில் பல்வளம் எங்கும் பெருகுக,
தழைக அஞ்செழுத்து ஓசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே. (கோயிற்புராணம்)

வைய நீடுக மாமழை மன்னுக.
மெய் விரும்பிய அன்பர் விளங்குக.
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக.
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.



வாழ்க சைவம்! திருச்சிற்றம்பலம்! வாழ்கசீரடியாரெல்லாம்!

உ

ஸ்ரீகுருப்யோநம:



## சென்னை-சிவத்திரு. வி. சோமசேகர சிவாசார்யார் தொகுத்து வெளிவந்துள்ள ஸமய நூல்களை ஆஸ்தீக அன்பர்கள் வாங்கிப் பயனடையவும்

---

1. விபூதி மகிமை (கையிருப்பு இல்லை)
2. உருவத்தில் இறைவன் (கையிருப்பு இல்லை)
3. நவராத்ரிதேவியர் துதித்திரட்டு (கையிருப்பு இல்லை)
4. நூதனாலய பஞ்சஸம்ஸ்காரவிளக்கம் (கையிருப்பு இல்லை)
5. ஆலயாகார அர்த்தவிவரணம் (கையிருப்பு இல்லை)
6. காக்கும் காளியின் காருண்ய மஹிமை (கையிருப்பு இல்லை)
7. சைவாகமத்தில் சிவயோகநெறி (தமிழில் 100 பக்கம்) ரூ.100/–
   (சிவயோகப் பயிற்சிசெய்யும் விதிமுறைகள், அதன் எட்டு உறுப்புக்கிரியைகள்,செய்முறைகள்,ஆகமச்சான்றுகளுடன் விளக்கும் நூல்)
8. திவ்யாபிஷேக விதி (தமிழில் 136 பக்கம்) ரூ.150/–
   (தெய்வங்களுக்கான திருமஞ்ஜன விதிமுறைகள், அபிஷேகத்தின் பொருட்கள், இலக்கணங்கள், 36 வகைகள், பயன்கள் இவற்றை ஆகம சான்றுடன் விளக்கும் நூல்.)
9. புஷ்ப்பார்ச்சன விதி (தமிழில் 124 பக்கம்) ரூ.150/–
   (இறைவழிபாட்டிற்கு ஏற்ற 200 மலர்வகைகள், காலங்களுக்கு உரியவை, மலர்களின் சேமிப்புமுறை, பயன்பாட்டுமுறை, மலர்வகைகளின் பயன்கள் இவற்றை சான்றுடன் விளக்கும் நூல்)
10. உத்ஸவபேதக் கிரியாபோதம் (தமிழில் 172 பக்கம்) ரூ.300/–
    (சைவாலய விழாவகைகளின் செயல்முறைகள். பெருவிழாவின் 24 வகைகள், விழாக்கிரியைகள், தெய்வப்புறப்பாட்டுமுறை, ஹோமபலிதான முறைகள், விழாக்கால பரிஹாரக்கிரியைகள் இவற்றை சான்றுகளுடன் விளக்கும் ஆய்வுப்புத்தகம்)

11. நக்ஷத்திர சாந்தி விதானம் (தமிழில் 300 பக்கம்) ரூ.600/–

(27 நட்சத்திரங்களின் பரிஹார சிறப்புஹோமங்கள், சாந்தி விதிமுறைகள், பிறந்தநாளில் செய்யத்தக்க வழிபாட்டுவகைகள், தானவகைகள் இவற்றை சான்றுகளுடனும், விஷயங்களை அட்டவணையில் விளக்கும் ஆய்வுப்புத்தகம்)

12. ஹோம லக்ஷண ஸங்கிரஹம் (தமிழில் 326 பக்கம்) ரூ.300/–

(இறைவேள்விகளின் இலக்கணங்கள், 36வகையில் அக்னியின் உருவப்படங்கள், யாகசாலைகள், குண்டங்கள், 16வகைஹோமங்கள், ஹோமப்பொருட்கள், ஹோமகாலத்திய பரிஹாரக்கிரியைகள் இவற்றை சான்றுடன் விளக்கும் ஆய்வுப்புத்தகம்)

13. புவனேச்வரீ பூஜாகல்பம் (தமிழில் 175 பக்கம்) ரூ.300/–

(தேவீஉபாசனாமுறை, தத்துவவிளக்கம், புவனேச்வரீபூசையின் செய்முறை, ஸ்ரீசக்ரதேவிகளின் அரியபல துதிகள், பலவகை நாமார்ச்சனைகள், அடங்கிய வீட்டுப்பூசைக்கான நூல்.)

14. சிவாகம கட்டுரைத் திரட்டு (பாகம் 13) (தமிழில் 136 பக்கம்) ரூ.200/–

(சைவாகமங்களில் ஆறுஅறிஞர்களின் ஆறுதலைப்புகளைப் பற்றிய சான்றுடன் கூடிய 6 சிறப்புக்கட்டுரைகளின் தொகுப்புத்தமிழ்நூல் வரிசையில்1)

15. சண்டீயாக மஹிமை விளக்கம் (தமிழில்) ரூ.300/–

(சண்டீதேவியின் மஹிமைகள், சண்டீயாக வகைகள், சண்டீஹோமத்திற்கான பொருட்கள், செய்முறைகள், சண்டீதுர்கையின் அரியபல துதிகள், பலவகை நாமார்ச்சனைகள் அடங்கிய தமிழ்நூல்)

16. திவ்ய ஸ்தவ கதம்பம் (பக்கம்–150) ரூ.200/–
(தமிழ்.& கிரந்தஎழுத்தில்) (தெய்வத்துதித் திரட்டு)

கிரந்தஎழுத்தில் மூலமானதுதிகளும், அவைக்கு சமஸ்கிருதம் மற்றும் தமிழ் இருமொழிகளில் பதவுரையும் கொண்டுள்ள 200 துதிகள் உள்ளநூல்.

17. காளீ பூஜா ப்ரபாவம் (பக்கம்–380) ரூ.450/–
(காளீ வழிபாட்டுப் பெருமைகள்)

காளீஉபாஸனை முறை, உருவதத்துவ விளக்கம், ஆலயபூஜை விதிமுறைகள், 1008,300,108, நாமாவளிகள், துதிகள், யந்திரபூஜைமுறைகள் அடங்கிய நூல்.

18. சுபாஷித ரத்னமாலா – நற்கூற்று மணிமாலை ரூ.400/–
(மூலமும் – உரையும் முற்றிலும் தமிழ்எழுத்தில்)
இராமாயணம், மஹாபாரதம், ஸ்மிருதிகள், புராணங்கள், காவியங்களிலிருந்து தொகுக்கப்பட்ட 1008 நீதிசாஸ்த்திர உபதேச நல்மொழிகளை கருத்துரையுடன் கொண்டுள்ளநூல்.

19. சிவாகம ஸூக்தி மஞ்ஜரீ (சிவாகம நல்மொழிப் பூங்கொத்து) ரூ.200/–
சைவாகமங்களில் அனைவரும் அறியவேண்டிய நல்மொழிகளை, தனித்தனி தலைப்புகளில் தமிழில் மூலசுலோக சான்றும் அவைக்கு தமிழில்கருத்துரையும் கொண்ட 324 தருமங்களின் தொகுப்புநூல்.

20. சைவ நிர்வசனவசனாமிருதம். (பக்கம்–114) ரூ.200/–
(சைவாகம பரிபாஷைச் சொற்பொருள் விளக்கம்) (தேவநாகரீ மட்டும்)
அரியசொற்களுக்கு பெயரின் சான்றுடன் காரணவிவரங்களைக் கூறும்நூல்.

21. சிவஸ்தோத்ர முக்தாவளீ (கிரந்தலிபி) (பக்கம்–104) ரூ.100/–
சிவத்தோத்திரங்களின் தொகுப்பு

22. ஸ்ரீநவதுர்கா (ஜபவிதி) நாகரம் & தமிழ் – ரூ.100/–

23. பிரத்யங்கிரா ஹோமக்ரமம் – (நாகரம் மற்றும் கிரந்தம் (பக்கம்–50) ரூ.100/–
கவசம், மூலமந்திரம், ஹஸ்த்ரமந்திரம், ஜபவிதி, ஹோமக்ரமம் அடங்கியது.

24. சிவசக்தி ஸ்தோத்ரமாலா. தேவநாகரி (பக்கம்–320) ரூ.200/–
க்ஷேத்திரசிவலிங்க மாஹேச்வரமூர்த்திகள் மற்றும் பரிவாரதெய்வங்களின்
துதிகளுடனும், தமிழ்உரையுடன் கூடிய சிவமஹிம்ன துதிகளுடனும் உள்ளது.

25. பத்ரகாளீ தீபபூஜையும் தேவீபாராயண துதிதிரட்டும்.
(தமிழ்) (பக்கம்–160) ரூ.150/–

26. பிரத்யங்கிரா ஸபர்யா ஸர்வஸ்வம் (நாகரலிபி)
தேவீபிரத்யங்கிரா பைரவர் முதலான தெய்வங்களின், மந்திரங்கள்,
புரச்சரணவிதிகள், யந்திரம், பூஜை, யாகம் செய்முறைகள்,
அஷ்டகர்மபிரயோக விதிகள், கவசஸஹஸ்ர நாமதுதிகள்
பிரார்த்தனைகளை உள்ளடக்கியது. (பக்கம்–560) ரூ.600/–

27. பிரத்யங்கிரா சகஸ்ரநாமாவளி–(நாகரலிபி மற்றும் கிரந்தலிபி) (பக்கம்–148) ரூ.200/–
(காளிதுதி, 108 நாமாவளிகள், பைரவிதுதி, 108 நாமாவளிகள்,
பிரத்யங்கிரா தேவியின் ஸகஸ்ரநாமாதுதிகள், 1000 நாமாவளிகள், கவசம்,
மூலமந்திர ஜபவிதிகள் அடங்கியது.)

28. கோயில்விழாக்களின் வாஹனஉலா (ஆலய உத்ஸவ வாஹன யானக்ரமம்)
ஒன்பது வகைக் கோயில்களின் தெய்வவிழாவின் வீதி உலா புறப்பாட்டு
விதிமுறைகள், ஸேவாகாலத் திருமுறைத்துதிகள், 50வாஹன
விளக்கப்படங்கள் அடங்கிய நூல்) (பக்கம்–256) ரூ.400/–

29. தேர்பவனிப் பெருமை (ரதோத்ஸவ மஹிமா) (தமிழ்) (பக்கம்–176) ரூ.300/–
சிவதுதிகள், ஆலயவிழாக்கள், தேரின் உருவவகைகள்,
தெய்வாம்சங்கள், சடங்குகள், 12 தெய்வங்களின் தேர்பவனிப் பெருமைகள்,
சேவைப்பயன்கள், இவற்றை விளக்கும் நூல்.

30. ஆகமம் ஆலயம் ஆதிசைவர் (பாகம்–2) – சைவாகம மரபுசார்ந்த
ஐயத்தெளிவுதரும் வினாவிடைகளின், தொகுப்பு நூல்.

## யந்திர செப்புத் தகடுகள்

ஆலயதேவதா ப்ரதிஷ்டாயந்திர தகடு ஒன்று கிரந்தஎழுத்தில் ரூ.1000/–
(சைவ, வைணவக் கோயிலின் தெய்வச்சிலைகளுக்கான ஆகம பிரதிஷ்டைக்கான தகட்டு யந்திரங்கள், தாமிரக்தகட்டில்அளவு இஞ்ச் 3 x 3 அல்லது 5 x 5 ல் ஆகமவிதிமுறைப்படி எழுதியவை, உரிய மந்திரவகைகளுடன் கூடியவை உரியவைக்கு மட்டுமே கிடைக்கும்.



திருவள்ளுவர்தேர்
(கருங்கல் பெருந்தேர்)

வள்ளுவர்கோட்டம்
சென்னை.



### நூலாசிரியர்

## சிவஸ்ரீ. வி. சோமசேகர சிவாசாரியார்

சென்னை, மஹரிஷி வேதாகம பாடசாலையின் முன்னாள் ஆகம பண்டிதரும், மகாபலிபுரம் அரசினர் கோயில் கட்டிடக்கலை மற்றும் சிற்பக்கலைக் கல்லூரியின் முன்னாள் ஆகமவிரிவுரையாளரும், கும்பாபிஷேகங்கள், ஆகமகருத்தரங்குகள், விசேஷயாகங்கள், பலவற்றை பலமுறை தலைமைஏற்று நிகழ்த்தியவரும், கனடாவில் இந்துக்கோயிலின் முன்னாள் தலைமை அர்ச்சகரும், பாடசாலைகளின் ஆண்டுத் தேர்வுகளில் பலமுறை பரிக்ஷாதிகாரியாக பணியாற்றியவரும், சிவாகம வித்யா பீடத்தின் ஸ்தாபகரும், சமய போதகராக இருந்து பல மாணவர்களை உருவாக்கியவரும், சைவநெறி தழைக்கத் தொண்டாற்றி வருபவரும், சென்னை சிவாசாரியார் அறக்கட்டளையின் கௌரவ ஆலோசகரும், அதன் சைவாகம கலாச்சார வித்யா கேந்திரத்தின் குருமுதல்வரும், சென்னையில் 8 ஆண்டுகள் மாதந்தோறும் 96 சிவாகம சிறப்புச் சொற்பொழிவு நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தியவரும், சமயம் சார்ந்த 27-க்கும் மேற்பட்ட விளக்க நூல்களை தொகுத்து வெளியிட்டவரும் ஆவார்.